## தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள்...



# லைப்பாயின்

# பாதுகாக்கும் நுரையினால்!

நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவறாமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது, உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.






# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான கிருமிகளிலிருந்து தினமும் உங்களைக் காப்பாற்றுகிறது

L. 230-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 இதழ் 11 | 1953 அக்டோபர் 11 | விஜய புரட்டாசி 25



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

சங்கீதம் பயில விரும்புவோருக்கு அரிய சந்தர்ப்பம்

ஸ்ரீ சௌத் இந்தியன் ஸ்கூல் ஆப் மியூஸிக்

(ஸ்தாபிதம்: 1947)

மாதுங்கா :: :: பம்பாய்-19

புதிதாக முதல் வகுப்புக்கள் விஜயதசமி தினத்தன்று ஆரம்பமாகின்றன. இப்போது நடக்கும் வகுப்புகளிலும் மாணவிகளை சேர்த்துக் கொள்ளப்படும்.

விவரங்களுக்கு

காயக H. A. S. மணி (செல்லமணி)

பயோனீர் ஹைஸ்கூல் :: லிலாங் ரோடு :: மாதுங்கா

நேரம்: காலை 7 மணி முதல் 9-30 வரை; மாலை 5 மணி முதல் 7-30 வரை



# பிரபல திருமணம்

★

தொழுப்பேடு வெங்கடேச ரெட்டியார் & கம்பெனியின் உரிமையாளரான திரு சி. வெங்கடேச ரெட்டியாரின் குமாரர் திரு சீ. வெங்கட பெருமாளுக்கும், திரு எம். பேர ரெட்டியாரின் செல்வக்குமாரி திருமதி சரஸ்வதிக்கும் செப்டம்பர் மாதம் 10-ந் தேதி தொழுப்பேடு மணமகன் இல்லத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமண தினத்தன்று மாலையில் ஸ்ரீமதி பி. எல். சரஸ்வதி தேவி சகோதரிகள் இன்னிசை விருந்தளித்தார்கள். திருமணத்துக்குப் பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் திரளாக விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும், பரிசுகளும் வந்து குவிந்தன. வாழ்க, மணமக்கள் !






ஜே. பி. மங்காராமின்

பிரசித்திபெற்ற

**பிஸ்கோத்துகள்**







- மிருதுவானது
- ருசியுள்ளது
- மொறுமொறுப்பானது

ஜே. பி. மங்காராம் & கம்பெனி, குவாலியர்

மதராஸ் ஏஜன்டுகள் : நேஷனல் ஏஜன்ஸிஸ், 1/94, ராமசாமி தெரு, மதராஸ்-1




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 11

# ஜன சமுத்திரம் பொங்கியது!

பாரெங்கும் ஆனந்த வெண்ணிலவு பொழியும் சந்திரனை வா வா என்று அழைப்பது போல் சமுத்திரம் பொங்குவது உண்டு.

ஆனால் உலகம் முழுவதும் ஒளிக் கதிர்களை வீசும் சூரியனைக் கண்டு கடல் பொங்கியதை யாரும் கண்டதில்லை; கேட்டதுமில்லை.

எனினும் இந்த அதிசயத்தைச் சென்ற வாரத்தில் சென்னை மக்கள் நேரில் கண்டு களித்தார்கள்.

ஆறு ஏழு தினங்களுக்கு முன் இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர் லால் நேரு சென்னைமா நகருக்கு விஜயம் செய்தார் அல்லவா?

அப்போது அத் தலைவரை, 'உதய ஞாயி றேப்பவே வா வா வா!' என்று அழைப்பது போல் சென்னை மகாஜன சமுத்திரம் பொங்கியது.

சென்னையின் எட்டுத் திசைகளிலிருந்தும் அலை அலையாக எழுந்த மக்கள், ஜவாஹர்லால்ஜியைத் தரிசிப்பதற்காக, அவருடைய அரிய சொற்பொழிவைக் கேட்பதற்காகக் கடற்கரைக்கு அருகில் உள்ள மாபெரும் தீவுத்திடல் மைதானத்தில் கூடினர்.

அந்தக் காட்சி, ஜல சமுத்திரத்துக்குப் போட்டியாக ஜன சமுத்திரமே திரண்டு வந்தது போல் தோன்றியது!

உதய சூரியனைக் கண்டு தாமரை மலர்வதுபோல், பாரதத்தின் ஜோதிச் சுடராக விளங்கும் நேருஜியைக் கண்டு மக்களின் அகமும் முகமும் மலர்ந்தன.

நமது அருமைத் தலைவருடைய பிரசங்கத்தின் முடிவில், அங்கு கூடியிருந்த சுமார் மூன்று லட்சம் ஜனங்களும் எழுப்பிய 'ஜெய் ஹிந்த்' கோஷம் பொங்கிய கடலின் பேரலைகளைப் போல் வான் முகட்டை மோதுவதாக இருந்தன.

ராஜாஜி மண்டபத்துக்கு எதிரே உள்ள மைதானத்திலே, பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் பத்தாயிரம் குழந்தைகள் ஒன்றுகூடிப் பாரதத் தலைவரை வரவேற்ற காட்சி யாரும் மறக்க முடியாதது.

அப்போது அக்குழந்தைகளின் ஆனந்த ஆரவாரம் நாற்றிசைகளிலும் பரவி யாழினும் இனிய எதிரொலியை எழுப்பியது.

* * * *

சமீபத்தில் தமிழ் நாடு எங்கும் பெய்த பெருமழை பூமியைக் குளிரச் செய்தது போல், நேருஜியின் பிரசங்கமாரியும் மக்களின் மனதைக் குளிரச் செய்தது.

இந்திய மக்களிடையே மாகாண வேற்றுமை, ஜாதி சமய வேற்றுமை முதலிய விபரீதங்கள் மறைந்து ஒற்றுமை நிலவ வேண்டும்.

இந்தியா வெளிநாடுகளுடன் தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும்; அரசியல், பொருளாதாரம், விஞ்ஞானம் முதலிய பல்வேறு துறைகளிலும் வெளி நாடுகளில் ஏற்பட்டு வரும் மாறுதல்களையும் இந்தியா அக்கறையுடன் கவனித்து, அவைகளுக்கு ஒப்பத் தானும் முன்னேற்றம் அடைவதற்கான வழியை வகுத்துக் கொள்ள வேண்டும்.

ஏற்கெனவே, இந்தியர்கள் நாம் உண்டு, தம் ஊர் அல்லது ஜில்லா உண்டு என்று குறுகிய நோக்கத்துடன் இருந்ததால்தான், பாரத நாடு அன்னியரின் ஆதிக்கத்துக்கு இலக்காக நேர்ந்தது.

எனவே, சரித்திரத்தின் படிப்பினையை மறந்துவிடக் கூடாது; பிற்போக்கான வேற்றுமை சக்திகள் வளருவதற்கு இடம் கொடுப்பது மறுபடியும் ஆபத்தாக முடியும் என்று ஜவாஹர்லால்ஜி எச்சரித்தார்.

மகா சமுத்திரங்களும் மாமலைகளும் இயற்கை அரண்களாக இருந்த அந்தக் காலத்திலேயே இந்தியா உள்நாட்டில் ஒற்றுமையின்மை காரணமாகவும், சிற்றரசர்களின் போட்டா போட்டியினாலும் சுதந்திரத்தை இழக்க நேர்ந்தது.

# கறுப்புக் கொடியின் ஓட்டம்!



சென்னையில் நேருஜியின் விஜயத்தின் போது கண்ட காட்சி.

அப்படியிருக்க, இன்றோ ஒரே நாளில் உலகத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்குச் செல்லும் சாதனங்கள் மலிந்துள்ளன. ஒரே நிமிஷத்தில் நகரங்களை அழிக்கும் நாசக் கருவிகள் உற்பத்தியாகி யுள்ளன.

எனவே, இந்த நாளில் இந்திய மக்கள் ஒரே ஜன சமூகமாக ஒற்றுமைப்பட்டிருக்கவேண்டியது அவசியத்திலும் அவசியம் அல்லவா!

குமரி முதல் ஹிமயம் வரையில் உள்ள நகரங்கள், ஜில்லாக்கள், மாகாணங்கள் முதலியன யாவும் ஒவ்வோர் இந்தியருக்கும் சொந்தமானவை என்பதை நேருஜி சுட்டிக் காட்டினார்.

இந்தியர் வெளி நாடுகளுக்குச் சென்றால், அவர்களை அங்கு இந்தியர்கள் என்றே குறிப்பிடுகிறார்கள்; தமிழர் என்றோ, ஆந்திரர் என்றோ, வங்காளி என்றோ உலக மக்கள் பிரித்துக் கூறுவதில்லை.—இந்த உண்மையை நேருஜி தமது பிரசங்கங்களில் வலியுறுத்திக் கூறினார்.

இப்போது தமிழ்நாட்டினரின் அனுதாபத்துக்குப் பாத்திரமாகியுள்ள கைத்தறி நெசவுத் தொழிலாளர்களை ஜவாஹர்லால்ஜி மறந்துவிடவில்லை.

சென்னை ராஜ்யக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தினர் நேருஜியை வரவேற்று உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள்.

அவர்களுக்குப் பதில் அளித்த இந்தியாவின் பிரதம மந்திரி, கைத்தறி நெசவு இந்தியாவின் மாபெரும் கைத்தொழில் ஆனதால், நெசவாளர்களின் கஷ்டங்களுக்குச் சர்க்கார் பரிகாரம் தேடுவார்கள் என்று உறுதி கூறினார்.

மில் துணிகளுக்கு விதிக்கப்பட்டுள்ள தீர்வையிலிருந்து கிடைக்கக்கூடிய தொகையை, கைத்தறி நெசவுத் தொழில் அபிவிருத்திக்குச் சர்க்கார் செலவு செய்வார்கள் என்றும் அறிவித்தார்.

கைத்தறி நெசவுத் தொழிலாளர் பிரதிநிதிகள் நேருஜியிடம் சமர்ப்பித்த மகஜரில் சில யோசனைகள் கூறி யிருந்தனர்.

மில் துணிகளுக்கு விதிக்கப்பட்டுள்ள தீர்வை மூலம் கிடைக்கக் கூடிய தொகை, சர்க்கார் மான்யம் எல்லாவற்றையும் சேர்த்து வருஷத்துக்கு நாலு கோடி ரூபாய் விகிதம் தொடர்ந்து நாலு வருஷங்கள் வரையில் உதவி யளித்தால், கைத்தறி நெசவுத் தொழிலுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்து நீங்கி விடும். கரை வேஷ்டிகள், கலர்ப் புடவைகள் இவற்றை மில்கள் உற்பத்தி செய்யக் கூடாது என்று விதிப்பது சாத்தியமில்லையாயின், முப்பத்தெட்டிலிருந்து ஐம்பது அங்குலம் வரையில் அகலம் உள்ள சகல துணிகளையும் உற்பத்தி செய்யும் உரிமை கைத்தறி நெசவாளர்களுக்கு மாத்திரமே அளிக்கப்பட வேண்டும் என்று மேற்படி மகஜரில் குறிப்பிட் டிருந்தனர்.

அந்த யோசனைகளை இந்திய வர்த்தக, கைத்தொழில் மந்திரிக்கு அறிவித்து ஆவன செய்வதாக நேருஜி வாக்களித்தார்.

கைத்தறி நெசவாளர்களின் கஷ்டங்களைத் தீர்க்க அவை போன்ற கணிசமான முறைகளைக் கைக் கொண்டால்தான், சென்னை ராஜ்யத்துக்கு மிகுந்த கலக்கத்தை உண்டுபண்ணி யிருக்கும் இந்த மாபெரும் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்ப்பது சாத்தியம் ஆகும். இம் முறை நம் மாபெருந் தலைவர் ஜவாஹர்லால்ஜி தமிழ்நாட்டின் முக்கியமான மூன்று நகரங்களுக்கும் விஜயம் செய்ததின் பயனாக, கைத்தறித் தொழிலாளருக்குக் கதிமோட்சம் கிட்டும் என்று எதிர்பார்ப்போமாக.

# உருவத்தில் சிறிது, உபத்திரவத்தில் பெரிது!

உருவத்தில் மிகச் சிறியது ; ஆனால் உபத்திரவத்தில் மிகப் பெரியது !

இந்தியாவில் இன்னும்கூட அன்னியர்களுக்குச் சொந்தமாக உள்ள சிறிய பிரதேசங்களைப் பற்றி அவ்விதம் கூறுவது முற்றிலும் பொருந்தும்.

இந்தியாவில் உள்ள மேற்படி பிரதேசங்களை இந்தியாவின் முகத்தில் உள்ள பருக்களுக்கு உவமையாக ஒரு சமயம் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறினார். அவர் அவ்வாறு கூறியது முற்றிலும் சரி என்பதை இப் பக்கத்தில் வெளியாகியுள்ள இந்தியாவின் படத்திலிருந்து சகலரும் நன்கு தெரிந்து கொள்ளலாம்.

நாலு ஐந்து தினங்களுக்கு முன் ஜவாஹர்லால் நேரு பாலக்காட்டுக்கு விஜயம் செய்த போது அவரை வரவேற்று அங்கு பிரம்மாண்டமான பொதுக் கூட்டம் நடந்தது. அப்போது பேசிய ஜவாஹர்லால்ஜி அந்தப் பிரதேசங்களைப் பற்றி மறுபடியும் குறிப்பிட்டார்.

மலையாளப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டியினர் நேருஜியிடம் சமர்ப்பித்த மகஜரில் பிரஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான மாஹிப் பிரதேசம் தங்களுக்கு எவ்வளவு தொல்லைகளை விளைவித்து வருகிறது என்பதை விவரித்துக் கூறியிருந்தனர்.

மாஹி வடக்கு மலையாளத்தை அடுத்துள்ள கடற்கரையில் இருக்கும் கடுகளவுப் பிரதேசம் ஆகும். அதன் மொத்த விஸ்தீரணம் இருபத்தி மூன்று சதுரமைல்கள்தான் ; மேற்படி பிரதேசத்தில் பத்தொன்பதாயிரம் ஜனங்கள் வசிக்கிறார்கள். அவ்வளவு சிறிய பிரதேசமாக இருந்தும், அது மலையாளத்தின் நல்வாழ்வுக்கே பெரும் இடையூறாக அமைந்திருக்கிறது.

அன்னியர்களுக்குச் சொந்தமான மற்றப் பிரதேசங்களைப் போல் மாஹியும் குடிகாரர்களுக்குப் புகலிடமாக இருந்து வருகிறது ; கள்ளத்தனமான வியாபாரத்துக்குக் கேந்திர ஸ்தானமாக விளங்கி வருகிறது என்று அவர்கள் தங்களுடைய மகஜரில் குறிப்பிட்டிருந்தனர்.

அதற்குப் பதில் அளித்த நேருஜி மேற்படி பிரதேசங்களிலிருந்து அன்னியர்களின் ஆதிக்கம் ஒழிய வேண்டும் என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றி மறுபடியும் வற்புறுத்தினார். அப்பிரச்னையைச் சாத்தியமான வரையில் சமாதானமாகவே தீர்க்க முயற்சிக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். அவ்விதமின்றி, அதைத் தீர்க்க அவசரப்பட்டுக் கொண்டு காடு முரடான குறுக்கு வழியில் இறங்குவோமாயின், குறுக்குப் பாதையே சுற்று வழியாக மாறிவிடக் கூடும் என்று எச்சரித்தார்.




எனவே, மாஹி போன்ற பிரதேசங்களில் அதிகாரிகள் செய்து வரும் அட்டகாசங்களைக் கண்டு இந்திய மக்கள் கலங்க வேண்டியதில்லை. பரந்த பாரத பூமி விடுதலை பெறும்படி செய்த காங்கிரஸ் தலைவர்களுக்கு, இன்னும் அன்னியரின் ஆதிக்கத்தில் உள்ள மாஹி போன்ற சுண்டைக்காய்ப் பிரமாணமுள்ள பிரதேசங்களை இந்தியாவுடன் ஐக்கியம் அடையும்படி செய்வது பெரியகாரியம் அல்ல.

# உழைப்பாளிகளுக்குப் பாராட்டு

பாரத தேசத்தில் உள்ள யாவரும் பழுத்த ஞானிகளாக இருப்பதைக் காட்டிலும் பீமசேனர்களாக இருப்பதையே நான் விரும்புகிறேன் என்றார் ஸ்வாமி விவேகானந்தர். சிறந்த அறிவாளிகளைக் காட்டிலும் உடலுறுதியுள்ள உழைப்பாளிகளே ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்கு இன்றியமையாதவர்கள் என்பது மகா புருஷரான விவேகானந்தரின் சித்தாந்தம்.

சென்னையில் தேசிய மாணவர் படையினர் கூட்டத்தில் ஜவாஹர்லால்ஜி பேசியபோது இதே அபிப்பிராயத்தை வற்புறுத்தினார். உலகம் உய்வது உழைப்பினால் தான் என்ற நிரந்தரமான உண்மையை எடுத்துக் கூறினார். மனிதருக்குப் பிரயோஜனகரமான சாதனங்கள் தேக உழைப்பினால்தான் சிருஷ்டிக்கப்படுகின்றன என்பதைத் தெளிவான உதாரணங்களுடன் விளக்கினார்.

டில்லியிலே கடும் கோடையில் தேசிய மாணவர் படையினர் இருபது மைல் நீளம் உள்ள கால்வாயை வெட்டிய அதிசயத்தை நேருஜி மகிழ்ச்சி பொங்க விவரித்துக் கூறினார்.

சென்னைத் தேசிய மாணவர் படையினரும் டில்லிப் படையினருக்குத் தாங்கள் சளைத்தவர்கள் அல்ல என்பதை நேருஜிக்குக் காட்டினர். ஓம்ப்பாக்கம் ஹால்ஸ் ரோடில் தேசிய மாணவர் படையினர் நிர்மாணித்துள்ள மண் வீடுகளை நேருஜி திறந்துவைத்தபோது, மேற்படி மாணவர்களின் உடலுழைப்பைப் பெரிதும் பாராட்டினார். ஏழைகளான சேரி வாசிகளுக்காகவே அவ்விதம் ஐம்பது வீடுகள் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. உபயோகமான மேற்படி ஆக்க வேலையில் ஈடுபட்டு வெற்றி பெற்ற தேசியப் படை மாணவர்களுக்கு அப்போது பரிசுகளும் வழங்கப் பட்டன.

அந்தச் சமயம் நேருஜி பேசுகையில், பாரத நாடெங்கும் தேசிய மாணவர் படையினர் பெருகும் பட்சத்தில், பொதுஜன க்ஷேமார்த்தமான எத்தனையோ அரிய பெரிய காரியங்களைச் சாதிக்கலாம் என்று குறிப்பிட்டார்.

ஒரு சில மாணவர்களின் உழைப்பினால் இம்பது வீடுகள் உற்பத்தியாகி யிருக்கின்றன. அப்படியிருக்க இந்தியா எங்கும் உள்ள ஆயிரம், பதினாயிரம், லட்சக் கணக்கான மாணவர்களால் எத்தனை ஆயிரக் கணக்கான வீடுகளை நிர்மாணிக்க முடியும்! வருங்காலத்தில் மாணவர்களின் உழைப்பினாலும் மற்றவர்களுடைய உழைப்பினாலும் இன்னும் எத்தனையோ அற்புதமான காரியங்கள் நிறைவேறும் என்பதற்குச் சென்னைத் தேசிய மாணவர் படையினரின் சிறந்த கைங்கரியம் முன்னு தாரணமாக அமைந்திருக்கின்றது.

# மற்ளொரு மேதையின் மறைவு

இந்தியா சுதந்திரம் பெறும் வரையில் இங்குள்ள உயர்ந்த உத்தியோகங்கள் யாவும் வெள்ளையர்களின் ஏகபோக உரிமையாக இருந்தன அல்லவா! அதற்ிணங்க, சென்னை ஹைகோர்ட்டில் உள்ள பதினாறு பதினைந்து நீதிபதிகளில் பதினொரு பேர்கள் வெள்ளையர்களாக இருந்தனர்.

அவ்வாறு உயர்ந்த பீடத்தில் வீற்றிருந்த அவர்கள் தங்களுடைய முன்னிலையில் வழக்குகளை நடத்தும் வக்கீல்களை மிகவும் அலட்சியமாகக் கருதுவது உண்டு.

ஒரு சமயம் சென்னையில் உள்ள பிரபல வக்கீல் ஒரு பெரிய வழக்கை பொட்டி வெள்ளையரான ஹைகோர்ட் நீதிபதியின் முன்னிலையில் வாதித்துக் கொண்டிருந்தார். அவ்வழக்குச் சம்பந்தமான நுட்பமான விவரங்களைப் பொறுமையுடன் கவனித்துக் கேட்க வேண்டிய நீதிபதி பொறுமையைக் காற்றுவாக்கில் விட்டு விட்டார்.

"தோற்றுப் போகும் ஒரு வழக்கை பொட்டி ஏன் இப்படித் தொண்டைத் தண்ணீர் வறண்டு போகக் கத்துகிறீர்கள்!" என்று வக்கீலைப் பார்த்துக் கடிந்து கொண்டார்.

அந்தப் பிரபல வக்கீல் பரம ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். தம்முடைய மேதையினாலும் சலியா உழைப்பினாலும் வாதத் திறமையினாலும் வக்கீல் வேலைக்கு வந்து சீரும் சிறப்பும் செல்வப் பெருக்கும் அடைந்தவர்.

"நீதிபதி அவர்களே! தாங்கள் கூறுவது முற்றிலும் தவறு. சென்ற முப்பது வருஷங்களுக்கு மேலாகச் சிக்கலான எத்தனையோ பெரிய வழக்குகளில் மகத்தான வெற்றி பெற்றிருக்

## பூசாரி வரம் கொடுக்கவில்லை!




மேட்டூர் அணைத் தேக்கத்திலே கடவுளின் கருணையால் தண்ணீர் நிரம்பியிருந்தும், இன்ஜினியரிங் இலாகாவின் அஜாக்கிரதையினால் தஞ்சாவூர் ஜில்லா வயல்கள் தண்ணீர் இல்லாமல் வெடிக்கின்றன.

கிறேன். இந்தியாவில் உள்ள மிகச் சிறந்த வக்கீல்களில் ஒருவன் என்ற புகழையும் நான் அடைந்திருக்கிறேன். ஆனால், ஒரு விதத்தில் என்னைத் துரதிர்ஷ்டசாலி என்றே சொல்ல வேண்டும். உங்களைப் போன்ற பொறுமை யற்ற, அவசர புத்தி படைத்த ஒரு நீதிபதியின் முன்னிலையில் வழக்கை வாதிக்கும்படியான நிர்ப்பந்தம் இன்றைக்கு எனக்கு ஏற்பட்டிருக்கிறது அல்லவா !''

இவ்விதம் அந்தப் பிரபல வழக்கறிஞர் கூறியிருந்தால்கூட அது நியாயமான, உண்மையான, பொருத்தமான பதிலாக இருந்திருக்கும்.

ஆனால் அந்த அறிஞர் அவ்விதம் கூறவில்லை. அதே அர்த்தம் தொனிக்கும்படி மரியாதையாகவும் சுருக்கமாகவும் பொறுமையுடனும் ஒரே வார்த்தையில் பதில் கூறி விட்டார்.

''நீதிபதி அவர்களே! என் செய்வது! என்னுடைய துர்ப்பாக்கியம், சென்ற முப்பது வருஷங்களுக்கு மேலாகத் தோற்றுப் போகும் வழக்குகளுக்காகவே கத்துவது எனக்கு வழக்கமாகி விட்டது!'' என்று பளிச்சென்று பதில் அளித்தார்.

இதைக் கேட்டதும் நீதிபதியின் முகம் சுருங்கியது. அவர் பதட்டத்தினால் தாம் செய்த பெரும் தவறை உணர்ந்தார்.

சென்ற வாரம் தமது எழுபதாவது வயதில் இப்பூவுலகிலிருந்து மறைந்த சட்ட மேதை ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரின் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சிறு சம்பவம் தான் அது.

ஏழ்மை காரணமாக இலவச ஊதியம் பெற்றுத் தமது படிப்பைப் பூர்த்தி செய்த ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் 1907-ம் ஆண்டில் வக்கீல் தொழிலை ஏற்றார். அதிலிருந்து பெயரும் புகழும் பாக்கியமும் அவரைத் தேடி வந்து அடைந்தன. சென்ற நாற்பது வருஷங்களுக்கு மேலாகச் சட்ட வானில் அவரது ஜோதி சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

தாம் இளமையில் கல்வி கற்பதற்குப் பட்ட கஷ்டத்தை ஸ்ரீ அல்லாடி இறுதி வரையில் மறக்கவேயில்லை. ஏழை மாணவர்களுக்கும், கல்வி ஸ்தாபனங்களுக்கும், மற்றும் பல தர்ம ஸ்தாபனங்களுக்கும் அவர் அள்ளி அள்ளி நன்கொடைகள் வழங்கினார்.

பதினேழு ஆண்டுகள் வரையில் அவர் சென்னை அட்வோகேட் ஜெனரலாக இருந்த போது, அவரது கீர்த்தி மேலும் மேலும் உயர்ந்தது.

அப்போது அவர் பொது ஜன நன்மைக்கான பல சட்டங்களை உருவாக்கும் விஷயத்தில் சென்னை சர்க்காருக்குப் பேருதவியாக இருந்தார்.

தற்போது இந்தியா சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதியாக இருக்கும் ஸ்ரீ எம். பதஞ்சலி சாஸ்திரி, சென்னை ஹைகோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கடராம ஐயர், காலஞ்சென்ற ஹைகோர்ட் நீதிபதி ஸ்ரீ வி. கோவிந்தராஜாச்சாரி முதலியோர் ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரிடம் ஜூனியராக இருந்தவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

சுதந்திர இந்தியாவின் அரசியலைத் தயாரிக்கும் விஷயத்தில் அவர் எடுத்துக் கொண்ட விசேஷப் பங்கு அவரது வாழ்க்கைக்கே சிகரமாக அமைந்தது. அதாவது சுதந்திர இந்தியாவின் அரசியல் சாஸனத்தை உருவாக்கிய சிற்பிகளில் ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் முக்கியமானவர் என்று கூறுவது மிகையாகாது.

அத்தகைய மேதையின் மறைவு பாரத நாட்டுக்கே ஈடு செய்ய முடியாத பெரும் நஷ்டம் என்று சொல்லவும் வேண்டுமா !

ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரின் குமாரர்களுக்கும் குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# "ஸண்டே டைம்ஸ்" வெள்ளி விழா

இந்தியாவில் உள்ள சிறந்த பத்திரிகைகளில் ஒன்று எனக் கருதப்படும் சென்னை ஆங்கில வாரப் பத்திரிகை "ஸண்டே டைம்ஸ்", கால் நூற்றாண்டை வெற்றிகரமாகக் கடந்து பத்திரிகை உலகில் தனது புகழை நிலை நிறுத்திக் கொண்டிருப்பது போற்றத் தக்கது.

"ஸண்டே டைம்ஸ்" பத்திரிகையின் ஸ்தாபகரான ஸ்ரீ எம். எஸ். காமத் அன்னி பெசண்டு அம்மையாரின் சீடர்களில் ஒருவர். இந்தியாவின் சுதந்திரத்துக்காக அந்த அம்மையாருடன் தேசப் பணியில் ஈடுபட்டவர்.

1918-ம் ஆண்டிலே மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களைத் தேச பக்தர்கள் கண்டித்து எதிர்த்தனர். ஆனால் அவற்றைப் பெசண்டு அம்மையார் அங்கீகரித்தது தீவிர தேச பக்தர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. அதன் காரணமாகப் பெசண்டு அம்மையாரின் கட்சியிலிருந்து நூற்றுக் கணக்கான தேச பக்தர்கள் விலகி அரசியல் அஞ்ஞாத வாழ்க்கையை மேற்கொண்டனர். அவ்வாறு விலகியவர்களில் ஒருவரான ஸ்ரீ காமத் 1928-ம் ஆண்டில் "ஸண்டே டைம்ஸ்" பத்திரிகையை ஆரம்பித்து, அதன் மூலம் தேசத்தொண்டு புரியலானார்.

"ஸண்டே டைம்ஸ்" என்றும் காங்கிரஸ் கொள்கையைக் கடைப்பிடித்தே வந்திருக்கிறது. எனவே, பாரத நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் பங்கு எடுத்துக் கொண்ட பெருமை மேற்படி பத்திரிகைக்கு உண்டு.

ஸ்ரீ காமத் அவர்கள் காலமான பிற்பாடும், கொள்கை மாறுதல் எதுவும் இன்றி அப்பத்திரிகையைச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

"ஸண்டே டைம்ஸ்" பிரதி வாரமும் ஏராளமான ஹாஸ்யத் துணுக்குகள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், சினிமாக் குறிப்புகள், விநோதச் செய்திகள் முதலியவற்றை அள்ளி வீசி வாசகர்களுக்குச் சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகத் தெவிட்டாத விருந்து அளித்து வந்துளது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், அரவிந்த முனிவர், ரமண மகரிஷி, சிவானந்த சுவாமிகள் போன்ற மகான்களின் மணி வாசகங்களும் அவர்களைப் பற்றிய அரிய கட்டுரைகளும் இந்தியாவிலேயே மற்ற எந்தப் பத்திரிகையையும் காட்டிலும் "ஸண்டே டைம்ஸ்"ல்தான் அதிகமாக வெளியாகி வருகின்றன.

இருபத்தைந்து ஆண்டுகளைக் கடந்து வெள்ளி விழாக் கொண்டாடும் "ஸண்டே டைம்ஸ்" பத்திரிகைக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 45

## "விடை கொடுங்கள்!"

பெரிய பழுவேட்டரையரின் கோப வெறி நந்தினிக்கு எந்த விதமான வியப்பையும் உண்டாக்கியதாகத் தெரியவில்லை. மூன்று ஆண்டு காலமாக அந்த மகா வீரரான முதுகிழவரை அவள் கையில் பிடித்த கயிற்றின் நுனியில் ஆடும் பாவையைப்போல் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தாள். முதன் முதலாக, இன்றைக்கு அந்தக் கயிறு அறுந்து விட்டது. ஆட்டி வைத்தபடி ஆடிக் கொண்டிருந்த பாவை உயிரும் சுய அறிவும் பெற்று விட்டது. இதை நந்தினி எதிர்பார்த்தவளாகவே தோன்றியது. இனி அந்தப் பாவையினால் அவளுக்கு ஆக வேண்டிய காரியமும் ஒன்றுமில்லை.

சிறிதும் பதட்டம் காட்டாமல் நந்தினி எழுந்து பெரிய பழுவேட்டரையரின் முன்னால் நமஸ்கரித்தாள். உணர்ச்சி மிகுதியினால் தழுதழுத்திருந்த குரலில் அவள் கூறினாள்:—

"சுவாமி! என்னுடைய வார்த்தைகள் தங்களுக்குத் தேனையும் தேவாமிருதத்தையும் விட இனிப்பதாகப் பல முறை சொல்லியிருக்கிறீர்கள். ஆனால் இன்றைக்கு நான் கொடுத்த கஞ்சியைப் போலவே என் வார்த்தைகளும் தங்களுக்கு நஞ்சினும் கசப்பாயிருக்கும். ஆயினும், கருணை கூர்ந்து தங்களிடம் நான் இறுதி விடைபெறுவதற்கு முன்னால் சில வார்த்தைகள் சொல்ல அநுமதி கொடுங்கள். அருமைக் கண்மணி என்றும், ஆசைக் காதலி என்றும் என்னை அழைத்த வாயினால் இன்று பாதகி என்றும், ராட்சஸி என்றும் அழைத்தீர்கள். நான் பாதகிதான்; ராட்சஸிதான்! மூன்று வருஷமாகத் தங்களை வஞ்சித்து ஏமாற்றி வந்தேன். வனாந்தரத்தில் அநாதையாக நின்ற என்னை அழைத்து வந்து அரண்மனையில் வைத்தீர்கள். பேரரசிகளும் இளவரசிகளும் எனக்கு மரியாதை செய்யப் பண்ணினீர்கள். தங்கள் உயிருக்குயிரான சின்னப் பழுவேட்டரையரிடம் விரோதித்துக் கொள்ளவும் துணிந்தீர்கள். நாட்டு மக்களும் நகர மக்களும் கூறிய பழிச் சொற்களும் பரிகாஸப் பேச்சுக்களும் தாங்கள் என்னிடம் கொண்டிருந்த அபிமானத்தைப் பாதிக்க முடியவில்லை. இப்படியெல்லாம் என்னிடம் நம்பிக்கை வைத்து இணையில்லாச் சிறப்புக்கள் அளித்த தங்களை நான் வஞ்சித்து வந்தேன்; அது உண்மைதான். என்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே தங்கள் அரண்மனையில் வசித்து வந்தேன். தங்களுக்குத் தெரியாமல் பல காரியங்களைச் செய்து வந்தேன். சதிகாரர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தேன். கந்தமாறன்—பார்த்திபேந்திரன் போன்ற வாலிபர்களின் மதியை மயக்கி அவர்களை என் காரியத்துக்கு உபயோகப் படுத்திக்

கொண்டேன். ஆனால், ஐயா, ஒரே ஒரு காரியத்தில் மட்டும் தங்களை நான் வஞ்சிக்க வில்லை. தங்களை உலகமறிய மணந்த நாளிலிருந்து தங்களையே என் பதியாகக் கொண்டிருந்தேன். தலைமுறை தலைமுறையாக மகாவீரர்களை அளித்து வந்த தங்கள் பழம் பெரும் குலத்துக்கு என்னுடைய ஒழுக்கத் தவறினால் சிறிதும் களங்கம் ஏற்படவில்லை. இனியும் நான் உயிரோடிருந்தால் அத்தகைய களங்கம் தங்களுக்கு ஒரு நாளும் ஏற்படாது......''

''நந்தினி! இது என்ன வார்த்தை சொல்லுகிறாய்? என் குலத்துக்கு இனி ஏற்படக்கூடிய களங்கம் வேறு என்ன இருக்கிறது? ஐயோ! என் கையினால்... இந்த என் கையினால்...... அடி பாவி! வாள் ஒன்று வைத்திருந்தாயே? அது எங்கே? அதனால் என் கையை நீயே வெட்டி விடு! எனக்கு நீ செய்யக் கூடிய உதவி அது ஒன்று தான்!...... இல்லை, இல்லை! வேண்டாம்! இந்தக் கைக்கு இன்னும் ஒரு வேலை இருக்கிறது; மிக முக்கியமான வேலை இருக்கிறது. நான் கூறியதை உண்மை என்று நினைத்து அப்படி ஏதாவது செய்து விடாதே!......''

''சுவாமி! அப்படி யொன்றும் நான் செய்ய மாட்டேன். எத்தனையோ கால மாக நான் பழி முடிக்க எண்ணி இருந் தவரின் பேரிலேயே அந்த வாளை என்னால் உபயோகிக்க முடியவில்லை. சமயம் நழுவிப் போய் விடுமோ என்று நான் பயந்து மதி மருண்டிருந்த நேரத்தில் தாங்கள் என் உதவிக்கு வந்தீர்கள்......''

''அடி பாதகி! உன் உதவிக்கா நான் வந்தேன்? என்ன வார்த்தை சொல்லுகிறாய்? சண்டாளி! பெண் உருக் கொண்ட பேயே! இம்மாதிரி நேரும் என்று தெரிந்திருந்தால் நான் அங்கு வந்திருக்கவே மாட்டேன்! தெய்வமே! கொள்ளிடத்து வெள்ளத்திலே நான் முழுகித் தத்தளித்த போதே அந்தப் பாவி யமன் என்னைக் கொண்டு போயிருக்கக் கூடாதா?''

''சுவாமி! தாங்கள் என் உதவிக்கு வரவில்லை. என் காரியத்தில் தங்களை உதவி செய்யும்படி நான் கோரவும் இல்லை. தாங்கள் சோழ மன்னர் குலத் துக்கு உண்மையாக நடக்கவும், சோழ குலத்தின் சேவையில் உயிரைக் கொடுக் கவும் பரம்பரையாக உறுதி பூண்ட குலத்தில் வந்தவர். நானோ சோழ குலத்தின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள் வதற்காக வந்தவள். ஆகையாலேயே தங்களிடம் என் உண்மை நோக்கத்தை நான் தெரிவிக்க வில்லை. சில சமயம் நான் அவ்விதம் தங்கள் மூலம் என் காரி யத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமா என்று எண்ணியதுண்டு. யோசித்துப் பாருங்கள்! தாங்கள் இன்று 'ராட்சஸி' என்றும், 'பெண் உருக்கொண்ட பேய்' என்றும் அழைக்கும் இந்தப் பேதையின் முக சௌந்தரியத்தில் கண்ணையும் கருத் தையும் கொடுத்து அமிதமாக மதுபானம் செய்தவரைப் போல் மதியிழந்து பல தடவை தாங்கள் நின்றதில்லையா? அப் போதெல்லாம் தங்களைக்கொண்டே என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டால் என்ன என்று நான் நினைத்ததுண்டு. ஆனால் தங்களை அப்படிப்பட்ட துரோ கச் செயல் புரியும்படி செய்து தங்கள் குலத்துக்குக் களங்கம் உண்டாக்க நான் விரும்பவில்லை. இதனாலேயே தங்களைக் கடம்பூரிலிருந்து தஞ்சைக்குப் போகச் செய்வதற்கு நான் அவ்வளவு பாடு பட்டேன். தாங்களும் போனீர்கள். ஆனால் விதியானது தங்களைச் சமயம் பார்த்துத் திரும்பிக் கொண்டுவிட்டது! தாங்களாக எனக்கு உதவி செய்ய முன் வரவில்லை. ஆனால் விதியானது தங்களை என் உதவிக்கு நல்ல சமயத்தில் கொண்டு வந்து சேர்த்தது! ஆம், ஐயா! விதிதான் தங்கள் மனத்தில் என் ஒழுக்கத்தைப் பற்றிச் சந்தேகத்தை மூட்டியது. நான் பழி முடிப்பதைத் தடுப்பது மட்டும் தங்கள் நோக்கமா யிருந்தால், பகிரங்க மாகவே வந்திருப்பீர்கள். நான் ஒழுக்கத் தவறு செய்து தங்களுக்குத் துரோகம் செய்கிறேனா என்று சந்தேகப்பட்டுத் தான் வேஷம் தரித்து இரகசிய வழியில் வந்தீர்கள்......அந்த விஷயத்திலாவது தங்கள் சந்தேகம் தீர்ந்து போயிருக்க வேண்டும்! இல்லாவிடில், இப்போ தாவது தீர்த்துக் கொள்ளுங்கள். மனைவி யும் கணவனும் வாழ்க்கைத் துணைவர்கள் என்று பெரியோர்கள் சொல்லி யிருக் கிறார்கள். நான் தங்களுக்கு உண்மை யான பத்தினியாக இருந்தபடியால்தான் எனக்குத் துணை செய்வதற்குத் தக்க சமயத்தில் தங்களை விதி கொண்டு வந்து என்னிடம் சேர்த்தது......''

''நந்தினி! போதும்! நிறுத்து! உன் வார்த்தைகள் என்னைச் சித்திரவதை செய்கின்றன. அதைக் காட்டிலும், என்னை ஒரேயடியாகக் கொன்று போட்டுவிடு! தடுப்பதற்குக் கூட என் கையில் சக்தி இல்லை; உடம்பிலும் வலிவு இல்லை. வாளினால் கொல்ல உனக் குத் தைரியம் இல்லையென்றால், உண்மை

யாகவே கஞ்சியில் விஷத்தைக் கலந்து எனக்குக் கொடுத்து விடு!"

"அரசே! என்னை மன்னியுங்கள்! இல்லை......என்னை உங்களால் மன்னிக்க முடியாது. இந்த ஜன்மத்தில் மன்னிக்க இயலாதுதான்! ஒன்று சொல்கிறேன், கேளுங்கள்! நாம் இருவரும் மறு ஜன்மம் எடுத்து இந்தப் பூமியில் பிறந்தால், அப்போது இந்தப் பிறவியின் நினைவு ஒன்றும் நமக்கு இராது. நான் தங்களை வஞ்சித்துத் தங்கள் அரண்மனையில் வாழ்ந்ததும், தங்களுடைய பொக்கிஷத்தின் பொருளை என்னுடைய பழி முடிக்கும் காரியத்துக்கு உபயோகப் படுத்தியதும், கடைசியாகக் கடம்பூர் அரண்மனையில் விதி வசத்தினால் நேர்ந்த விளைவும், இவையொன்றும் தங்களுக்கும் நினைவு இராது; எனக்கும் நினைவு இராது. இந்த ஜன்மத்தில் தங்களுக்கு நான் செய்த துரோகத்துக்கு அடுத்த ஜன்மத்தில் பரிகாரம் செய்ய விரும்புகிறேன். மறு பிறப்பில் நான் தங்களையே மணப்பேன்; தங்களுக்கு உண்மையான வாழ்க்கைத் துணைவியாக இருப்பேன். இந்த வரத்தைத்தான் இனி இந்த உடம்பில் உயிர் இருக்கும் வரையில் எல்லாத் தெய்வங்களிடமும் நான் வேண்டிக் கொள்ளப் போகிறேன்."

பெரிய பழுவேட்டரையர் இந்த வார்த்தைகளைக் கேட்டு உடலும் உள்ளமும் நெகிழ்ந்து, "நந்தினி! நீ போய் விடு! உடனே இவ்விடம் விட்டுப் போய் விடு! இன்னும் சிறிது நேரம் இப்படியே நீ பேசிக் கொண்டிருந்தால் என் புத்தியே பேதலித்து விடும்! என் கடமையைக் கைவிடும்படி நேரிடும்! இவ்வளவு காலமும் உன்னால் நேர்ந்த அனர்த்தங்கள் போதும்! இன்னமும் என் புத்தியைச் சிதற அடித்துப் பித்துப் பிடிக்கச் செய்யாதே! போய் விடு, இப்போதே போய் விடு!" என்றார்.

"சுவாமி! மன்னியுங்கள்! என்னுடன் வந்தவர்களின் யோசனையை நான் கேட்டிருந்தால், இதற்குள்ளே இந்தப் பச்சை மலையையும் கொல்லி மலையையும் கடந்து கொங்கு நாட்டுக்குள் சென்றிருப்போம். ஆனால் தங்களிடம் பேசி விடை பெற்றுக் கொள்ளாமல் போக எனக்கு மனம் வரவில்லை. கடம்பூர் கோட்டைக்கு வெளியிலே வந்ததும் தாங்கள் மூர்ச்சையடைந்தீர்கள். தங்களை அங்கேயே போட்டு விட்டு வந்துவிடும்படி அவர்கள் சொன்னார்கள். அதற்கும் நான் சம்மதிக்கவில்லை. அவர்களையே தங்களைத் தூக்கிச் சுமந்து கொண்டு வரச் செய்தேன். இரவு பகல் நாங்கள் இடைவிடாமல் நடந்து வந்தும் மூன்று நாள் ஆகிவிட்டது. இங்கே வந்த பிறகும் தங்களை விட்டுப் போய் விடலாம் என்று சொன்னார்கள். தங்களுக்கு நினைவு வந்த பிறகு சொல்லிக் கொண்டுதான் பிரிந்து வருவேன் என்று பிடிவாதம் பிடித்தேன். அந்த என் எண்ணம் நிறைவேறி விட்டது. தாங்கள் என்னைக் கொல்லப் பார்த்தீர்கள். அதற்கு நியாயமும் இருந்தது. ஆனால் விதிவசத்தினால் வேறு விதமாக நடந்து விட்டது. என் உயிரை வாங்க எண்ணிய தங்களை நான் உயிர்ப்பித்தேன். சற்று முன் என் கையால் கொடுத்த கஞ்சியை விஷம் என்று சொல்லி விட்டெறிந்தீர்கள். ஆனால் மூன்று தினங்களாகத் தாங்கள் நினைவிழந்திருந்த காலத்தில் இந்தக் கையினாலே தான் தங்கள் வாயில் தண்ணீர் விட்டுக் காப்பாற்றி வந்தேன். மூன்று ஆண்டுகாலம் தாங்கள் என்னைத் தங்கள் அரண்மனையின் பேரரசியாக வைத்து இணையற்ற பெருமை அளித்து வந்தீர்கள். அதற்குக் கைம்மாறு இந்த ஜன்மத்தில் நான் செய்ய முடியாது. என்றாலும் இந்த மூன்று நாள் தங்களுக்கு என் கையினால் பணிவிடை செய்யக் கொடுத்து வைத்திருந்தேன். இந்த நினைவு என் உயிர் உள்ள வரையில் எனக்குத் திருப்தி அளித்து வரும். போய் வருகிறேன், ஐயா! விடை கொடுங்கள்!"

"நந்தினி! என்னிடம் ஏன் விடை கேட்கிறாய்? கேட்காமலே போய் விடு! நீ இங்கே தாமதிக்கத் தாமதிக்க, என் புத்தி தடுமாறிக் கொண்டு வரும்!"

"ஆம்; என்னை மறுபடியும் கொல்ல வேண்டும் என்று தங்களுக்குத் தோன்றினாலும் தோன்றி விடும். சுவாமி! தங்கள் கையினால் உயிர் துறக்கும்படி நேர்ந்தால் அதை அடியாள் பெறற்கரும் பாக்கியமாகக் கருதுவேன். ஆயினும் முதலில் என்னைக் கொல்லுவதற்காகத் தானே தாங்கள் மாறுவேடம் பூண்டுவந்தீர்கள்?"

"எதற்காக மாறுவேடம் பூண்டு வந்தேன்? நீ ஏதோ ஒரு காரணம் கூறினாய். உன் ஒழுக்கத்தைச் சந்தேகித்து உண்மையைக் கண்டு பிடிக்க வந்தேன் என்று கூறினாய். அது சரியல்ல. நான் பழுவேட்டரையனாக உன்முன் தோன்றி, நீ இரண்டு வார்த்தை என்னிடம் பேசி விட்டால், என் மனம் இளகி விடும்

என்று பயந்துதான் அவ்வாறு வேடம் போட்டுக்கொண்டு இரகசிய வழியில் வந்தேன். உனக்குப் பேசுவதற்கே இடங்கொடாமல் நீ பிரமித்து நிற்கும் போதே உன்மீது கத்தியை எறிந்து கொல்ல எண்ணி வந்தேன். கடம்பூர் அரண்மனை வேலைக்காரன் இடும்பன் காரியைப் பயமுறுத்தி அவன் கையி லிருந்த கத்தியைப் பிடுங்கிக் கொண்டு வந்தேன். அதுமட்டு மல்ல, நந்தினி! கிழவன் பழுவேட்டரையன் பொறாமை கொண்டு அவனுடைய இளம் மனைவி யைக் கொன்றான் என்ற பழிச் சொல் பரவி ஊர் சிரிக்கக் கூடாது என்று நினைத்துக் காளாமுகனுடைய வேடத் துடன் வந்தேன். ஆனால் சற்று முன் நீ கூறியது போல், நான் ஒன்று நினைக்க விதி வேறு ஒன்று நினைத்தது. இனி ஒரு தடவை அத்தகைய முயற்சி என்னால் செய்யவே முடியாது. ஆகையால், நீ போய் விடு! இதை மட்டும் சொல்லி விட்டுப் போ! அச்சமயம் நான் வந்து குறுக்கிட்டிரா விட்டால், என்ன நடந் திருக்கும்? உன் நோக்கத்தை எப்படி முடிக்க எண்ணி யிருந்தாய்?''

''ஆம், ஆம்; அதையும் சொல்ல வேண்டுமென்றுதான் காத்திருந்தேன். தங்கள் கோபம் என் புத்தியையும் குழப்பி விட்டது. சுவாமி! தாங்கள் தஞ்சைக்குப் போகும் போது 'தங்கள் குல தர்மத்துக்கு என் கையினால் களங்கம் நேரிடாது' என்று உறுதி கொடுத்தேன். அதை நிறைவேற்றப் பெரும் பிரயத்தனம் செய்தேன். மணி மேகலை, கந்தமாறன், வந்தியத்தேவன் இவர்களில் ஒருவர் மூலமாக என் நோக் கத்தை நிறைவேற்றிக் கொள்ளலா மென்று யுக்திகள் செய்தேன். முக்கிய மாக, மணிமேகலையை நான் அதிகமாக நம்பி யிருந்தேன். வேறு காரணத்துக் காக அங்கே மறைந்து நின்ற வந்தியத் தேவனைக் கொல்வதற்காகக் கரிகாலர் வெறிகொண்டு ஓடுவார்; அப்போது மணிமேகலை அவரைக் கொல்லுவாள்; மணிமேகலையின் மேல் குற்றம் சாராம லிருப்பதற்காக வந்தியத்தேவன் 'நான் தான் கொன்றேன்!' என்று ஒப்புக் கொள்வான்; அதனால் பழையாறைக் குந்தவையின் பேரில் என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டதுமாகும்; — இப்படி யெல்லாம் திட்டமிட்டிருந்தேன். ஆனால் இதற்கெல்லாம் அவசியம் ஏற்படவே இல்லை. இளவரசர் தம் கையினாலேயே தம் உயிரை மாய்த்துக் கொண்டார்...''

''இல்லை, நந்தினி! இல்லை! கரிகாலர் தம் உயிரைத் தாமே மாய்த்துக்கொள்ள வில்லை. என்னைக் கூடவா ஏமாற்றப் பார்க்கிறாய்?''

''சுவாமி! இடும்பன் காரியின் கத்தி யைத் தாங்கள் அச்சமயம் எறிந்திரா விட்டால், அடுத்த கணத்தில் கரிகாலர் தம்மைத் தாமே வீர பாண்டியன் வாளி னால் மாய்த்துக் கொண்டிருப்பார்......''

''ஆம், ஆம்; ஒரு கணம் நான் தாம தித்து வந்திருந்தால் இந்தப் பெரிய துரோகச் செயலைச் செய்திருக்க மாட் டேன். அதற்கு மாறாக, உன்பேரில் சந்தேகப்பட்டிருப்பேன். நந்தினி! விதிப் படி நடந்து விட்டது. இனி அதை மாற்ற முடியாது. விதி ஒரு விதத்தில் எனக்கும் நல்லது செய்திருக்கிறது. இருவரும் இன்னொரு ஜன்மம் எடுத்தால், நீ என்னையே வாழ்க்கைத் துணைவனாய்க் கொள்ள விரும்புவதாய்க் கூறினாயே? அதைக் காட்டிலும் இனிமையான வார்த்தைகளை என் வாழ்நாளில் நான் கேட்டதில்லை. உன்னிடம்கூடக் கேட்ட தில்லை. என் ஆவி பிரியும் நேரத்தில் நான் அந்த வார்த்தைகளைத்தான் நினைத் துக் கொண்டு சாவேன். ஆம், நந்தினி! இந்தப் பிறவியில் இனி நீயும் நானும் சேர்ந்து வாழ்க்கை நடத்த முடியாது. ஆகையால் நீ போய் விடு! போவதற்கு முன்னால், நான் ஆத்திரத்தினால் கொட்டி யது போகக் கஞ்சி மிச்சமிருந்தால் கொடுத்து விட்டுப் போ! கஞ்சி இல்லா விட்டால், கொஞ்சம் தண்ணீராவது உன் கையினால் கொடுத்து விட்டுப் போ! நான் முதலில் கூறியதை எல்லாம் மறந்து மன்னித்து விட்டதற்கு அடையாள மாக ஒரு வாய் கஞ்சியாவது, தண்ணீ ராவது கொடுத்து விட்டுப் போ!'' என் றார் பழுவேட்டரையர்.

''ஆகட்டும், ஐயா! இவ்வளவு கருணை செய்ததற்கு என் உயிர் உள்ள வரைக் கும் நன்றி செலுத்துவேன்!'' என்று நந்தினி கூறிவிட்டு, அடுப்பிலிருந்து கஞ்சி எடுத்து வரச் சென்றாள்!

ஆழ்வார்க்கடியான் அந்தச் சமயம் பார்த்துக் குகையிலிருந்து நழுவிச் செல்ல நினைத்தான். தெரிந்துகொள்ள விரும் பியதையெல்லாம் அவன் தெரிந்து கொண்டு விட்டான். இனி அங்கிருப்ப தில் உபயோகம் இல்லை; அபாயமும் உண்டு. இனிமேல் செய்ய வேண்டிய தென்ன என்பதைப் பற்றி வெளியிலே போய் யோசித்துக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டே வெளியேறினான்

அத்தியாயம் 46

# ஆழ்வானுக்கு ஆபத்து!

ஆழ்வார்க்கடியானும் பூங்குழலியும் மண்டையடிவாரத்து மரத்தினடியில் உட்கார்ந்தார்கள்.

"பெண்ணே! நான் வந்த காரியம் ஆகி விட்டது. புறப்படலாமா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"வைஷ்ணவரே! நீர் வந்த காரியம் ஆகிவிட்டதென்றால் நீர் போகலாம். நான் வந்த காரியம் இன்னும் பூர்த்தி ஆகவில்லை!" என்றாள் பூங்குழலி.

"நீ என்ன காரியத்துக்காக வந்தாய்?"

"என் அத்தையைக் கொன்ற பாதகனைத் தேடிக் கொண்டு வந்தேன்."

"அவனைக் கண்டு பிடிக்கவில்லையா? அதோ அந்தச் சதிகாரரின் கூட்டத்தில் அவன் இல்லையா?"

"இருக்கிறான்!"

"பின்னே என்ன?"

"அவனைத் தரிசனம் செய்து புண்ணியம் கட்டிக் கொண்டு போவதற்காக வந்தேனா? கொலைக்குக் கொலை, பழிக்குப் பழி வாங்குவதற்காக வந்தேன்."

"பூங்குழலி! குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பதற்கு நாம் யார்! அதற்குக் கடவுள் இருக்கிறார்!"

"கடவுள் இருக்கிறாரா, இருந்தாலும் மனிதர்களுடைய துரோகச் செயல்களைத் தண்டிக்கிறாரா என்பது பற்றி எனக்குச் சந்தேகமாயிருக்கிறது."

"கடவுளை விட்டு விடுவோம். இந்த உலகில் குற்றம் செய்தவர்களைத் தண்டிக்கும் பொறுப்பு அரசர்களுடையது; அரசர்கள் நியமிக்கும் அதிகாரிகள் செய்ய வேண்டியது."

"அரசர்களும் அவர்களுடைய அதிகாரிகளும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யா விட்டால்?"

"செய்யவில்லையென்று நாம் எப்படித் தீர்மானிப்பது?"

"வைஷ்ணவரே! அதோ உள்ள பாதகர்களில் ஒருவன், மேல் மாடியிலிருந்து வேலை எறிந்து அன்பே உருவான என் அத்தையைக் கொன்றான். வாயினால் பேசத் தெரியாதவளும், ஒருவருக்கும் ஒரு தீங்கும் நினையாதவளும் வாழ்க்கையெல்லாம் துர்ப்பாக்கியசாலியாக இருந்தவளுமான ஒரு பேதைப் பெண்ணைக் கொன்றான். சக்கரவர்த்தியும் அவருடைய ராணிமார்களும் தஞ்சைக் கோட்டை அதிகாரியான சின்னப் பழுவேட்டரையரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆயினும் அவனைத் தப்பி ஓடும்படி விட்டு விட்டார்கள்......"

"பூங்குழலி! சோமன் சாம்பவனைப் பிடிப்பதற்கு யாதொரு முயற்சியும் அவர்கள் செய்யவில்லையா?"

"வாழ்நாளெல்லாம் என் அத்தையை நிராகரித்த சக்கரவர்த்தி இப்போது அவளை மடியில் போட்டுக் கொண்டு அழுதார். மற்றவர்கள் எல்லாரும் திக்பிரமை கொண்டு நின்றார்கள். 'கொலைகாரனைத் தொடர்ந்து நான் போகிறேன்' என்றதும் சின்னப் பழுவேட்டரையரும் எழுந்து வந்தார். ஆனால் சுரங்கப் பாதையில் அவர் திரும்பிப் போக நேர்ந்தது."

"அது ஏன்?"

"சுரங்கப் பாதையில் நானும் அவரும் சென்றபோது இருளில் ஓர் ஓலக் குரல் கேட்டது. சின்னப் பழுவேட்டரையர் அந்தக் குரல் வந்த இடத்தை நோக்கிப் பாய்ந்து அங்கே இருந்தவனைப் பிடித்துக் கொண்டார். 'இதோ கொலைகாரன் அகப்பட்டு விட்டான்!' என்று கூவினார். 'இல்லை, இல்லை! நான் கொலை செய்யவில்லை!' என்று ஒரு குரல் வந்தது. அது யாருடைய குரல் என்பது சின்னப் பழுவேட்டரையருக்குத் தெரிந்ததும் அவர் திகைத்துப் போய், 'ஐயோ? நீர் ஏன் இங்கே வந்தீர்?' என்றார். 'பொக்கிஷமெல்லாம் பத்திரமாக இருக்கிறதா என்று பார்ப்பதற்கு வந்தேன்' என்றது இருளில் வந்த குரல். 'ஐயோ! தெய்வமே! உம்மை இங்கே யாராவது பார்த்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்? நீர் அல்லவா சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றதாக எண்ணிக் கொள்வார்கள்?' என்றார் காலாந்தக கண்டர். 'சக்கரவர்த்தி செத்துப் போய் விட்டாரா?' என்று ஆவலுடன் கேட்டார் சின்னப் பழுவேட்டரையருடைய அருமை மருமகரான மதுராந்தகத்தேவர். 'அசட்டுப் பிள்ளையே! என்னுடன் வா! யாரும் பார்ப்பதற்கு முன் வா!' என்று சொல்லிக் காலாந்தக கண்டர் அவருடைய மருமகப் பிள்ளையின் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் விட்டார். பிறகு நான் மட்டும்

இந்தக் கொலைகாரனைத் தொடர்ந்து வந்தேன். இவ்வளவு தூரம் சிரமப்பட்டு வந்து, என் நோக்கத்தை நிறைவேற்றாமல் திரும்பிப் போகச் சொல்கிறாயா?'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! நீ ஆண் பிள்ளையாகப் பிறந்திருக்க வேண்டியவள். பிறந்திருந்தால் பெரியதொரு சாம்ராஜ்யத்தின் சர்வாதிகாரியாக இருந்திருப்பாய். அது போனால் போகட்டும். இதைக் கேள். ஒரு நியாயம் சொல்லு! ஒருவரைக் கொல்ல நினைத்து இன்னொருவரைத் தற்செயலாகக் கொன்றவன் மீது கொலைக் குற்றம் சாற்ற முடியுமா?''

''உம்முடைய கேள்வி எனக்கு விளங்கவில்லை. கொன்றவன் கொலைக் குற்றம் செய்தவன் தானே?''

''அது எப்படிச் சொல்ல முடியும்? இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் ஆதித்தகரிகாலரைக் கொன்றவர். ஆனால் கரிகாலரைக் கொல்ல வேணுமென்று நினைத்துக் கொல்லவில்லை. வேறொருவரைக் கொல்ல நினைத்து எறிந்த கத்தி இளவரசரின் பேரில் விழுந்து அவரைக் கொன்று விட்டது. அவரைக் கொலைகாரர் என்று சொல்ல முடியுமா?''

''வைஷ்ணவரே! என் மூளையைக் குழப்ப வேண்டாம். மலைக் குகைக்குள் இருப்பவர்கள் யார்?''

''சோழ சாம்ராஜ்யத்தின் தனாதிகாரி, தஞ்சை அரண்மனையின் சர்வாதிகாரி, இருபத்தி நான்கு போர்க்களங்களில் போரிட்டு அறுபத்து நாலு விழுப் புண்களைத் தம் திருமேனியில் சுமந்திருக்கும் வீராதிவீரர், இறை விதிக்கும் தேவர்,

கட்டும். வேறு வேறு சில்லறைத் தெய்வங்களை யெல்லாம் விட்டு விட்டு சாக்ஷாத் மகா விஷ்ணுவைச் சரணமடையுங்கள்! பகவான் உங்களுடைய பாவங்களை யெல்லாம் மன்னித்துக் காப்பாற்றுவார்! மானிடர்களுக்காக உழைத்து வாழ்க்கையை வீணுக்கு மடிந்து போகாதீர்கள். நாராயணனைத் தொழுது நரஜன்மம் எடுத்ததின் பலனை அடையுங்கள். பரம பதத்தில் உங்களுக்கு இடந் தேடிக் கொள்ளுங்கள்! எங்கே? என்னுடன் சேர்ந்து எல்லாரும் பாடுங்கள், பார்க்கலாம்;—

**நாராயணனே தெய்வம் -**
**நாமெல்லோரும் துதிசெய்வம்!''**

என்று பாடத் தொடங்கினான்.

ரவிதாஸன் கல கலவென்று சிரித்து விட்டு, "ஏனப்பா, வைஷ்ணவனே? சாக்ஷாத் பரமசிவன் மட்டும் தெய்வம் இல்லையா? பரமசிவனைத் துதித்தால் பரம பதம் கிட்டாதா?'' என்றான்.

ஆழ்வார்க்கடியான் உற்சாகத்துடன், "பரமசிவன் அழிக்கும் தெய்வம்! நாராயணன்தான் காக்கும் தெய்வம்! அன்று முதலை வாயில் அகப்பட்டுக் கொண்டு தவித்த கஜராஜனை எங்கள் நாராயண மூர்த்தி காப்பாற்றியதை மறந்து விட்டீர்களா?'' என்றான்.

"அப்பனே! கஜராஜனைக் காப்பாற்றிய விஷ்ணுபகவான் முதலையைக் கொல்லத்தானே செய்தார்? அதுபோலவே இராவணன், கும்பகர்ணன், இரணியாட்சன், இரணிய கசிபு, சிசுபாலன், தந்த வக்கிரன் ஆகியவர்களை உங்கள் மகா விஷ்ணு அழித்துப் போடவில்லையா?'' என்றான் ரவிதாஸன்.

"எங்கள் பெருமாளின் கையால் வதையுண்டவர்களும் சாக்ஷாத் ஸ்ரீ வைகுண்டத்தை அடைவார்கள். இரணியனையும் இராவணனையும் சிசுபாலனையும் கொன்ற பிறகு அவர்களுக்குப் பகவான் வைகுண்ட பதவியை அளித்தார். உங்கள் பரமசிவனோ திரிபுரர்களை ஒரேயடியாக நெற்றிக் கண்ணால் எரித்து அழித்துப் போட்டார். அவர்களுக்கு மோட்சத்தைக் கொடுத்தாரா?''

"சரி! சரி! உன் கதையை நிறுத்து! உன்னுடைய நாராயணன் இப்போது உன்னை வந்து காப்பாற்றட்டும்!'' என்று சொல்லிக் கொண்டே ரவிதாஸன் தன் கையிலிருந்த குறுந்தடியை ஓங்கினான்.

அந்தச் சமயம் பூங்குழலி அவனுக்கு உதவி செய்ய விரும்பி இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்தாள். அதே நேரத்தில் மலைக்குகையிலிருந்து தலைவிரி கோலமாக ஒரு பெண்ணுருவம் ஓடி வருவதைப் பார்த்தாள். ஒரு கண நேரம் அவளைத் தன் அத்தை மந்தாகினி என்று எண்ணிப் பிரமித்து நின்றாள். பின்னர், 'இல்லை! இவள் பழுவூர் ராணி நந்தினி' என்று தெளிந்தாள்.

இதற்குள் நந்தினி ஆழ்வார்க்கடியான் அருகில் வந்து விட்டாள். ரவிதாஸனுடைய ஓங்கிய கைத்தடியைத் தன் கரங்களினால் தடுத்து நிறுத்தினாள்.

"வேண்டாம்! என் சகோதரனை ஒன்றும் செய்யாதீர்கள்! ரவிதாஸா! நான் உங்கள் ராணி என்பது உண்மையானால், தடியைக் கீழே போடு!'' என்றாள்.

ஆழ்வார்க்கடியான் அப்போது, "சகோதரி! உனக்கு நன்றி. ஆனால் இவர்களால் எனக்கு எந்தவிதத் தீங்கும் செய்திருக்க முடியாது. நான் வணங்கும் தெய்வமாகிய நாராயண மூர்த்தி என்னைக் காப்பாற்றி யிருப்பார்!'' என்றான்.

ரவிதாஸன் சிரித்து விட்டு, "எப்படிக் காப்பாற்றி யிருப்பார்? அன்றைக்குப் பிரஹலாதனைக் காப்பாற்றத் தூணிலிருந்து வந்ததுபோல் இன்று இந்த மரத்தைப் பிளந்து கொண்டு நாராயண மூர்த்தி வந்திருப்பாரா?'' என்றான்.

"மந்திரவாதி! என் பேச்சில் உனக்கு நம்பிக்கை இல்லையா? நல்லது! அதோ பார்! சற்றுத் தூரத்தில் தெரியும் அய்யனார் கோவிலைப் பார்! அந்தக் கோயிலுக்கு முன்னால் மண் குதிரைகள் இருக்கின்றன அல்லவா? ஸ்ரீமந் நாராயணனுடைய கருணையினால் அந்த மண் குதிரைகள் உயிர் பெற்று விடும்! அவற்றின் பேரில் வேல் பிடித்த வீரர்கள் ஏறிக் கொண்டு வந்து உங்களைச் சிறைப் பிடித்து என்னைக் காப்பாற்றுவார்கள்!''

ஆழ்வார்க் கடியான் மேற்கண்டவாறு சொல்லிக் கொண்டே கையினால் சுட்டிக் காட்டிய திக்கை அனைவரும் நோக்கினார்கள். தங்கள் கண்களை நம்ப முடியாமல் திண்டாடிப் போனார்கள்! ஏனெனில், அந்த மண் குதிரைகள் உண்மையாகவே உயிர் பெற்று அவர்களை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்ததாக அவர்களுக்குத் தோன்றியது. ஒவ்வொரு குதிரையின் பேரிலும் வேல் பிடித்த வீரன் ஒருவன் உட்கார்ந்திருந்தான்!

(தொடரும்)

# யோகாசன சிகிச்சை

வி. என். குமாரஸ்வாமி

## 5. சந்தேக விளக்கம்

ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகள் எழுதி வந்தபோதே வாசகர்களுக்கு அநேக சந்தேகங்கள் தோன்றி எழுதிக் கேட்டு வந்தனர். எவ்வளவு தெளிவாக ஒளிவு மறைவு என்பதில்லாமல் சுலபமாய் விளங்கும்படியாக எழுதினாலும், இந்த யோகாசன விஷயம் மக்களுக்குப் புதிது. ஆகையால், அநேக சந்தேகங்கள் தோன்றுவது இயற்கையே. அப்படித் தோன்றிய சந்தேகங்களுக்கென்று எழுதிய சந்தேக விளக்கப் பகுதி நேயர்களுக்கு மிக்க உபயோகமாய் இருக்கும்.

ஆரோக்கிய ரகசியம் எழுதி வந்தபோது சந்தேகங்களைக் கேட்டு வந்த கடிதங்களில் இன்னும் பல நூறு கடிதங்களுக்குப் பதில் எழுதப்படாமல் இருக்கின்றன. இனியும் இம்மாதிரி வரலாம். எனவே, பழைய சந்தேகங்களுக்கும் புதிய சந்தேகங்களுக்கும் இனி வரும் சந்தேக விளக்கப் பகுதியில் நேயர்கள் பதிலை எதிர்பார்க்கலாம்.

தவிர, இப்பொழுது வரும் கடிதங்களில் அநேகம் தாங்கள் ஆசனங்களைச் செய்து அதனால் பலன் அடைந்ததையும் தங்கள் குறைகளை—நோய்களைப் போக்கிக் கொண்டதையும் எழுதித் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்து வருகின்றனர். அந்தக் கடிதங்களில் சில மிக சுவாரஸ்யமாகவும் இருக்கும். அவைகளைப் படித்தாலே மனத்துக்கு ஒரு சாந்தியும் ஆசனங்களின் பேரில் இன்னும் விடா நம்பிக்கையும் ஏற்படும். எனவே, அவைகளில் முக்கியமானவைகளை அவ்வப்போது வெளியிட விரும்புகிறேன்.

இதைப் போலக் கடிதங்கள் எழுதும் அன்பர்கள், அவர்கள் அடைந்த பலன்களை, சுருக்கமாகவும் விளக்கமாகவும் முன்பு அவர்களுக்கு இருந்த கஷ்டங்களையும் அவை எந்தெந்த ஆசனங்களால் எவ்வாறு குறை தீர்ந்தது என்பதையும் எழுதினால், அதை இனிவரும் சந்தேக விளக்கப் பகுதியிலோ மற்ற இடங்களிலோ உபயோகப் படுத்திக் கொள்ளச் சௌகரியமாய் இருக்கும்.

அன்பர்கள் சந்தேகம் தோன்றி எழுதுவதற்கு முன் ஏற்கெனவே வெளிவந்த சந்தேக விளக்கக் கட்டுரைகளையும், மற்ற விஷயங்களையும் படித்தாலே அநேக சந்தேகங்கள் தீருவதாய் இருக்கும். அப்படியும் தீரவில்லை என்பவர்கள் மட்டும் எழுதிக் கேட்டால் மிக்க நன்மை செய்தவர்களாவார்கள். அனாவசியமாய் மிக சாதாரண விஷயங்களுக்கெல்லாம் உடனே எழுதிக் கேட்க வேண்டாமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

**கேள்வி:**—நான் காலையில் துயிலெழுந்ததும் காப்பி சாப்பிடுவது வழக்கம். யோகாசனம் செய்வதற்கு முன் காப்பி சாப்பிடுவது நல்லதா? அல்லது யோகாசனம் செய்தபின் சாப்பிடுவது நல்லதா? எவ்வளவு நேரத்துக்குமுன் அல்லது பின் சாப்பிடலாம்?

**பதில்:**—ஆரோக்கிய இரகசியக் கட்டுரைகளைத் தொடர்ந்து படிக்கவில்லை என்று தெரிகிறது. காப்பியே சாப்பிடக் கூடாது. எனவே யோகாசனம் செய்வதற்கு முன்பும் கூடாது, பின்பும் கூடாது. ஆசனம் செய்வதென்றால்தானே இந்த நிபந்தனையெல்லாம். எனவே ஆசனம் செய்ய வேண்டாம். காப்பி சாப்பிட்டால் போதும் என்றும் சில அன்பர்கள் முடிவு கட்டி விடலாம். பொதுவாய் எல்லோருக்குமே காப்பி நல்லதல்ல. எந்த டாக்டராகட்டும், வைத்தியராகட்டும், காப்பி நல்லதென்று பரிபூரணமாய் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். "காபின்" என்ற விஷ வஸ்து எவ்வளவு மறைமுகமாய் உடலைச் சின்னா பின்னமாக்குகிறது! என்பதை அவர்கள் அறிவார்கள். அதிலும் படுக்கையை விட்டு எழுந்ததும் வெறும் வயிற்றில் "காப்பி" எனும் உறுத்தும் விஷ சத்தைக் குடிப்பது என்றால் அதைச் சிறிதுகூட சகிக்கக் கூடிய விஷயமல்ல. அதை அனுமதிக்கவே கூடாது; முடியாது.

ஆனால் காப்பியை விட்ட பின்தான் ஆசனம் செய்ய வேண்டும் என்ற நிபந்தனை இல்லை. காப்பி சாப்பிடுகிறவர்களும் ஆசனங்களைச் செய்யலாம். ஆனால் சிறிது சிறிதாகக் குறைத்து வந்து நிறுத்தி விடலாம். ஆசனப் பயிற்சிகளினால் இயற்கை உணர்ச்சி விழித்தெழ, தானே வேண்டாம் என்று சொல்லும் நிலைமைக்கு வந்து விடும். காப்பி சாப்பிடுவதினால், என்ன தெம்பு உண்டாகிறதோ அதைவிடப் பன்மடங்கு தெம்பு, சுறுசுறுப்பு, ஆசனங்களால் நிரந்தரமாய் உண்டாகி விடும். காப்பியோ, உற்சாகம் கொடுப்பதுபோல் மயக்கிப் பின் பல நிகழ்ச்சிகளைச் செய்யும். ஆசனங்களோ பல கெடுதிகளைப் போக்கி உற்சாகத்தை நிரந்தரமாகக் கொடுக்கும்.

**கேள்வி:**—சாந்தியாசனம் செய்து எழுந்தவுடன் பிராணாயாமம் செய்யலாமா?

**பதில்:**—செய்யலாம்.

**கேள்வி:**—என்னுடைய சில டாக்டர் நண்பர்களுடன் ஆஸ்பத்திரியில் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது பல நோயாளிகள் (Hydrocele) விரை வாதம் என்னும் விரை வீக்கத்தால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்வியாதி தற்சமயம் யுவர்களிடையே அதிகமாய்ப் பரவி வந்திருப்பது தெரிந்த விஷயம். இதற்கு ஆப்பரேஷன் தண்ணீர்ப்பட்ட பாடாய் இருக்கிறது. ஆனால் எல்லோரும் துணிகிறார்களா? ஆதலால் ஆசனங்களில் அதற்குப் பரிகாரம் கிடைக்குமா? என்று பேசிக் கொண்டோம். நான் தங்கள் கட்டுரைகளைச் சிலகாலமாகப் படித்து வருகிறேன். ஆனால் இது விஷயம் வந்ததாகத் தெரியவில்லை. இந்த விஷயமாய் எழுதினால் மிக்க உபகாரமாய் இருக்கும் என்று நம்புகிறேன்.—ஒரு டாக்டர்.

**பதில்:**—(Hydrocele) விரை வாதத்தைப் பற்றி ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளில் தனியாய் விவரிக்கவில்லைதான். பொதுவாய் "வாதங்கள்" என்னும் தலைப்பில் வந்த கட்டுரையில் வந்திருக்கிறது. இவ்விடத்தில் விளக்கமாய் எழுதுவதற்கில்லை. இனி ஒவ்வொரு நோய்க்கும் ஆசன சிகிச்சை மட்டும் எழுதுகிறேன். இந்த நோய் உள்ளவர்கள் வாயுவை உண்டாக்கும் பண்டங்களைச் சாப்பிடக் கூடாது. சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம் இவைகளைச் செய்ய வேண்டும். சர்வாங்காசனம் முதலில் ஒவ்வொரு நிமிஷம் மூன்று தடவையாக ஆரம்பித்து, அரை மணி நேரம் வரை செய்யலாம். சிரசாசனமும் அவ்

வாறே. சர்வாங்காசனம் செய்த பின் மத்ஸ்யாசனம் சர்வாங்காசன நேரத்தில் கால் பங்கு நேரம் செய்யலாம். கடைசியில் சாந்தி ஆசனம். பின் நாடி சுத்தி. 21 தடவைகள் வரை தொடங்கலாம்.

**கேள்வி:**—நான் பதினேழு வயதுப் பெண். ஒருவேளை உணவுகூட உண்ணக் கஷ்டப்படும் மக்களுள்ள இந்த நாட்களில் எனக்கு எல்லாம் இருந்தும், வயிறார, ஆசை தீர உண்ண முடியவில்லை. குடகு தனலக்ஷ்மி யெனும் பெண் ஒரு வருடமாகச் சாப்பிடாமல் இருந்த செய்தியைப் படித்திருப்பீர்கள். நானோ இரண்டு வருடங்களாக ஒரு பருக்கை அன்னத்தைக் கூடச் சாப்பிட்டது கிடையாது. ஒரு நாளைக்கு ஒரு தோசை அல்லது ஒரு பிடி உப்புமா சாப்பிட்டால் போதுமானதாய் இருக்கிறது. மோர் போன்ற திரவ பதார்த்தம் சாப்பிட்டால் கூட என் வயிறு நிரம்பிவிடுகிறது. இரண்டு மூன்று நாட்கள் சேர்ந்தாற் போல் கொஞ்சம் ஆகாரத்தை அதிகப்படுத்தினால் கூட உடல் பருத்து விட்டது போல் தோன்றுகிறது. எனவே பயந்து குறைத்துக் கொள்கிறேன். வழக்கமாய் ஒரு தோசை சாப்பிட்டால் கூட மூன்று நாளைக்கு ஒரு நாள் முழு பட்டினி போட்டால் தான் உடல் லகுவாக இருக்கிறது. இத்தனைக்கும் நான் இரண்டு வருடமாய் வீட்டில் நன்றாய் வேலை செய்கிறேன். இதற்குமுன் பெரியவர்கள் சமைத்துப் போட்டுக் கொண்டிருந்தபோது கமாராக சாப்பிடுவேன். பட்சணங்கள் நிறையச் சாப்பிடுவேன். அப்பொழுதெல்லாம் நான் ஒடிந்து விழுந்து விடுவேன் போல் ஒல்லியாக இருந்தேன்.

இரண்டு மூன்று நாளுக் கொரு முறைதான் கொஞ்சமாக மலம் கழிகிறது. சர்வாங்காசனம், யோக முத்ரா செய்கிறேன். குணம் தெரியவில்லை. பட்டினி இருந்தாவது உடல் பருக்காமல் பார்த்துக்கொள்வேன். ஆனால் உணவு சரியானபடி உட்கொள்ள முடியாததாலோ என்னவோ தலை மயிரெல்லாம் கொட்டி வழுக்கை ஏற்படும்போல் இருக்கிறது. தலையில் பொடுகு வேறு இருக்கிறது. நான் என் ஆயுட்காலம் முழுவதும் இப்படியே கழிக்க வேண்டியதுதானா! ஓரளவு சாப்பிடவும் மேலும் தலையில் வழுக்கை விழாமல் தடுக்கவும் நீங்கள் வழி காட்டுவீர்க ளென்று நம்புகிறேன்.

**பதில்:**— குடகுப் பெண்மணிக்குப் பின் இப் பெண்மணியை இரண்டாவதாகச் சொல்லலாம் போல் இருக்கிறது. இப்படிப் பசியாமல் வருடக் கணக்கில் இருப்பது ஒரு புதிராகவே இருக்கிறது. பெரிய டாக்டர்களும் விஞ்ஞானிகளும் இன்னும் விளக்கம் காணவில்லை. உழைப்புக்கும், உயிர் வாழ்வதற்கும் உணவு அவசியமாய் இருக்க, உணவில்லாமலோ அல்லது மிக இலேசான உணவுடனோ இருக்க முடிகிறது என்றால் அவர்களுக்கு ஒருகால் ஜடராக்கினி இல்லாமல் இருக்குமோ என்றே எண்ணவேண்டியிருக்கிறது. ஆனால் நமது பழங்கால யோகிகள் பல வருடங்கள் அன்ன ஆகாரமில்லாமல் வாழ்ந் திருக்கின்றார்க ளென்று படித்திருக்கிறோம். அவை யோக சாதனையின் மகத்துவமாகவும் இருக்கலாம். இதற்கு என்ன வென்று சொல்வது!

எது எப்படி இருப்பினும் ஜடராக்கினியை உண்டாக்கும் சில ஆசனங்கள் உண்டு. முக்கியமாய் வஜ்ராசனம், சிரசாசனம், விபரீதகரணி, தனுராசனத்தைச் சொல்லலாம். வஜ்ராசனம் பதினைந்து நிமிஷம், புஜங்காசனம் மூன்று தடவை, தனுராசனம் மூன்று தடவை, பஸ்சிமோத்தானு ஐந்து தடவை, சர்வாங்காசனம் பத்து நிமிஷம், மத்ஸ்யாசனம் இரண்டு நிமிஷம், சிரசாசனம் பத்து நிமிஷம், விபரீதகரணி பத்து நிமிஷம், அர்த்த மத்ஸ்யேந்திராசனம் மூன்று தடவை, மறுபடியும் வஜ்ராசனம் ஐந்து நிமிஷம், சாந்தி ஆசனம் ஏழு நிமிஷம், நாடிசுத்தி பதினைந்து தடவை செய்து பார்க்கலாம். ஆறுமாதங்களாவது செய்தால் குணம் தெரியும். பசித்து உடலுக்கு வேண்டிய உணவு சத்து கிடைத்தால் வழுக்கை முதலியன வெல்லாம் தடுக்கலாம். பட்டினி வேண்டாம். சாந்தி ஆசனத்தில் நல்ல பசியெடுக்க மனதால் துதிக்கவும். (தொடரும்)

## சாருபாலா நடனம்

செப்டம்பர் 11ல் சென்னையில் சிறப்பாக நடைபெற்ற பாரதி விழாவில் குமாரி சாருபாலாவின் பரத நாட்டியக் கச்சேரி மிக அழகாக அமைந்தது. சின்னஞ் சிறு பெண்ணான குமாரி சாருபாலா அமர கவி பாரதியாருடைய கண்ணன் பாட்டுக்களுக்கு மிகப் பொருத்தமாக அபிநயம் செய்து சபையோரின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தாள்.



கம்ப ராமாயணப் பாடல்கள் இரண்டுக்கு ஜதிகள் சேர்த்து வர்ணமாக அமைத்து ஆடியது சிறப்பாக இருந்தது.

முக்கியமாக பாரதியாரின் "கண்ணன் என் சேவகன்" என்ற பாடலும் அபிநயமும் கச்சேரியின் சிகரமாக இருந்தன. அந்தப் பாடலுக்கு மெட்டும் பொருத்தமாக அமைந்திருந்தது. குமாரி சாருபாலாவின் சகோதரன் அதை நன்றாக அனுபவித்துப் பாடியதைப் பெரிதும் பாராட்ட வேண்டும்.

"தீராத விளையாட்டுப் பிள்ளை" "திக்குத் தெரியாத காட்டில்" முதலிய கண்ணன் பாடல்களுக்குச் சாருபாலா உணர்ச்சி பாவம் நன்கு வெளியாகும் படி அபிநயம் செய்தாள். ஆனால் பாட்டுக்களைப் பாரதியார் புஸ்தகங்களில் பார்த்துத் திருத்திக் கொண்டால் நன்றாக இருக்கும். யாரேனும் பாடுவதைக் கேட்டு அப்படியே திருப்பிப் பாடுவது சரியல்ல.

குமாரி சாருபாலாவின் ஆடை அலங்காரங்கள் வசீகரமா யிருந்தன. இந்தக் குமாரிக்கு நல்ல களையான முகமும், அழகிய கண்களும் அமைந்திருக்கின்றன. அதோடு, வித்தைத் திறமையும் அந்தச் சிறுமிக்குச் சேர்ந்திருப்பதால் பரத நாட்டியக் கலையில் மிகவும் உன்னதமான நிலைமைக்கு வரக்கூடும் என்று எதிர்பார்க்கலாம்.




OF BINNY'S FABRICS

நீடித்து உழைக்கும் தன்மையே பின்னியின் துணிகளை நம் நாட்டிலேயே மிகச் சிறந்தவையாக மதிக்கப்படுமாறு செய்கிறது. லண்டனின் ஷர்ட்டிங்குகள், ஜனவா சூட்டிங்குகள், டிரில்கள் போன்ற நீண்ட நாட்களுக்கு ! உழைக்கக்கூடிய லாங்போரண்ட் துணிகள் பற்பல அழகிய டிசைன்களில் எங்களது ஷோரூம்களில் கிடைக்கும்.

VENKATESH VASTRALAYA

ஷர்ட்டிங்கில் மிகப் புதிய போர்த்தரான
“மாஸ்காட்”
துணியைக் கேட்டு வாங்குங்கள்

தி பெங்களூர் உல்லன் காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிட்., தயாரிப்பு

சில்லரையில் கிடைக்குமிடம்:

# வெங்கடேஷ் வஸ்த்ராலயா

டெலிபோன்: 4688

2, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

3 வாசனைக் கலாரத்னங்கள்

# கம் கம் ஜவாஜ் ★ கம்பால் ★ கமகர்

அகர்பத்திகள்.

**டி. எல். சுகந்தாலயா,**

வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2



# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே குணமடைகின்றன

## குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது

உங்கள் பாதங்கள் அதிகமாக வெறுப்படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணாகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது தோலில் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை ஒழித்தாலன்றி, உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

### மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூல காரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ கிடையாது. அதிருஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடெர்ம் (Nixoderm) இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப்படுவது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) உங்கள் பாத உபாதையைப் போக்கிவிடும் என்பதற்கு உத்தரவாதம். அதன் மூன்று முக்கிய குணங்களாவன: (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூலகாரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும் கொன்று விடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி சருமத்தை ஏழே நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து ஸ்திமிதமளிக்கிறது. (3) சருமத்தைச் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.



### பரீக்ஷைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். இன்றிரவே போட்டுப் பார்த்தால் மறுநாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதங்களில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்து விடும். சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாட்கள் போட்டு பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள் குணமடையா விட்டால் நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழந்ததாகிறது. இந்த உபத்திரவத்தின் பேரில் நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடெர்ம் (Nixoderm) போட்டு பரிசை செய்து பாருங்கள். திருப்தி ஏற்படாவிட்டால், காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்கு அளிக்கப்பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.



கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றி யிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

விலை அணா எட்டு

(தபால் செலவு தனி)

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபால் செலவு தனி)

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம் :: மயிலாப்பூர், சென்னை**

# வட்ட மேஜை

## கவனக் குறைவு!

ஆகஸ்டு மாதம், பதினோராம் தேதியன்று காலை, ஒரு பிரைவேட் டாக்டரிடம் எனது இரண்டு வயது நிரம்பிய ஆண் குழந்தைக்கு நல்ல ஜுரமடித்ததால் சிகிச்சைக்காக அழைத்துப் போனேன். அவர் குழந்தைக்கு டிப்திரியா என்னும் வியாதி கண்டிருப்பதாகவும் ஆரம்ப நிலையில் இருப்பதால் உடன்டியாகத் தகுந்த சிகிச்சை செய்தால் அபாயமில்லையென்றும் கூறினார். சர்க்கார் ஆஸ்பத்திரியில் என். ஜி. ஓ. சிப்பந்திகளுக்கு இலவச வைத்திய உதவி கிடைக்குமாதலால் உடனே சர்க்கார் பெண்கள், குழந்தைகள் ஆஸ்பத்திரியில் சேர்த்து விடும்படியும் அவர் என்னிடம் கூறினார்.

11-8-53 மாலை சர்க்கார் ஆஸ்பத்திரியில் சேர்த்தோம். அந்த நேரம் டாக்டர் யாரும் இல்லை. நர்ஸ்கள் இஞ்செக்ஷன் இருமுறை கொடுத்தனர். இரவு எட்டரை மணிக்கு அஸிஸ்டெண்ட் டாக்டர் வந்தார். அவரும் ஒன்றும் சொல்லவில்லை. மறுநாள் காலை ரெஸிடென்ஸி லேடி டாக்டர் வார்டுகளைப் பார்வையிட வந்தார். என் குழந்தை இருக்கும் அறைக்கு வெளியிலேயே நின்று கொண்டிருந்தார். நான் 'குழந்தை நேற்றையவிட இன்று மூச்சுவிடத் திணறுகிறான். பாலி தண்ணீர்கூடச் செல்லவில்லை' என்று சொன்னேன். அதை அவர் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. எனக்குப் பதிலும் சொல்லவில்லை.

அன்று மாலை மூன்றரை மணிக்குக் குழந்தை மூச்சுவிட ரொம்பவும் திணறினான். அதை வார்டு நர்ஸிடம் கூறினேன். 'எல்லாம் சரியாய்விடும். நேற்றைய தினத்தைவிட இன்று குணம் எங்களுக்குத் தெரிகிறது. நீ சும்மா இரு' என்று கூறினார். குழந்தையின் நிலையைக் கண்டு பயந்து நர்ஸிடம் டாக்டரை அழைத்து வருமாறு பல முறை கெஞ்சிக் கேட்கவே, அந்த நர்ஸ் தூக்க மருந்தைக் குழந்தைக்குக் கொடுத்தார். குழந்தை குடிக்கவே மறுத்தான். வலுவில் மருந்தைப் புகட்டி விட்டுப் போய் விட்டாள். தூக்க மருந்து டாக்டருடைய அபிப்பிராயத்தின் பேரில் கொடுத்ததாகத் தெரியவில்லை. குழந்தை கொஞ்ச நேரம் கஷ்டப்பட்டு விட்டுப் பிறகு தூங்க ஆரம்பித்தான். அன்று இரவு தூங்கியபடியே அவன் ஆவி பிரிந்துவிட்டது.

நோய் ஆரம்ப தசையிலேயே இருந்தும், வேண்டிய சிகிச்சை செய்யாததால், கவனக் குறைவால் என் குழந்தையை இழக்கும்படி நேர்ந்துவிட்டது.

என் குழந்தையை அட்மிஷன் செய்வதற்கு ஒரு வாரம் முந்தி சர்க்காரில் வேலையில் இல்லாத ஒருவரின் குழந்தைக்குஇதே டிப்திரியா கண்டு, பெரிய ஆஸ்பத்திரியிலிருந்து இ. என். டி. சர்ஜனை வரவழைத்து ஆபரேஷன் செய்ததால் குழந்தைக்குச் சௌகரியமாகி விட்டது. அதைப் போல் என் குழந்தையையும் ஏன் கவனித்திருக்கக் கூடாது? காரணம் 'இவர்கள் என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர்கள். இலவச வைத்தியம் செய்ய வேண்டுமே' என்று தோன்றி இருக்கலாம். இலவச சிகிச்சையை நாங்கள் எதிர்பார்ப்பவர்கள் என்ற அபிப்பிராயம் இருக்கலாம். சர்க்கார், என். ஜி. ஓ.க்களுக்கு இரங்கிச் சலுகை கொடுத்திருந்தும் ஆஸ்பத்திரி அதிகாரிகள் அச்சலுகையை வழங்கச் சிறிதும் இஷ்டப்படவில்லை போலும்!

திருநெல்வேலி
22—9—53

என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர் மனைவி

## புளுகின் எவரெஸ்ட்!

பலி புல்லைத் தின்று விட்டது; மச்சம் மண் மேல் வாழ முடியும்; குதிரைக்குக் கொம்பு உண்டு! ஏன் திகைக்கிறீர்கள் — நகைக்கிறீர்கள்! பொய் என்றா! இதைவிட மாபெரும் புளுகு! புளுகின் எவரெஸ்ட்! என்னவென்று கேட்கிறீர்களா! கேளுங்கள். அதுதான் இது. 1947-ல் திரு ம. பொ. சி. அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட தமிழரசுக் கழகக் கூட்டத்தில் மறைந்த தமிழ்த் தலைவர் திரு. வி. க. அவர்கள் திராவிட முழக்கம் செய்தாராம்! இந்த மாபெரும் பொய்யைப் பிரசுரித்தது ஒரு பத்திரிகை. திரு. வி. க. மட்டும் உயிரோடிருந்தால் இந்த ஈனச்செயலை நான் செய்யவில்லை; செய்யவும் மாட்டேன் என்று மறுப்பை அவர்களுக்கு அளித்திருப்பார். திரு. வி. க. வின் பிறந்த தின விழாவின்போது அவர் படம் மட்டும் போட்டு விட்டு வாலாட்டாமல் வாளாவிருந்த அப் பத்திரிகை எப்போது இறப்பார் என்று எதிர்பார்த்து, இறந்தவுடன் இந்தப் புளுகை அடுக்கு மொழியாய்ப் பிரசுரித்து உள்ளது. இதே போல்தான் வந்தேமாதரம் என்ற தாரக மந்திரத்தைத் தன் வாழ்நாள் பூராவும் முழங்கி இறக்கும் போதுகூட வெள்ளையன் ஆட்சி என்று வீழுமோ என்று குரல் கொடுத்து வந்தேமாதரம் என்ற வீர மொழி கேட்டு உயிர் நீத்த செம்மல், கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி.யை பிரிட்டிஷ் தாஸர்கள் தங்களைச் சார்ந்தவர் என்று பேசினார்கள்! திரு. வி. க. ஆதி முதல் அந்தம்வரை திராவிட நாட்டுக் கொள்கையைக் கண்டித்துள்ளார்; எழுதியுள்ளார்.

இது வள்ளுவன் பிறந்த நாடு என்பது ஞாபகம் இருக்கட்டும். திரு. வி. க. அவர்கள் தம்முடைய தமிழ்த் தென்றல் என்ற நூலில் சொல்லுகிறார் :—

" ஆரியர் தென்னாடு போந்த காலம், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு மேற் கடந்ததென்று சரித்திரம் சொல்லுகிறது. ஐயாயிரம் ஆண்டுகளாக நிலைத்து வாழ்ந்து வரும் மக்களாகிய ஆரியர்க்கும் இந் நாட்டுப் பழங் குடிகளான திராவிடர்க்கும் கலப்பு நிகழாதிருக்க முடியுங்கொல்! சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் நமது நாடு போந்த ஐரோப்பியர்க்கும் நம் நாட்டவர்க்கும் கலப்பு நேர்ந்தது! அதன் பயனாகத் தனி வகுப்பு ஒன்று நமது நாட்டில் தோன்றி யிருக்கிறது.

இன்று தம்மைத் தூய ஆரியரெனக் கருதுவோர் உடலில் திராவிடக் குருதியும், அவ்வாறே தம்மை சுத்தத் திராவிடர் எனக் கருதுவோர் உடலில் ஆரிய ரத்தமும் பாய்ந்து கொண்டிருப்பதை ஊன்றிப் பார்க்க நேரம் இல்லை போலும்!"

இதுமட்டுமல்ல; 24—1—53ல் நடந்த தமிழரசுக் கழக மகாநாட்டில் திரு. வி. க. தலைமை வகித்துப் பேசினார்: "எல்லோரும் வடக் கெல்லையைக் கடினத்துடன் போராடிச் சேர்த்துத் தமிழகம் அமைக்கப் பாடுபடுவோம். அதற்குச் சிவஞானம் உற்ற தலைவர், தேச பக்தர், தமிழ்ப் பண்பாடு மிக்கவர். அரசு அமைப்பதற்கு அருள் மொழி வழங்கியுள்ளோர் பல தமிழறிஞர்கள். அந்த அருளாட்சியை அமைக்கத் தமிழரசுக்கழகம் சார்பில் அமைக்க வேண்டுமாய் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்" என்று பகர்ந்தார்.

ஆகையால் திரு. வி. க. இறந்தபின் அவதூறு பேச்சைத் திரித்து இந்த மாதிரிப் புளுக வேண்டாம்.

இராசிபுரம்
1—10—52

வெ. சக்கேதராமன்.

# அன்பு வெள்ளம்

*சரஸன்*

"சம்பந்தம், என்னை உன் பெற்றெடுத்த தாய் என்று மதிப்பதாயிருந்தால், நான் சொல்லிறபடி நீ கேட்க வேண்டும்" என்று மகனுக்கு உணவு பரிமாறிக் கொண்டே சொன்னாள் அவன் தாயார் தனலட்சுமி.

"அம்மா! தெரியும் உன் கருத்து. அது மட்டும் என்னால் செய்ய முடியாது. வீண் பிடிவாதம் செய்யாதே. நான் அந்த ஆசாமிக்கு அனுப்பப் போவதில்லை. எனக்கு இஷ்டமில்லாததைச் செய் என்று வற்புறுத்தி என்ன பயன்! என் கையால் அழைப்பிதழின்மேல் அவருடைய பெயரை எழுத முடியாது" என்றான் உறுதியுடன் சம்பந்தம்.

தாயார் விடவில்லை. "கொஞ்சம் நினைத்துப் பாரடா! இன்று நாம் உண்ணும் இந்த உணவு யாருடைய பேருதவியால் என்று சற்று யோசித்துப் பார்! இந்த அர்த்தமற்ற வைராக்யத்தை விட்டொழித்து என் சொல்லைத் தட்டாமல்......" என்று மேலும் தொடர்ந்தாள்.

"அம்மா! உன் உபதேசம் போதும்!" என்று சொல்லிச் சட்டென்று எழுந்து, கை கழுவிக் கொண்டு வெளியே போய்விட்டான் சம்பந்தம்.

தனலட்சுமிக்கு ஒரே அருமை மகன் சம்பந்தம். அவள் சொல்லை அவன் இதுவரை தட்டியவனே அல்ல. அப்படிப்பட்டவன் அன்று தன் கல்யாண அழைப்பிதழை அருணகிரிக்கு அனுப்ப மாட்டேன் என்று மறுத்தது அவளுக்குச் சொல்லொணா மனத்துயரை அளித்தது. சம்பந்தத்துக்கு அருணகிரி செய்திருக்கும் உதவியைப் பற்றி ஒரே அதிசயத்துடன் பேசிப் புகழ்ந்திருக்கிறது. அப்படிப்பட்டவருக்கு அவன் தன் மண அழைப்பிதழை அனுப்ப விரும்பாதது எத்தகைய நன்றி கெட்ட செயலாகும்! அதை நினைக்க நினைக்க ஏதோ பெரிய தகாத செயலைத் தன் மைந்தன் புரிவதாகவே அவளுக்குத் தோன்றியது.



* * *

தனலட்சுமி இருபத்திரண்டாவது வயதில் தன் கணவனை இழந்தாள். அப்போது சம்பந்தம் மூன்று வயதுக் குழந்தை. அவள் கணவன் ஓர் ஜில்லாபோர்டுப் பள்ளியில் ஆசிரியராயிருந்தவன். பிராவிடெண்ட் நிதி ஏதோ சொற்பம் கிடைத்தது தனலட்சுமிக்கு. தவிர, அவன் ஆயிரம் ரூபாய்க்குத் தன் ஆயுளை இன்ஷ்யூர் செய்திருந்தான். அந்தத் தொகையும் சேர்ந்து, தாயாரையும் குழந்தையையும் சிறிது காலம் போஷித்தது.

பணம் கரைந்தது நாட்களைப் போல. வேறு உற்றார் உறவினர் என்று ஆதரிக்கக் கூடிய நிலையில் அவளுக்கு யாரும் கிடையாது. எனவே அவ்வூரில் உள்ள பிரபல அச்சுக் கூட முதலாளியான அருணகிரியிடம் குழந்தையுடன் அடைக்கலம் புகுந்தாள். அவள் கணவன் இருந்த காலத்தில் அருணகிரியின் குழந்தைக்கு டியூஷன் சொல்லிக் கொடுத்து வந்தான். அந்தப் பழக்கத்தைக் கொண்டு, அவரை அணுகி உதவி வேண்டினாள் தனலட்சுமி. அருணகிரியும் மனமிரங்கி, அவளைத் தம் வீட்டில் சுற்று வேலைக்காக அமர்த்திக் கொண்டார். குழந்தையைத் தம்முடனே வைத்துக் கொள்ளவும் சம்மதித்தார்.

அருணகிரியின் மனைவி நீலாயதாட்சியும் தங்கமானவள். தனலட்சுமியை அன்புடனே நடத்தினாள். குழந்தை சம்பந்தத்திடம் பிரியமாயிருந்தாள். அவளை வேறாகப் பாவிக்கவில்லை.

அருணகிரிக்கு வெகுநாட்கள் குழந்தை இல்லாமல் அபூர்வமாய்ப் பிறந்தது ஓர் ஆண் குழந்தை. அதற்கு ஏறக்குறைய சம்பந்தத்தின் வயது தான் இருக்கும். சம்பந்தத்தின் தந்தை டியூஷன் சொல்லிக் கொடுத்ததும் அந்தக் குழந்தை பாலசுந்தரத்திற்குத்தான்.

அருணகிரி சற்றுக் கண்டிப்பானவர்; கொஞ்சம் முன் கோபி. ஆனால் குழந்தைகளுக்குச் செல்லம் கொடுக்க ஆரம்பித்தாரானால், அவரை மிஞ்சக்கூடியவர் யாருமில்லை. பாலசுந்தரம் சம்பந்தம் இருவரையும் அவர் இரு கண்களிலும் வெண்ணெயுடனேயே பார்த்து வந்தார்.

ஒருநாள் மாலை பள்ளியிலிருந்து திரும்பிய பாலசுந்தரம் தலைவலி என்று படுத்தான். அடுத்த நாள் மாலை அதே நேரத்தில் அவன் படுத்த படுக்கை வெறிச்சோடியது. பலநாள் தவங்கிடந்து பெற்ற அருமை மைந்தனைப் பத்து வயது வளர்த்துப் பறிகொடுத்த பெற்றோரின் பரிதாப நிலையைப் பார்த்து யார்தான் உருகமாட்டார்கள்! தனலட்சுமி தன் குழந்தையைப் பறிகொடுத்து விட்டதுபோலவே கதறினாள்.

அருணகிரி தம்பதிகள் இந்தப் பேரிடியிலிருந்து சமாதானமடையச் சில காலம் பிடித்தது. நாளடைவில், கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் தங்கள் துயரை மறக்கலானார்கள். அதற்கு அநுகூலமான சூழ்நிலையை ஏற்படுத்தினவன் சம்பந்தம்.

மகனைப் பறி கொடுத்த பின், சம்பந்தத்தையே தம் புதல்வனாய்க் கருதி, பரம பிரியத்துடன் அருணகிரி தம்பதிகள் வளர்த்து வந்தார்கள். செல்லமாக வளர்க்கப்பட்ட சம்பந்தத்தை ஸ்கூல் பைனல் தேறியதும் கல்லூரியில் சேர்க்க விரும்பினார் அருணகிரி. ஆனால் அவன் அதற்குச் சம்மதிக்கவில்லை. தான், அவருடைய அச்சுக் கூடத்தில் சேர்ந்து வேலைசெய்ய விரும்புவதாய்க் கூறினான். அதற்கு மாறு சொல்லாமல் அவன் விருப்பப்படியே செய்ய அநுமதி தந்தார் அருணகிரி.

• • •

இருபத்துமூன்று வயது நிரம்பி விட்ட சம்பந்தத்துக்கு நாலுபேரைப் போல கல்யாணம் செய்து பார்க்க வேண்டும் என்று தாயார் தனலட்சுமி விரும்பினாள். பேச்சிலே ஜாடையாய்த் தன் கருத்தையும் வெளியிட்டாள். அருணகிரியின் காதிலும் அது விழாமலில்லை.

"அம்மா! எனக்கும் எண்ணமுண்டு. என் தங்கை பார்வதியின் பெண் மணிமேகலையை முடிக்கலாம் என்று எண்ணியிருக்கிறேன்" என்றார் ஒருநாள் அருணகிரி.

மணிமேகலை என்றதும் தனலட்சுமிக்கும் முகம் மலர்ந்தது. மணிமேகலை அடிக்கடி மாமாவின் வீட்டுக்கு வருவதுண்டு. குழந்தை முகமும் விழியுமாய் ராஜாத்தி மாதிரி இருப்பாள். அவன் சம்பந்தத்துடன் சரளமாய்ப் பழகி விளையாடியிருக்கிறாள். அந்த ஜோடியை முதன் முதலில் பார்த்த பொழுதே தனலட்சுமிக்கு மனத்திலே சபலம் தட்டியது. ஆனால் வாய் திறந்து அவள் தன் விருப்பத்தை வெளிக் காட்டியது கிடையாது. காரணம், தாழ்வு மனப்பான்மைதான். அந்த நிலையில் அருணகிரியின் வாயாலேயே அந்தச் சொற்கள் வெளிவந்தன வென்றால் அவளுடைய மகிழ்ச்சிக்கு எல்லை இருக்க முடியுமா!

ஆனால் என்ன துரதிர்ஷ்டம்! திடீரென்று ஏதோ பண விஷயமான தகராறு ஏற்பட்டு விட்டது அருணகிரிக்கும் அவருடைய தங்கையின் கணவரான ரங்கநாதனுக்கும். அதைக் கூட அருணகிரி பெரிது பண்ணவில்லை. ஆனால் ரங்கநாதன் பேச்சரை வரம்பு மீறி ஓட்டி விட்டார். விஷயமென்ன வென்றால், ரங்கநாதன் தம் நண்பர் ஒருவருக்கு ஆயிரம் ரூபாய் கடன் கொடுத்து உதவுமாறு அருணகிரிக்குச் சிபார்சு செய்திருந்தார். தங்கையின் கணவர் சிபார்சு செய்கிறாரே என்று பணம் கொடுத்தார் அருணகிரி. குறிப்பிட்ட காலத்தில் அந்த நண்பர் பணத்தைத் தரவில்லை. ஏழெட்டு கெடுக்களும் தாண்டி, பணம் வராமற் போகவே, அருணகிரி ரங்கநாதனிடம் விஷயத்தைச் சகஜமாய்ப் பிரஸ்தாபித்தார். ஆனால் ரங்கநாதன் விஷயத்தைக் குத்தலாய் எடுத்துக் கொண்டார். "ஆயிரம் ரூபாய் பிரமாதமில்லை. இதோ இப்போதே பைசல் செய்கிறேன். இந்தாரும், உம்முடைய பணம்! புரோநோட்டைக் கிழித்துக் கொடும், என்னிடம்!" என்று படபட வென்று பேசிப் பணத்தை எண்ணி வைத்து விட்டார் ரங்கநாதன்.

யாருக்கும் தன்மானம் என்பது உண்டல்லவா! தாம் சகஜமாய்க் கேட்க, ரங்கநாதன் படபட வென்று ஆத்திரத்துடன் பேசி விட்டது கண்டு, அருணகிரிக்கும் கோபம் வந்து விட்டது. "நல்லவர்களுக்குக் காலமேது!" என்று கூறி விட்டு வந்து விட்டார். அந்தச் சமயம்தான் சம்பந்தத்துக்கு மணிமேகலையை மணம் முடிப்பது என்று நிர்மானித்திருந்தார் அவர். அந்தச் சம்பவத்துக்குப் பின், அவருடைய பேச்சிலும் போக்கிலும் மாறுதல் ஏற்பட்டிருப்பதைத் தனலட்சுமியும் நீலாயதாட்சியும் கண்டார்கள். வெண்ணெய் திரண்டு வரும் சமயத்தில் தாழி உடைந்தது போலிருந்தது.

அந்தச் சம்பவத்திற்குப் பின், மணிமேகலை மாமாவின் வீட்டுக்கு வருவது நின்று போயிற்று. அதனால் அவளுக்கு ஏற்பட்ட தாபம் கொஞ்சமல்ல. அதைவிட அதிகத் தாபத்தை அடைந்தான் சம்பந்தம். மணிமேகலையைத் தன் வாழ்க்கைத் துணைவியாக அடையப் போகிறோம் என்று கற்பனை செய்து மகிழ்ந்து கொண்டு நடமாடிய சம்பந்தம், தன் குடும்பத்திற்கும் மணிமேகலையின் குடும்பத்திற்குமிடையே ஏற்பட்ட பிணக்குக் காரணமாய் உள்ளம் ஒடிந்து போனான். அற்ப விஷயத்திற்காக அருணகிரி அம்மாதிரி நடந்து கொண்டது அவனுக்கு ஆச்சரியத்தையும் அதே சமயத்தில் வெறுப்பையும் அளித்தது.

ஒருநாள் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "மாமா! இந்தச் சின்ன விஷயத்திற்காக அவர்களிடம் வைராக்கியத்துடன் நடந்து கொள்வது..." என்று ஆரம்பித்தான் சம்பந்தம். அவன் வாக்கியத்தை முடிக்கக்கூட இல்லை. அதற்குள் வந்து விட்டது கோபம் அருணகிரிக்கு.

"சம்பந்தம்! உன்னைவிட எனக்கு அநுபவமும் புத்தியும் அதிகம் என்பதை மறந்து விடாதே. எனக்குத் தெரியும், யார் யாரிடம் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று! அதிகப்பிரசங்கித்தனமாய் நடந்து கொண்டு என் ஆத்திரத்தைக் கிளப்பாதே!" என்று கடிந்து கொண்டார்.

அருணகிரி பலமுறை சம்பந்தத்தைக் கண்டித்ததுண்டு. கடுமையாய்ப் பேசியதும் உண்டு. அந்தச் சமயங்களிலெல்லாம்கூட அவன் அந்தளவு வருந்





“காமாக்ஷிக்கு உன் பேரில் ரொம்பக் கோபம். அவள் எழுதின கடிதத்துக்கு நீ பதிலே போடவில்லையாமே!”
“நான் பதில் போடுகிற வழக்கமே கிடையாதே, பாட்டி!”
“அடே! அதையாகிலும் ஒரு வரி அவளுக்கு எழுதக் கூடாதோ?”

---

நியது கிடையாது. ஆனால் அந்தத் தடவை அவர் கூறியது அவனை வாட்டியது. ஏன்! சற்றுக் கோபத்தைக் கொடுத்தது என்று கூடச் சொல்லலாம். எனினும் பொறுத்துக் கொண்டான்.

மற்றொரு நாள் அவன் மணிமேகலையின் வீட்டுக்குச் சென்றதைக் கண்டார் அருணகிரி. திரும்பி வந்ததும், அவர் போட்ட இரைச்சல் வீடே அதிரும்படி யிருந்தது.

“அடே! நான் வைரம் பாராட்டும் வீட்டில் உனக்கென்னடா வேலை! என்னால் உனக்கு அவர்களுடன் பழக்கமா அல்லது அவர்களால் நானா! நீ செய்வது சிறிதும் நன்றாய் இல்லை. என் விருப்பத்தைத் தெரிந்து கொண்டு, நீ எதையும் செய்வதாய் இருந்தால்தான்......” என்றார்.

குமுறிக் கொண்டிருந்த ஆத்திரம் பீறிக்கொண்டு வெளிப்பட்டது சம்பந்தத்துக்கு.

“மாமா! போதும். அதிகமாய்ப் பேசவேண்டாம். இதோ இப்போதே வீட்டை விட்டுக் கிளம்பி விட்டேன். நீங்கள் எனக்குச் செய்திருக்கிற உதவிகளுக்கெல்லாம் என் நன்றி” என்று கூறிவிட்டுத் தாயாரையும் அழைத்துக் கொண்டு வெளியேறினான் சம்பந்தம். தாயார் எவ்வளவோ சமாதானம் செய்தாள். பயனில்லை. அவளும் அவனுடன் பின் தொடரத்தான் நேர்ந்தது.

நேராக மணிமேகலையின் வீட்டுக்குச் சென்றான் அவன். விஷயத்தை அறிந்த ரங்கநாதன், மகிழ்ச்சியுடன் அவனையும் அவன் தாயாரையும் வரவேற்றார். காரணம், அவன் அருணகிரியின் வீட்டிலிருந்து சண்டை போட்டுக் கொண்டு கிளம்பினான் என்பது ஒன்று. தங்கள் சச்சரவு காரணமாக ஏற்கெனவே முடிவு செய்யப்பட்ட கல்யாணம் எங்கே நின்று போய்விடுமோ என்று ஏங்கிய சமயத்தில், சம்பந்தமே தம் வீட்டுக்கு வந்து விட்டது மற்றொன்று. சம்பந்தத்தை மாப்பிள்ளையாக அடைவதில் ரங்கநாதன் தம்பதிகளுக்கும் சரி, அவனைத் தன் கணவனாய்ப் பெறுவதில் மணிமேகலைக்கும் சரி, பெரும் மகிழ்ச்சிதான்.

நடந்ததை யெல்லாம் மன்னித்து மறந்துவிடும்படி, அருணகிரியை வேண்டிக் கொள்ள வேண்டும் என்று தனலட்சுமிக்கு ஏக ஆதுரம். தன்னுடைய நிராதரவான நிலையில் தன்னையும் தன் மகனையும் அவர் எப்படிப் போஷித்தார் என்பது அவளுக்கல்லவா தெரியும்!

தனலட்சுமிக்கு ரங்கநாதனின் வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. முள்ளின்மேல் இருப்பது போல் இருந்தது. எனவே தன் மைந்தனிடம் மன்றாடித் தனிக் குடித்தனம் வைக்க ஏற்பாடு செய்தாள். எனினும், சம்பந்தம் மட்டும் அடிக்கடி மணிமேகலையைப் பார்க்கச் சென்று வந்தான்.

அருணகிரியின் வீட்டை விட்டு வெளியேறிய மறுநாளே, அச்சுத் தொழிலின் நுணுக்கங்களை நன்கு அறிந்தவனாதலால், சம்பந்தம் அடுத்த ஊரில் உள்ள வேறொரு பிரபலமான அச்சகத்தில் வேலை சம்பாதித்துக் கொண்டான்.

ஒரு நாள் பேச்சுவாக்கில், ரங்கநாதனிடம், “மாமா! அந்த மனிதருக்குக் கொஞ்சமும் மனித இருதயம் கிடையாது. உங்களுடன் அவருக்கு மனஸ்தாபம் இருக்கலாம். அதற்காக, நான் உங்கள் வீட்டுக்கு வருவது கூடாது என்றால் என்ன அர்த்தம்! அவர் பெருந்தன்மை யுள்ளவராய் இருந்தால், ‘ஏதோ, மணிமேகலையை உத்தேசித்துத்தானே அங்கு போகிறான்! நாமும் ஏற்கெனவே மணிமேகலையை இவனுக்கு மணம் முடிக்கத் திட்டம் போட்டிருக்கிறோமே! அவர்களுள் ஏற்பட்ட பாசத்தைத் தடை செய்வது தகாது’ என்று எண்ணியிருக்க வேண்டாமா!” என்றான் சம்பந்தம்.

“அவ்வளவுதான் மனிதனுக்குத் தெரிந்த லட்சணம்! விட்டுத் தள்ளு!” என்றார் ரங்கநாதன்.

கல்யாண ஏற்பாடுகள் தடபுடலாய் நடக்கலாயின. ரங்கநாதன் மனைவி பார்வதிக்கு ஒன்றும் புரியவில்லை. அண்ணனை எதிர்த்துக் கொண்டு கல்யாணம் நடத்துவதா!

எத்தனை மன்றாடியும் மகன் அருணகிரிக்கு அழைப்பிதழ் அனுப்ப இணங்காமற் போனது தனலட்சுமிக்கு மிகவும் மனவேதனையை அளித்தது. ஆயினும் அவள் என்ன செய்ய முடியும்!

* * *

முகூர்த்தத்தன்று பந்தலில் கூட்டம் பிரமாதமாய் இருந்தது. தாலி கட்டப் போகும் சமயம். மேள வாத்தியக்காரன் கெட்டி மேளம் வாசித்தான். சம்பந்தம் தாலியை மணிமேகலையின் கழுத்திலே முடித்துக் கொண்டிருந்தான்.

பந்தலில் ஒருவர் சொல்லிக் கொண்டிருந்தார்: “பாவம்! பெண்ணுக்கு ஒரே மாமன், அருணகிரி! உள்ளூரிலேயே இருக்கிறார். அவரை அழைக்காமல் கல்யாணம் நடக்கிறது. இதைவிட்டால் வேறெந்த மருமகளின் கல்யாணத்தைப் பார்க்கப் போகிறார்! அவர் பேரில் இவர்கள் இத்தனை வைரம் பாராட்டியிருக்கக் கூடாது. அவரை அழைக்காமல் நடத்துவது தகாது. என்ன சொல்கிறீர்கள்!” என்றார்.

பக்கத்தில் இருந்தவர் பதில் கூறுமுன் புதுக் குரல் கேட்டது: “என்ன ஐயா! என்னை அழைக்கா விட்டால் நான் வரப் பாத்தியதை

இல்லையா! இந்தக் கல்யாணம் என் குழந்தைகளின் கல்யாணம். என் வீட்டுக் கல்யாணத்திற்கு என்னை யார் அழைக்க வேண்டும்!"

எல்லாரும் குரல் வந்த திக்கை நோக்கினார்கள். என்ன ஆச்சரியம்! அருணகிரிதான் அங்கே உட்கார்ந்திருந்தார். அவர் முகத்திலே ஆனந்தம் பொங்கிக் கண்ணிலே நீராய்ச் சுரந்து வழிந்து கொண்டிருந்தது.

எல்லாரும் வியப்புடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். விஷயத்தை அறிந்த ரங்கநாதனும் பார்வதியும், தனலட்சுமியும் அயர்ந்து போய், ஆவேசம் வந்தவர்களைப் போல் அருணகிரியிடம் பாய்ந்து வந்தார்கள்.

"அண்ணா!"

"அருணகிரி!"

"மாமா!"

மூன்று குரல்களும் ஏககாலத்தில் ஒலித்தன. ஒருவருக்கும் பேச நாவெழவில்லை.

"அருணகிரி! என்னை மன்னித்துவிடு. உன் பெருந்தன்மை எனக்கில்லையே! என்ன மதியீனமான காரியம் செய்தேன்!" என்றார் ரங்கநாதன்.

"அண்ணா! என் கவலையை நீக்கினாயே, இப்போதுதான் கல்யாணம் பூர்த்தியாயிற்று. எங்கள் கடத்தையைப் பொருட்படுத்தாமல், நீ வந்து சேர்ந்தாயே!" என்றாள் பார்வதி.

"மாமா! என் வயிற்றில் பாலை வார்த்தீர்களே!" — தனலட்சுமியால் மேலே பேசமுடியவில்லை. உணர்ச்சி வசப்பட்டுப் போனாள்.

இதற்குள் சம்பந்தம் கழுத்தில் மாலையுடன் பாய்ந்து வந்து, அருணகிரியின் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து, அவர் காலைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு வணங்கினான்.

"மாமா! நான் துரோகி! தங்கள் மன்னிப்புக்குக்கூட அருகதை அற்றவன். நன்றி கொன்ற பாவி!" என்று கலங்கி நின்றான். மணிமேகலையும் மாமாவின் காலில் பணிந்து நமஸ்கரித்தாள்.

"குழந்தைகளே! எழுந்திருங்கள். நீங்கள் க்ஷேமமாய், நீடூழி வாழ ஆண்டவன் அருள் செய்வான். சம்பந்தம், வருந்தாதே! நீ ஒன்றும் தகாத செயல் செய்துவிடவில்லை, உன்னை மன்னிப்பதற்கு! உன் வயதில் யாரும் செய்யக் கூடியதைத்தான் நீ செய்தாய். நானும் ரங்கநாதனும் மனஸ்தாபப்பட்டதால், எங்கே மணிமேகலையை மணக்க முடியாமல் போய்விடுமோ என்று எண்ணித்தான் நீ சற்று ஆத்திரமாய் நடந்துகொண்டாய். உன்னை என் பிள்ளையைப்போல் வளர்த்துப் பெண்ணையும் நிச்சயம் செய்து, உங்கள் கல்யாணத்துக்கு வராமலிருந்துவிடுவேனா! யாரோ இங்கு எனக்குப் 'பத்திரிகை அனுப்பாததைப் பற்றிக் குறையாய்ச் சொன்னார்கள். யாருக்கு யார் பத்திரிகை அனுப்புவது! நீயும் என் குழந்தை, மணிமேகலையும் என் குழந்தை. உங்கள் இருவருக்கும் நிச்சயம் செய்தவன் நான். என் விருப்பத்தின்படி தான் எல்லாம் நடந்திருக்கிறது. ஏதோ அற்ப விஷயத்தைப் பொருட்டாகக் கொண்டு, கல்யாணத்துக்கு வராமலிருந்து விடுவேன் என்று எண்ணுவது பைத்தியக்காரத்தனம். வைரமும் வைராக்கியமும் மனிதனைக் கீழே தான் தள்ளும். அவைகளை விட்டொழிப்பவன் தான் மனிதத் தன்மையைப் பெறுகிறான்" என்று தம்பதிகளை அன்பு பொங்க ஆசீர்வதித்தார் அருணகிரி.


## கல்கி தீபாவளி மலர் • 1958

தலைசிறந்த எழுத்தாளர்கள், கவிஞர்கள், தலைவர்கள் இவர்களின் அருமையான கதைகள், கவிதைகள், கட்டுரைகளுடனும் பிரபல சித்திரக்காரர்களின் கண் கவரும் பல வர்ணச் சித்திரங்கள், ஹாஸ்யச் சித்திரங்களுடனும் "கல்கி" தீபாவளி மலர் நவம்பர் மாதம் 5-ந் தேதி தீபாவளித் திருநாளில் மணம் வீசித் திகழும். இருநூறு பக்கங்களுக்கு அதிகமான இம்மலர் முழுவதும் ஆர்ட் காகிதத்தில் அச்சாகிறது.

**விலை ரூ. 5 - 0 - 0**

உங்கள் தேவைக்கு உள்ளூர் கல்கி ஏஜண்டுகளிடம் முன் கூட்டியே பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம்.

தபால் மூலம் பெற விரும்பும் நேயர்கள் ரிஜிஸ்தர் சார்ஜ் உள்பட கீழ்க்கண்ட விகிதப்படி பணம் அனுப்ப வேண்டுகிறோம். வி. பி. பி. மூலம் அனுப்ப இயலாது

| | | | | |
|---|---|---|---|---|
| உள்நாடு, இலங்கை ... | ... ரூ. | 5 | 8 | 0 |
| பர்மா, மலேயா, இதர வெளிநாடுகள் | ... ரூ. | 5 | 14 | 0 |

மானேஜர் : கல்கி காரியாலயம் கீழ்ப்பாக்கம், சென்னை - 10


① ஸ்ரீ பிரகாசம், முதன் மந்திரி ஆவதற்காக எடுத்துக் கொண்ட பெரு முயற்சிகளினால் களைப்புற்று இளைப்பாறுகிறார்.
② ஆந்திர கேசரிக்கு வேண்டிய உணவுப்பொருள்கள் வருகின்றன!
③ சர்க்கார் காரியாலய சிப்பந்திகள் மேலிடத்து உத்தரவுப்படி எல்லாவற்றையும் மூன்றில் ஒரு பங்கு வீதம் சரியாகப் பிரிக்கப்படுகின்றனவா என்று பார்க்கிறார்கள்!
④ அதிகாரிகள் தங்கள் வேலைகளை மும்முரமாக நடத்தத் தொடங்கியிருக்கிறார்கள்!
⑤ ...ஆந்திர ராஜ்யத் தலைநகருக்குச் சூரிய அடுப்பு வந்தால் சிறுவரப் பிரசாதமாகக் கொள்வார்கள்...
⑥ கர்நூலுக்கு வந்தவர் ஹோட்டல்களில் அமித விலைகளைக் கண்டதும் ஓட்டம் பிடித்தனர்!
சாப்பாடு 1-8-0
பாயசத்தோடு 2-8-0

பிரபல பம்பாய் போக்குவரத்து ஸ்தாபன அதிபர் கூறுகிறார்:

# ‘என்ஜின்களில் கரி படிவதில்லை, செலவினங்களும் குறைகின்றன’

## காரணம்

# முச்செயல்-திறனுள்ள மோபிலாயில் தான்



எங்கள் டிரக்குகள் ஒவ்வொன்றும் பிரதி தினமும் சராசரி நூறு மைல்கள் ஓடுகின்றது, ஆகவே ஒரு ஹெவி டியூடி என்ஜின் அத்யாவசியம் என்று கருதுகிறோம். மோபிலாயில் எங்கள் என்ஜின்களில் கரி படியாமல் பாதுகாக்கிறது. தவிர முச்செயல் திறனுள்ள மோபிலாயில் உபயோகிப்பதினால் எங்கள் செலவினங்களும் நிச்சயமாகக் குறைவதை அறிகிறோம்.

பாகஸ்தர், ஓபான் டிரான்ஸ்போர்ட் கம்பெனி, பம்பாய்

45 டிரக்குகளை வைத்து நிர்வகிக்கும் ஓபான் டிரான்ஸ்போர்ட் கம்பெனியார் உங்களுக்கு அதிக லாபம் பெற வழிகாட்டுகின்றனர்! அவர்களது வழியை பின்பற்றுங்கள். உங்கள் என்ஜினுக்கும் முச்செயல் திறனுள்ள மோபிலாயிலையே கேட்டு வாங்குங்கள். பறக்கும் செங்குதிரையின் சின்னம் உள்ள இடத்திற்குப் போய் இன்றே மோபிலாயில் வாங்கி நிரப்புங்கள்.

மோபிலாயில் ஒரு ஹெவி டியூடி மோட்டார் என்ஜின், ரெகுலர் அல்லது பிரீமியம் டைப் என்ஜின்களைவிட அதிகமான பாதுகாப்பு தருகின்றது. இந்த என்ஜின் மூன்று வழிகளில் உங்கள் பணத்தை மிச்சப்படுத்தும்:—

**தேய்மானத்தைக் குறைக்கிறது**—எல்லா சீதோஷ்ண நிலைமைகளிலும் ஒழுங்காக லூப்ரிகேட் செய்கிறது.

**ரிப்பேர் செலவுகளைக் குறைக்கிறது**—என்ஜினில் ஹானிகரமான கரி படியவிடுவதில்லை.

**பெட்ரோல் செலவைக் குறைக்கிறது**—உலோக பாகங்களை ஆசிட்டுகள் அரித்து விடாமல் தடுத்து, சக்தி வீண் போகாமல் பாதுகாக்கிறது.







# முச்செயல்-திறனுள்ள மோபிலாயில்

அதிகமான மோட்டார்க்காரர்கள் உலகில் வேறெந்த மோட்டார் ஆயிலையும்விட இதையே விசேஷமாக உபயோகித்து வருகின்றனர்

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது) V 7850



# விளம்பரதாரர்களே....

## நீங்கள் உபயோகிக்கும் பத்திரிகையைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள்!

ஒரு விளம்பரதாரர் என்ற முறையில் நீங்கள் விளம்பரத்திற்குச் செலவழிக்கும் ஒவ்வொரு ரூபாய்க்கும் எவ்வளவு வாசகர்களைப் பெறுகிறீர்கள் என்பதை நீங்கள் அறியவேண்டியது மிக அவசியம்.

இந்தியா, பாகிஸ்தான், சிலோன் ஆகிய நாடுகளில் 13 பாஷைகளில் நடத்தப்படும் 125-க்கு மேற்பட்ட பிரதான பத்திரிகைகள் இப்போது ABCஎன்று சொல்லப்படும் ஆடிட் பீரோ ஆப் சர்க்குலேஷன் என்ற ஸ்தாபனத்தில் அங்கம் வகிக்கின்றன. இவைகளின், பத்திரிகை விற்பனைக் கணக்கு எந்த சமயத்திலும் இந்த ABC ஸ்தாபனத்தின் ஆடிட்டர்களால் சரி பார்க்கப்பட்டு ஸ்தாபனத்தின் அங்கத்தினர்களுக்கு மட்டும் ஆறு மாதத்திற்கு ஒரு முறை அந்தரங்கமாக பத்திரிகை விற்பனை சர்டிபிகேட்டுகள் அனுப்பப்படுகிறது.

உங்கள் விளம்பரத்திற்கு உபயோகிக்கும் பத்திரிகையைப் பற்றிய உண்மையான விற்பனை தணிக்கையை நீங்கள் அறிய விரும்பினால், நீங்களும் ABC ஸ்தாபனத்தில் அங்கத்தினர் ஆவதற்கு இன்றே எழுதுங்கள்.

### ஆடிட் பீரோ ஆப் சர்குலேஷன்ஸ் லி-ட்.

முபாரக் மன்ஸில். அபோலோ தெரு

கோட்டை, பம்பாய்

மேற்கண்ட விளம்பரதாரர்களும் விளம்பர ஏஜண்டுகளும் ஏற்கெனவே ABC யின் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்.

**விளம்பரதாரர்கள்—**

அல்லைடு போட்டோகிராபிக்ஸ் லி-ட்., இ. எம். ஆல்காக் அண்டு மொஹாட்டா லி-ட்., ஆஸ்ப்ரோ லி-ட்., இங்கிலாந்து. அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லி-ட்., பாமர் லாரி கோ., லி-ட்., பம்பாய் மியூச்சுவல் லைப் அஷ்யூரன்ஸ் சொஸைட்டி லி-ட்., பூட்ஸ் ப்யூர் ட்ரக் கோ. (இந்தியா) லி-ட்., பர்மாஷெல் ஆயில் ஸ்டோரேஜ் டிஸ்ட்ரிபியூட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லி-ட்., கால்டெக்ஸ் (இந்தியா) லி-ட்., ஸெண்ட்ரல் டீ போர்டு. கார்ன் ப்ரொடெக்ஸ் கோ. (இந்தியா) லி-ட். டன்லப் ரப்பர் கோ. (இந்தியா) லி-ட். கிளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) லி-ட். கோத்ரெஜ் பாய்ஸ் மானுபாக்சரிங் கோ., லி-ட்., இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லி-ட்., இம்பீரியல் டுபாகோ கோ. ஆப் இந்தியா லி-ட்., இந்தியா டயர் அண்டு ரப்பர் கோ. (இந்தியா) லி-ட்., லிவர் பிரதர்ஸ் (இந்தியா) லி-ட்., லிப்டன் லி-ட்., நாஷனல் கார்பன் கோ. (இந்தியா) லி-ட்., பார்லி ப்ராடெக்ட்ஸ் மானுபாக்சரிங் கோ. லி-ட்., பஞ்சாபி சந்து ஹல்வாய் கராச்சிவாலா, ஷாலிமார் பெயிண்ட், கலர் அண்டு வார்னிஷ் கம்பெனி லி-ட்., டாடா ஆயில் மில்ஸ் கோ. லி-ட்., வால்கார்ட் பிரதர்ஸ்.

**விளம்பர ஏஜண்டுகள்—**

அட்வர்டைஸிங் ஸேல்ஸ் பிரமோஷன் கோ., எவரெஸ்ட் அட்வர்டைஸிங் லி-ட்., கிராண்ட் அட்வர்டைஸிங் இன்க். க்ரீன்ஸ் அட்வர்டைஸிங் சர்வீஸ் ஏஜண்ட்ஸ், டி. ஜே. கீமர் அண்டு கோ. லி-ட்., லிண்டாஸ் லி-ட்., நேஷனல் அட்வர்டைஸிங் சர்வீஸ் லி-ட்., பிரஸ் ஸிண்டிகேட் லி-ட்., ஸில்பி லிமிடெட். ஸிஸ்டாஸ் லி-ட்., எப். டி. ஸ்டூவர்ட் லி-ட்., எல். ஏ. ஸ்ட்ரோனக் அண்டு கோ. (இந்தியா) லி-ட்., ஜே. வால்டர் தாம்ஸன் கம்பெனி (ஈஸ்டர்ன்) லி-ட்.

இதைப் பிரசுரித்தவர்கள் :

ABC ஸ்தாபனத்தின் அங்கத்தினரான 'கல்கி' பத்திரிகை சொந்தக்காரர்கள்






ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழி பெயர்ப்பு : ரா. வி.

## 17. வழி மேல் விழி

மனோரமா உண்மையாகவே விசித்திர சுபாவம் படைத்த பெண்ணாக இருந்தாள். அவளுக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது என்பதை யாருமே சரியாக அறிந்து கொள்ள முடியவில்லை. அவள் தன் தாய் தந்தையருக்குச் செல்லப் பெண்ணாக வளர்ந்தவள்.

எனவே, அவள் எண்ணத்துக்கு எதிராக யாருமே நடந்து கொள்ள முயன்றதில்லை; நடந்து கொள்ள நினைத்ததும் இல்லை. ஆனால் இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் அவள் தனக்கு என்று ஒரு எண்ணமோ ஆசையோ இருப்பதாக ஞாபக மறதியாகக் கூடக் காட்டிக் கொள்வதில்லை. அவள் தாய் தந்தையருக்கு அடங்கிய பெண். அவர்களுடைய வார்த்தைக்கு அதிக மதிப்புக் கொடுத்து வந்தாள். நிர்ப்பந்தமான நிலைமை ஏற்பட்டால் ஒழிய அவள் யாரிடமும் வாய் திறந்து வார்த்தையாடுவதில்லை.

சிலர் அவளுக்குப் பிடித்தவர்களாக இருப்பார்கள். சிலர் அவள் மனத்துக்குப் பிடிக்காதவர்களாக இருப்பார்கள். யாருடனாவது அவளுக்குப் பேசப் பிடிக்கவில்லையென்றால் பேச்சுக் கொடுக்கவே மாட்டாள். தன் மனத்துக்குப் பிடித்தவர்களுடன் 'கலகல'வென்று டேசிக் கன ஸௌஜன்யமாகப் பழகுவாள். தன்மான உணர்ச்சி அவளுடைய உள்ளத்திலும் உடலிலும் வேண்டிய மட்டும் நிறைந்திருந்தது. அவள் இருதயத்திலே இடம் பெற்றிருந்த எளிமையும் மென்மையும் அவளுடைய தன்மான உணர்ச்சிக்கு அணி செய்பவையாகவே அமைந்திருந்தன. அவள் நல்ல உயரம். உயரத்துக்கேற்ற பருமன். சிவந்த மேனி; தளதளவென்று நிறைந்த தேகம். களை சொட்டும் முகம். காண்போரின் கண்களைக் கவரும் காரிகையாகத் திகழ்ந்தாள். அவளைப் பார்த்து விட்டவன் க்ஷணநேரமாவது நின்று அவளைப் பாராமல் நகரமாட்டான்.

இந்த வயது வரை கல்யாணமாகாத கன்னியாக அவள் இருக்க நேரிட்டதற்குப் பிரதானமான காரணம் அவளுடைய எண்ணம்தான். அவள் மட்டும் மனம் வைத்திருந்தால் அவளுக்கு எப்பொழுதோ கல்யாணமாகியிருந்திருக்கும். அவளுடைய ஆசைதான் அதற்கு இடையூறாக இதுவரை நின்று வந்தது.

ஹிந்து சமூகத்தில் அழகிய பெண்களுக்கு இன்றும் அலாதி மதிப்பு இருக்கத்தான் செய்கிறது. நல்ல குடும்பத்தார்களுடன் யாருமே சம்பந்தம் செய்து கொள்ள வேண்டும் என்று தான் விரும்புகிறார்கள். ராமலால் பரம்பரையான பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர் அல்லவா? ஆகவே, அவருடைய பொருளாதார நிலை அவ்வளவு தாழ்வுற்று விட்ட பொழுதிலும் கூட, அவருடைய பெண்ணை மணந்துகொள்ளப் பல பெரியதனக்காரர்கள் தயாராயிருந்தார்கள். ஏன்? ராமலால் நம் குடும்பத்துடன் சம்பந்தம் செய்து கொள்ள முன் வர மாட்டாரா என்று ஏங்கிய பணக்காரர்கள் கூட எத்தனையோ பேர் உண்டு. அதுமட்டும் அல்ல, அந்த ஆசையை வெளிப்படையாகக் காட்டி அவருடைய பதிலுக்காகக் காத்திருந்தவர்களும் பலர் உண்டு. ஆனால் எத்தனையோ பேரை ராமலாலுக்குப் பிடிக்கவில்லை. ராமலாலுக்குப் பிடித்த எத்தனையோ பேரைச் சுபத்திராவுக்குப் பிடிக்கவில்லை. ராமலாலுக்கும் சுபத்திராவுக்கும் பிடித்துக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று தவங் கிடந்த எத்தனையோ பேரை மனோரமாவுக்குப் பிடிக்கவில்லை. மணம் செய்து கொள்ள முடியாது என்று மனோரமா மறுத்த பேர்களும் ஒரு கணக்கில் அடங்காதவர்கள் தாம்.

மனோரமாவைப் பெண் பார்க்க வென்று எத்தனையோ பேர் வந்து போயினர். அவர்கள் போன பிறகு தன் மனத்துக்குப் பிடித்தவர்களாயிருந்தால் சுபத்திரா அவர்கள் பேச்சை எடுத்து மனோரமாவின் மனத்தைக் கிண்டிக் கிளர்ச்சி கொள்ளச் செய்ய முயல்வாள். ஆனால் மனோரமா எதற்கும் பிடி கொடுத்துப் பதில் சொல்வதில்லை.

"ஏன் மனோ! அன்றைக்கு வந்திருந்தானே, ஒரு பிள்ளையாண்டான்! கண்ணுக்கு லட்சணமாகச் செக்கச் செவேல் என்று

இல்லை? பேச்சைப் பார்த்தால் கன கெட்டிக்காரனாகவும் இருப்பான் போல் தோன்றுகிறதே! அவனை உனக்கு...'' என்பாள் சுபத்திரா எப்பொழுதாவது.

''கண்களுக்கு லட்சணமாகச் செக்கச் செவேல் என்று இருந்தால் என்ன? கண்களுக்கு அவலட்சணமாகக் கன்னங்கரேல் என்றிருந்தால் என்ன? நான் ஒன்றையும் காதில் வாங்கிக் கொள்ளக் காத்திருக்கவில்லை!'' என்று தெறித்தாற் போல் பதில் சொல்லுவாள் மனோரமா.

பெரிய பெரிய பரீட்சைகள் எல்லாம் கொடுத்துத் தேறிய வாலிபன் யாராவது வந்தால் ராமலாலின் நாட்டம் அந்த வரன் மீது செல்லும். 'அந்தப் பையனைத் தம் பெண்ணுக்குக் கணவனாகப் பிடித்துப் போட்டுவிட்டால் என்ன?' என்று எண்ணுவார். மனோரமாவின் மனத்தை அறிந்து கொள்ள வேண்டி, மனோரமா வீட்டில் இருக்கும் சமயமாகப் பார்த்து, ''அந்தப் பையன் இப்படிப்பட்டவனுக்கும், அப்படிப்பட்டவனுக்கும்'' என்று சுபத்திராவிடம் ஏகமாகப் புகழ்ந்து தள்ளுவார். மனோரமா அதைக் கேட்டுக் குறும்பாகச் சிரிப்பாளே யொழியப் பதில் ஏதும் பேச மாட்டாள்.

''ஏண்டி, சிரிக்கிறாய்? நன்றாகப் படித்த நல்ல யோக்கியப் பொறுப்பு வாய்ந்த பையன்கள் கிடைப்பது வெகு குறைவாக்கும்!'' என்பாள் சுபத்திரா.

''இருக்கலாம். படிக்கத் தெரிந்துவிட்டால் மட்டும் ஆயிற்றா? அந்த அழுமூஞ்சிப் பிள்ளையை யார் கல்யாணம் செய்து கொள்வார்கள்? அவன் அழகைப் பார்த்தால் வயிற்றை அல்லவா குமட்டுகிறது! கண்களைப் பொத்திக் கொள்ள வேண்டும் என்றல்லவா தோன்றுகிறது!'' என்று தூக்கியெறிந்து பேசிவிடுவாள் மனோரமா.



அந்தச் சமயம் ராமலால் வீட்டில் இருந்து விட்டால் சுபத்திரா அதிகமாகப் பேச்சை வளர்த்த மாட்டாள். அப்படியே அந்தப் பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு எழுந்து போய்விடுவாள். ராமலால் அங்கே இல்லாமல் இருந்து விட்டால், ''வர வர உனக்கு மண்டைக் கர்வம் ஏறிக் கொண்டே போகிறது. உன் கர்வத்துக்குக் கறுப்பும் குரூபமும் இல்லாத பையன் கிடைப்பதைப் பார்த்து விடுகிறேன்!'' என்று கன கோபமாகப் பொரிந்து தள்ள ஆரம்பித்து விடுவாள்.

தாயாருக்குக் கோபம் வந்து விட்டது என்பதை அறிந்ததும் மனோரமா மேலும் பேச்சுக் கொடுக்க விரும்பாமல் அங்கிருந்து சட்டென்று எழுந்து போய் விடுவாள்.

அநேக வருஷங்களாக அந்தக் குடும்பத்தில் எத்தனையோ தடவை இந்த மாதிரிப் பேச்சு வார்த்தை நடந்திருக்கிறது. அத்தனை தடவையும் மனோரமா ஏதாவது குற்றங் குறை கூறி ஒவ்வொருவரையும் வேண்டாம் என்று தான் மறுத்திருக்கிறாள். வருஷங்கள் பல ஓடிவிடவே மனோரமா விவரம் அறிந்த பெண்ணாகி விட்டாள். அவளுக்குத் தன் குடும்பத்தின் நிலை தெளிவாகத் தெரிந்து விட்டது. பெற்றோர்கள் படும் பொருளாதார சிரமங்களையும் அவள் நன்கு உணரலானாள். தாய் தந்தையருக்குத் தான் ஒரு பாரமாக இருக்கக்கூடாது என்ற நினைவும் அவளுக்குப் பிறந்தது. அது முதற்கொண்டு அவள் கைக்குட்டைகள், ரவிக்கைகள் சின்னக் குழந்தைகளுக்குச் சட்டைகள் என்று தைக்கலானாள். துணிகளுக்குப் பூ வேலை செய்வாள். பைகள் பின்னுவாள். ஸ்வெட்டர் செய்வாள். இம்மாதிரி தான் செய்யும் பொருள்களைத் தன் தோழிகளின் மூலம் கொடுத்து விற்கச் செய்வாள். தன் கைத்திறனைக் கொண்டு சம்பாதித்த காசைக் குடும்பத்தின் உதவிக்காகத் தாயாரிடம் கொடுப்பாள். தாயார் தன் பெண்ணின் செயல்களை அறிந்திருந்தாள். பெண்ணின் பணத்தைத் தன் குடும்பத்துக்கு உபயோகப் படுத்திக் கொள்ள அவளுக்கு எள்ளளவும் இஷ்டம் உண்டாவதில்லை. இருந்தாலும் பெண்ணின் மனத்தை நோகச் செய்யக் கூடாது என்ற எண்ணத்தில் வேறு வழியின்றி அவள் கொடுப்பதை வாங்கித் தன் பெண்ணுடையது என்று தனியாகப் போட்டு வைத்துவிடுவாள். என்னதான் சிர

மம் ஏற்பட்டாலும் பெண்ணின் பணத்தைப் பெற்று அதைத் தன் குடும்பக் காரியத்துக்கு உபயோகப் படுத்திக் கொள்வது என்பது மகா பாவம் என்பது அவளுடைய அசைக்க முடியாத ஆணித்தரமான நம்பிக்கை.

ராமலாலுக்கு அன்றுதான் மனோரமா பொருள்கள் செய்து விற்கிறாள் என்னும் விஷயம் தெரிய வந்தது. அது தெரிய வந்த பொழுது அவருக்கு ஏற்பட்ட மன வேதனையையும் வருத்தத்தையும் சொல்லி முடியாது. தற்கொலை செய்து உயிரை மாய்த்துக் கொண்டு விட்டால் என்ன என்ற எண்ணம் கூட அவருக்கு அப்பொழுது எழுந்தது. அன்றைக்கே அவர் சுபத்திராவுக்கு மனோரமாவின் பணத்தை மறதியாகக் கூடச் சொந்தச் செலவுக்குக் கையாடலாகாது என்று கடுமையான உத்தரவும் பிறப்பித்திருந்தார். சுபத்திராவுக்கு அந்த உத்தரவு அநாவசியம். ஏனெனில் பெண்ணின் பொருளைத் தின்பதைக் காட்டிலும் பசியால் வாடி மடிவது எவ்வளவோ உத்தமமானது என்பது தானே ஹிந்துக்களான பெற்றோர்களின் சித்தாந்தம்? சுபத்திரா அதை அறியாதவளா?

மனோரமாவுக்கு மணம் செய்துவிட வேண்டும் என்ற கவலை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேயிருந்தது. ஆனால் தகுதி வாய்ந்த அழகிய வரன் யாருமே அவர்களுக்குக் கிடைக்கவில்லை. மாதவப் பிரஸாதினிடம் எவ்விதமான குறைவு—நிறைவு இல்லை. அவர் பணக்காரர்: பெருந்தன்மை வாய்ந்தவர்; எல்லோரும் எளிதில் அணுகக் கூடிய அளவுக்கு எளிமையான சுபாவம் படைத்தவர். சுக புருஷர். நாகரிகம் வாய்ந்தவர். அத்துடன் அழகிலும் குறைந்தவர் அல்ல. அவருடைய வீட்டில் குடித்தனப் பாங்கு தெரிந்த ஒரு கிருஹலக்ஷ்மி இல்லாதது ராமலாலுக்கும் ஒரு பெருங் குறையாகத்தான் இருந்தது.

ஆனால் ஏனோ தெரியவில்லை, மனோரமாவின் மனம் மாதவப் பிரஸாதினிடம் நாட்டங் கொள்ளவில்லை. மாதவப் பிரஸாத் தன்னை மிகவும் விரும்புகிறார் என்பது மனோரமாவுக்குத் தெரிந்திருந்தது. அத்தனை பெரிய பணக்காரர் தன்னை நேசிக்கிறார் என்பது தெரிந்திருந்தும் அவள் அவரை ஏனோ விரும்பவில்லை. எனவே, அவரிடம் ஒட்ட விரும்பாமல் அவள் விலகியே இருந்து வந்தாள்.

அவர் குதிரையின் மேலிருந்து கீழே விழுந்த பொழுது, இருதயத்தில் உள்ள மனிதத் தன்மையின் காரணமாக, அவர் மீது அவளுக்கு அநுதாபம் சுரந்தது. அவள் அவருக்கு உதவி செய்வதற்காக ஓடினாள். தன் புடவைத் தலைப்பைக் கிழித்து ரத்தத்தைத் துடைக்க நேரிட்டிருந்தால்கூட அவள் அப்படிச் செய்யச் சங்கோசப் பட்டிருக்க மாட்டாள்.



மாதவப் பிரஸாத் குதிரை சவாரி செய்வதில் எத்தகைய நிபுணர் என்பதையும் அவள் அன்று கண் கூடாகக் கண்டாள். அவள் வீட்டுக்கு வராமல் தம் வீட்டுக்குத் தான் போவேன் என்று அவர் பிடிவாதம் பிடித்துக் கொண்டு சென்றது கூட அவளுக்கு அழகாகத் தான் பட்டது. குதிரையைச் சவுக்கால் அடிக்கத் தயாராகி விட்ட காசாரியைத் தடை உத்தரவு போட்டு நிறுத்தியபொழுது அவள் மனமார மாதவப் பிரஸாதின் மனிதப் பண்பை வாழ்த்தி வழுத்தினாள். அவ்வளவிருந்தும் அவளுக்கு மாதவப் பிரஸாதைப் பிடிக்கவில்லை; மணாளனாகக் கொள்ளலாம் என்ற எண்ணம் இருதயத்தில் இடம் பெறவில்லை.

அப்படி அவர் பிடிக்காமற் போவானேன்? அவர் அத்தகைய பாவச் செயல் என்ன செய்து விட்டார்?

மாதவப் பிரஸாத் பிறந்த நாள் பரிசாக அனுப்பிய நூறு ரூபாய் நோட்டை அவள் வெகு அலட்சிய பாவத்துடன் கிழித்தெறிந்து விட்டாள். அவருடன் பேசவே அவளுக்குப் பிடிக்கவில்லை. ஏன்? அவருடன் பேசுவதனால் தனக்கு ஒருவிதமான இன்பம் துய்க்கக்கூடும் என்ற எண்ணம்கூட எழவில்லை.

அவளுடைய தாயும் தந்தையும் மாதவப் பிரஸாதைப் பற்றி வாய் ஓயாமல் புகழ்ந்தார்கள். அவ்வளவு புகழ்ச்சியைக் கேட்டும் கூட அவள் மனத்தில் மாறுதல் உண்டாகவில்லை. அந்தப் புகழுரைகளைக் கேட்டுக் கேட்டு அவள் காதுதான் புளித்தது. காரணம், அவளால் சுதாகரை மறக்க முடிய

வில்லை. மனத்திலிருந்து அவன் நினைவை அகற்ற முடியவில்லை

இன்னும்கூட அவள் தினமும் அவனிடமிருந்து கடிதத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். தபால் நேரம் நெருங்க நெருங்க அவளுடைய இருதயம் 'படபட' வென்று அடித்துக் கொள்ளும். இன்று கட்டாயம் கடிதம் வந்துவிடும் என்ற நம்பிக்கையிலேயே அவளுடைய ஒவ்வொரு நாளும் ஓடி வந்தது. தபால்காரன் வரும் நேரம் ஆகிவிட்டால் அவளுடைய மனம் வீட்டு வேலையில் நாட்டங் கொள்ளாது. எல்லா வேலைகளையும் அப்படி அப்படியே போட்டு விட்டுத் தபால்காரனைப் பார்ப்பதற்காகப் போய் விடுவாள். வாசற்புறத்து அறை ஜன்னலில் உட்கார்ந்து வழி மேல் விழி வைத்த வண்ணம் தபால்காரனுக்காகத் தவம் கிடப்பாள். தினம்போல் தபால்காரன் வருவான்; கடிதங்களைக் கீழே போட்டு விட்டுப் போவான். அவள் துடிக்கும் உள்ளத்துடன் ஓட்டமும் நடையுமாகக் கீழே இறங்கி வருவாள். பழக்கப்பட்ட எழுத்துக்களாகத் தோன்றும் கடிதங்களை ஒருபுறமாக வைத்து விட்டு, பழக்கமில்லாத புதிய கையெழுத்துக்களில் வந்திருக்கும் கடிதங்களைப் பிரித்துப் படிப்பாள். அவள் நம்பிக்கையில் மண் விழும்; ஆசை நிராசையாகிவிடும். ஏமாற்றத்துடன் பெருமூச்சு விட்டவாறு திரும்புவாள்.

"என்றைக்குமே கடிதம் வராமல் இருந்துவிடுமா?"—இந்த எண்ணம் எழுந்ததும் அவள் துயரச் சுமை தாங்காமல் மனம் பொறுமுவாள். தினமும் தபாலை எதிர்பார்த்து எதிர்பார்த்துத் தபால் நேரம் போகுமே ஒழிய அவளை ஆட்கொண்ட துயரம் அவளை விட்டு அகலாது. சிரிக்கக் கூடிய பேச்சோ நிகழ்ச்சியோ ஏதாவது நிகழ்ந்தால் வலுவில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அவள் சிரிப்பது உண்டு. ஆனால் அந்தச் சிரிப்பின் ஆழத்தில் சோகத்தின் சாயைதான் படர்ந்திருக்கும். அவளுடைய ஒவ்வொரு காரியமும் சோக முத்திரையில்லாமல் நிகழ்வதில்லை.

பகல் பொழுது கழிந்து இரவுப் பொழுது வரும். மறுபடியும் கடிதம் வரும் என்ற நம்பிக்கை அவள் உள்ளத்திலே வலுப்பெறும். இரவின் கற்பனையிலே அவளுடைய இருதயத்து நம்பிக்கைக் கொடி துளிர் விட்டுத் தழைக்கும். அந்தக் கற்பனையிலேயே இராப் பொழுது கழிந்து பொழுது புலர்ந்து விடும். பொழுது ஏற ஏற அவளுடைய ஆவலும் அதிகரிக்கும். தபால் வரும் நேரம் ஆகும்பொழுது தபாலை எதிர் பார்த்துப் போய்ப் பழையபடியே உட்கார்ந்து விடுவாள். இதுவே அவளுடைய தினசரி வழக்கமாக — ஏன்? — வாழ்க்கையாகக்கூட ஆகிவிட்டது.

காதலனைக் காண்பதற்கு இருதயம் எத்தனை பரபரப்பு அடைகிறதோ, அத்தனை பரபரப்பு அவனுடைய கடிதத்தைக் காண்பதற்கும் அடைகிறது என்பதை யார்தான் அறியார்கள்? காதல பாடம் கற்றவர்களைக் கேட்டால் காதலனைக் காண்பதைக் காட்டிலும், காதலனுடைய கடிதத்தைக் காண்பதற்குத்தான் இருதயம் படாத பாடு படுகிறது, இல்லாத அவதியுறுகிறது என்று சொன்னாலும் சொல்லுவார்கள். அதில் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றும் இல்லை. ஏனெனில் அவர்கள் அவ்விஷயத்தில் அநுபவஸ்தர்கள் அல்லவா? அநுபவஸ்தர்கள் கூறுவதை யார் ஆட்சேபிக்க முடியும்? அநுபவ ஞானத்தைக் காட்டிலும் மேலான ஞானம் தான் 'ந பூதோ ந பவிஷ்யதி' ஆயிற்றே!

சுபத்திராவுக்கு ஒரு நாள் ஜுரம் வந்து விட்டது. மனோரமா தனது நித்திய வழக்கப்படி கடிதத்தை எதிர் பார்த்துக் கொண்டு ஜன்னலில் போய் உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது மாதவப் பிரஸாதின் சின்னப் பெண் அழுது கொண்டே ஓடி வந்தாள். பரக்கப் பரக்கச் சுபத்திராவிடம் ஓடிப்போய், "பெரியம்மா! அண்ணா விழுந்து விட்டான். அவன் பேசக்கூட இல்லை. அப்பா கட்டிலில் படுத்திருக்கிறார். உன்னைக் கையோடு கூப்பிட்டுக் கொண்டு வரச் சொன்னார்!" என்றாள். அதைச் சொல்லும்பொழுது அந்தக் குழந்தையின் பேச்சில் ஏற்பட்ட படபடப்பை அவ்வளவு இவ்வளவு என்று சொல்லி முடியாது.

சுபத்திராவோ ஜுரத்தின் காரணமாகப் படுத்திருந்தாள். அந்நிலையில் அவள் எப்படிப் போக முடியும்? அந்நேரத்தில் ராமலால் வேறு வீட்டில் இல்லை. இருந்தால் அவரை யாவது போய்ப் பார்த்து வரச் சொல்லலாம். எனவே, மனோரமாவைப் போய்ப் பார்த்து வரச் சொல்ல வேண்டிய நிர்ப்பந்தமான ஒரு நிலைமை ஏற்பட்டு விட்டது. பிறருக்கு உபகாரம் செய்வதையே குறிக்கோளாகக் கொண்ட சுபத்திரா சிறிதும் முன் பின் யோசிக்கவில்லை; மின மேஷம் பார்க்கவில்லை. 'மனோரமா மண வயதுப் பெண் ஆயிற்றே!' என்று கூட எண்ணவில்லை. குழந்தையின் சொற்களைக் கேட்டதும் மனோரமாவைக் கூப்பிட்டுப் போய்ப் பார்த்து வரும்படி உத்தர விட்டுவிட்டாள். மனோரமா அதுவரை மாதவப் பிரஸாதின் வீட்டுக்குப் போனதில்லை. அன்று போவதுதான் அவளுக்கு முதல் தடவை. சுபாவத்திலேயே சூடிகையான மனோரமா தன் தாய் தந்தையரின் மனோபாவங்களை நன்கு உணர்ந்திருந்தாள். அது மட்டும் அல்ல; மாதவப் பிரஸாதின் மனத்தில் உள்ள எழுச்சி உணர்ச்சிகளையும் வேறு அறிந்திருந்தாள். ஆகவே, அவளுக்கு அங்கே போவதென்றால் சங்கோசமாகத் தான் இருந்தது. இருந்தாலும் அவள்தான் பெற்றோரின் சொற்படி நடப்பவளாயிற்றே! அத்துடன் மாதவப் பிரஸாதின் வீட்டில் உள்ள இக்கட்டான நிலைமையையும் நன்கு உணர்ந்திருந்தாள். எனவே சங்கோசத்தை விட்டு மறுப்பு ஏதும் சொல்லாமல் மாதவப் பிரஸாதின் வீட்டுக்குப் புறப்படத் தயாராகி விட்டாள்.

சிறுமியின் கண்களிலிருந்து தாரையாகக் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. மனோ ரமாவினால் அந்தக் குழந்தையின் கண்ணீரைக் காணச் சகிக்கவில்லை. 'பாவம்! குழந்தைக் குக்கூட என்ன உணர்ச்சி! என்ன கஷ்டம்!' என்று தோன்றியது.

உடனே சிறுமியின் அருகில் சென்று தன் முந்தானையினால் கண்ணீரைத் துடைத்தாள். பிறகு அன்பு கலந்த குரலில், "அழாதே, அம்மா! அழாதே! நான் உன்னோடு உங்கள் வீட்டுக்கு வருகிறேன்!" என்றாள்.

அடுத்த சில விநாடிகளுக்கெல்லாம் நோய்ப் படுக்கையில் படுத்திருந்த தன் தாயாரைத் தனியே விட்டுவிட்டு, அவளுடைய கட்டளையைச் சிரமேல் தாங்கி, மாதவப் பிரஸாதின் வீட்டுக்கு ஒத்தாசைக் கென்று புறப்பட்டாள் மனோரமா.

சிறுமி மனோரமாவின் விரலைப் பிடித்துக் கொண்டு நடக்கலானாள். சிறுமியாக இருந் தாலும் அவள் வெகு கெட்டிக்காரி என்பதை வழியிலேயே தெரிந்து கொண்டு விட்டாள் மனோரமா. வீட்டை அடைவதற்குள்ளாகச் சிறுமி எத்தனையோ விஷயங்களை மனோரமா வுக்குச் சொல்லித் தீர்த்து விட்டாள். அது மட்டும் அல்ல. பேச்சுக்கிடையிலேயே, "நீ ரொம்ப நல்லவள். உன் முகம் பார்க்க ரொம்ப ரொம்ப நன்றாயிருக்கிறது. நிஜமாகச் சொல் கிறேன். உன் முகத்தைப் பார்த்தால் எனக்கு எப்படி இருக்கிறது, தெரியுமோ?" என்றும் வர்ணிக்கத் தொடங்கி விட்டாள்.

அதைக் கேட்ட மனோரமாவுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்தது. 'இந்தச் சின்னஞ் சிறு சிறுமிக்குத்தான் என்ன சமர்த்து!' என்று மனத்துள் வியந்து அவளை அன்புடன் அரவணைத்துத் தட்டியும் கொடுத்தாள்.

"என்னை உன்னிடமே வைத்துக் கொள்ளு கிறாயோ?" என்று ஒரு விசித்திரமான கேள்வியைக் கேட்டு வைத்தாள் சிறுமி.

குழந்தைகளுக்குத் தான் என்ன என்ன விசித்திரமான கேள்விகள் எல்லாம் தோன்று கின்றன!

"பேஷாக! ஆமாம்...ஆனால் உன்னை எங்கள் வீட்டுக்கு எப்படி அனுப்புவார்கள்?" என்று கேட்டாள் மனோரமா.

"ஏன் அப்படிக் கேட்கிறாய்? எங்கள் அப்பா ஒன்றும் எங்களைத் தடுக்க மாட்டார். நான், அண்ணா, அக்கா எல்லோருமே உங்கள் வீட்டுக்கு வந்து விடலாமோ?" என்று குழந்தைகளுக்கே இயல்பான பாந்தவ்யத் துடன் கேட்டாள் சிறுமி.

சிறுமியின் பேச்சைக் கேட்டதும் மனோ ரமாவுக்குத் தன் தகப்பனாரின் பொரு ளாதார நிலையின் நினைவு வந்தது. 'குழந்தை யின் சரளமான அந்தக் கேள்விக்கும் பொரு ளாதாரப் பிரச்னைக்கும் என்ன தொடர்பு? தந்தையின் பொருளாதார நிலை பற்றிய நினைவு குழந்தையின் அந்தக் கேள்வியைக் கேட்டதும் ஏன் வரவேண்டும்?' என்று கேட் கலாம். ஆனால் ஏனோ மனோரமாவுக்கு அந்த நினைவு வந்து விட்டது. தகப்பனாரின் பொரு ளாதார நிலைமை முன்போல் இருந்தால் அவள் வெகு சுலபமாகச் சிறிதும் யோசனை செய்யாமல் எல்லோரையும் தன் வீட்டில் கொண்டு வந்து வைத்துக் கொள்ளலாம். இப் பொழுது இருக்கும் சிரம தசையில் அவள்

## கொண்டு வா, கல்லை!



என்ன செய்ய முடியும்?—இந்த எண்ணம் தோன்றியதும் அவள் முகம் வாடி விட்டது.

,' நாங்கள் வரவில்லை!''—மனோரமாவின் வாடிய முகத்தைக் கண்ட சிறுமி சடக்கென்று தன் ஆசையை மாற்றிக்கொண்டாள்.

''ஏன் வரமாட்டாய்? கட்டாயம் வர வேண்டும். உனக்கு எப்பொழுதெல்லாம் வர வேண்டும் என்று தோன்றுகிறதோ, அப்பொழுதெல்லாம் வந்து விளையாடு. எனக்கு எத்தனையோ விளையாட்டுக்கள் தெரியும். சொல்லித் தருகிறேன்!'' என்றாள் மனோரமா.

அதைக் கேட்டதும் அந்தச் சிறுமி அகமும் முகமும் மகிழ்ந்து விட்டாள். மனோரமாவின் விரல்களை இன்னும் அழுத்திப் பிடித்துக் கொண்டு வேகமாகத் தன் சிறிய கால்களை எட்டிப் போடலானாள்.

வீட்டை அணுகியதும், மனோரமாவின் விரல்களை விட்டு விட்டு வேகமாக வீட்டுக்குள் ஓடினாள். கண்மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் மனோரமா வருகிறாள் என்னும் செய்தியைப் பறை சாற்றியும் விட்டாள்.

விழுந்த பையனை மாதவப் பிரஸாதுக்கு அருகில் படுக்க வைத்திருந்தார்கள். பிறர் பையனைச் சரியாகக் கவனித்துக் கொள்வார்கள் என்ற நம்பிக்கை தந்தையின் உள்ளத்துக்கு உண்டாகவில்லை. தந்தையின் கண்கள் வேலைக்காரர்கள் எல்லோரையும் சந்தேகக் கண் கொண்டு பார்த்தன. எனவேதான் அந்தப் பையன் தந்தையின் அருகில் படுக்க வைக்கப் பட்டிருந்தான். சுபத்திராவுக்குப் பதிலாக மனோரமா வந்தது மாதவப் பிரஸாதின் மனத்துக்கு வியப்பை அளித்தது. அத்துடன் கூடவே ஆனந்தத்தையும் அளித்தது.

சாந்தா — அதுதான் அந்தச் சிறுமியின் பெயர்.—மனோரமாவைத் தன் தமையனிடம் அழைத்துச் சென்றாள். பையன் அப்பொழுது மூர்ச்சை தெளிந்து உணர்வு பெற்றிருந்தான். மனோரமா அவனுக்குக் கோணல் மாணலாகக் கட்டியிருந்த கட்டை அவிழ்த்துச் சரியாகக் கட்டினாள். அதனால் அவனுக்குக் கஷ்டம் குறைந்து சுகம் கிட்டியது. தாயின் பராமரிப்பையும் போஷணையையும் மறந்து விட்ட அந்தப் பாலகனுக்கு மனோரமாவின் அன்பும் ஆதரவும் ஆறுதலை அளித்தன. அத்துடன் தாயாரின் நினைவையும் அவனுள்ளத்தில் ஏற்படுத்தின. தாயாரின் நினைவு வரவே, அவன் இருதயம் சிறிது கலங்கியது. அவன் கண் கொட்டாமல் சிறிது நேரம் மனோரமாவையே பார்த்துக் கொண்டிருந்தான். சாந்தா வேறு அவள் முந்தானையைப் பிடித்து இழுத்தவாறு ஒட்டி நின்று கொண்டிருந்தாள். அவள் வார்த்தைக்கு வார்த்தை, பேச்சுக்குப் பேச்சு சிரித்தவாறு மனோரமாவின் மடியில் விழுந்து சௌஜன்யமாகப் புரண்டாள்; விஷமம் செய்து அவளைப் போட்டுத் துவைத்தாள். உண்மையில் சாந்தாவுக்கு மனோராவை மிகவும் பிடித்துப் போய் விட்டது. மனோரமாவும் கொஞ்சம் இடம் கொடுத்து விடவே, அவளுடைய விஷமம் அத்து மீறிவிட்டது. அதைக் கண்ணுற்ற மாதவப் பிரஸாத், மனோரமா அலுத்துக் கொண்டால் அல்லது கோபித்துக் கொண்டால் என்ன செய்வது என்று பயந்தார். எனவே சாந்தாவைக் கூப்பிட்டு, ''சாந்தா! சற்றுத் தூரம் போய் உட்காரு! இப்படி ஒரேயடியாக விஷமம் பண்ணிப் பிறருக்குச் சிரமம் கொடுக்காதே!'' என்று தடுத்தார்.

மனோரமா மாதவப் பிரஸாதுக்கு வெகு சமீபத்தில் உட்கார்ந்திருந்தாள். ஆனால் அவள் அவரைத் தலை நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை. அவளுடைய மனத்தில் விசித்திரமான உணர்ச்சி கோடிட்டிருந்தது. மாதவப் பிரஸாதின் பார்வை அடிக்கொருதரம் தன் மீது விழுவது போன்ற எண்ணம் அவளுடைய உள்ளத்தை வதைத்துக் கொண்டிருந்தது. அவள் ஒருதடவை கண் நிமிர்ந்து பார்த்தாள். பண்பாடு நிறைந்தவரும் குடித்தனப் பாங்கு தெரிந்தவருமான மாதவப் பிரஸாத் தம்மை அடக்கிக் கொண்டிருக்கிறார், தன்னை ஏறெடுத்துக் கூடப் பார்க்கவில்லை என்பதைக் கண்டாள். அப்புறம் தான் அவளுக்கு மனத்தில் ஒருவிதத்திருப்திநிலவியது;நிம்மதிநிறைந்தது.

மனோரமாவின் முகம் தன் செய்கைகளினால் கோணியிருக்க வேண்டும். மாதவப் பிரஸாத் அதைப் பார்த்திருக்க வேண்டும், அதனால் தான் அவர் அப்படித் தடுக்கிறார் என்று எண்ணினாள் சாந்தா. எனவே, தன் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக, ''நான் நன்றாயில்லையா? என்னை உனக்குப் பிடிக்கவில்லையா?'' என்று மனோரமாவைப் பார்த்துக் கேட்டாள்.

பதிலுக்கு மனோரமா சிரித்தாள். அடுத்த நிமிஷமே சாந்தாவைத் தன் மடியில் தூக்கி வைத்துக் கொண்டு ஒரு முத்தம் கொடுத்தாள். சாந்தாவுக்கு அவள் மனம் புரிந்து விட்டது. எனவே, வெற்றி மகிழ்ச்சியில் பூரித்தாள்; பெரிய சாம்ராஜ்யமே கிடைத்து விட்டது போன்ற ஆனந்தத்தில் லயித்தாள். 'அப்பா நினைத்தது தப்பு! என்ற நம்பிக்கையும் அவள் உள்ளத்தில் இடம்பெற்றது.

சிறிது நேரத்துக்கெல்லாம் மனோரமா வீட்டுக்குப் போவதற்காக எழுந்தாள். குழந்தைகளுக்கு மட்டும் அல்ல; மாதவப் பிரஸாதுக்குக்கூட அவள் வீட்டுக்குப் புறப்படுவது பிடிக்கவில்லை. அவள் அங்கேயே இருக்க வேண்டும் என்றுதான் தோன்றிற்று.

காயமுற்றுப் படுத்திருந்த பையன் மனோரமா புறப்படுவதைப் பார்த்து, ''இனிமேல் நீ வரமாட்டாயா?'' என்று கேட்டான்.

''கட்டாயம் வருகிறேன், குழந்தாய்!'' என்று அந்தப் பையனுக்கு ஆறுதலாகப் பதில் அளித்தாள் மனோரமா.

''ஆமாம், அப்படியானால் நீ போகாமல் இங்கேயே இருந்து விட்டால் என்ன?'' என்று கேட்டாள் குழந்தை சாந்தா. (தொடரும்)

# அமிதமாக புகை குடிப்போர்களே

# நில்லுங்கள்

புகை பிடிப்பதால் ஏற்படும் துர் நாற்றம், பற்களில் ஏற்படும் விஷம் பற்களில் அடையும் புகைக் கறை.

இவைகளை பினகா பற்பசையை தினம் இரு முறை உபயோகித்து விரட்டுங்கள்.

சாஸ்திரீய முறையில் தயாரித்த பினகா பல் பசை பலதரப்பட்ட வைத்திய சோதனைகள் மூலம் புகை குடிப்பதில் ஏற்படும் வாய்நாற்றம், பல்விஷம் பற்களில் ஏற்படும் புகைக் கறை இவைகளை நீக்குவதில் மேன்மையானது என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. நேர்த்தியான வாசனை பொருந்திய பினகா பல்பசையை உபயோகியுங்கள்.




## பினகா (ரோஸ்)

சக்தி வாய்ந்த ''ஸல்போரிஸினோலியட்'' என்னும் பொருள் கொண்டது.

## பினகா க்ரீன்

இயற்கையின் ஆச்சரிய துர்க்கந்த நாசினியான சுத்தி செய்த க்ளோரோபில்லும் கொண்டது.

ரேடியோ ஸிலோனில் பிரதி திங்கட்கிழமை மாலை 8 மணிக்கு பினகா ஹிட் பரேட்டையும் பிரதி ஞாயிறு மாலை 8 மணிக்கு பினகா கீத மாலையையும் கேளுங்கள்.



''ஸீபா'' வின் விசேஷ குணம் பொருந்திய ஒரு பற்பசை.

CBK 13083 TAMIL



## துரிதமாகத் தேர்வு பெறுகிறார்—

### டாக்டர்

# ஓவல்டினுக்கு

### உத்தரவு செய்ததுமுதல்!

நோய்க்குப் பிறகு தேறிவரும் காலத்தில் டாக்டர்களும் நர்ஸ்களும் ஆரோக்கியம் தரும் ஓவல்டினை சிபாரிசு செய்கின்றனர்! ஓவல்டினின் சத்துக்கள் ஆரோக்கியத்திற்கு மிக முக்கியமானவை என்று அவர்களுக்குத் தெரியும். அதில் பழுத்த பார்லி மால்ட், ஆடை நிரம்பிய பசும்பால், சிறந்த கொக்கோ, பி & டி விடமின்கள் ஆகியவை சேர்ந்து இருப்பதால் அது இன்றியமையாத உணவு பானமாகும். ஓவல்டின் லேபரட்டரிகளில், விஞ்ஞானிகள், ஓவல்டினின் பரிசுத்தத்திற்கு அதன் தயாரிப்பில் ஒவ்வொரு படியிலும் பரிசோதனை நடத்துகிறார்கள். எந்த நோயாளிக்கும் அவருடைய உணவுடன் ஓவல்டினையும் கொடுத்து வந்தால் தேர்வு துரிதப்படுவது திண்ணம்! நினைவிருக்கட்டும்— அது குடும்பத்தில் அனைவரின் ஆரோக்கியத்திற்கும் உகந்த பானம். ஓவல்டினையே கேளுங்கள்; போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள்:
**கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.**



# ஓ வ ல் டி ன்

**நோய்க்குப் பிறகு தேர்வைத் துரிதப்படுத்துகிறது**

---

OV. 392

# இன்ப வாழ்க்கை

**ப**ள்ளிக் கூடத்திலிருந்து வந்த குழந்தைகளுக்குப் பலகாரம் கொடுத்து அவர்களை விளையாட அனுப்பி விட்டு உட்கார்ந்த சீதாவின் மனம் என்னவோ தவித்தது. எத்தனையோ நாளாக அவளது அலட்சியத்திலே வளர்ந்து விட்ட அந்த ஏக்கம் கொஞ்ச நாளாக அவளை வதைத்துக் கொண்டிருந்தது. அதுவும் இன்று காலையிலிருந்து அதன் தொணத் தொணப்பை அவளால் சமாளிக்க முடியவில்லை. சமையலறைக்குள் போவதற்கே அவளுக்குக் கசந்து வந்தது. அவள் பார்வை பட்டுப் பட்டுத் தேய்ந்து போன அந்த வீட்டின் எந்த மூலையும் எந்தச் சாமானும் அவளுக்கு ஆறுதல் அளிப்பதாக இல்லை. அவள் மனத்தின் ஆதங்கத்தைத்தான் அதிகப் படுத்திற்று.

யந்திரத்தைப் போல ஒவ்வொரு நாளும் ஒரே மாதிரியான காரியங்களைச் செய்து கொண்டு அந்த வீட்டின் சுவர்களுக்கு நடுவேதான் அடைபட்டுக் கிடப்பது போன்ற ஒரு வேதனை அவள் உள்ளத்தைக் கடித்துக் கொண்டிருந்தது. இனம் தெரியாத அந்த ஏக்கத்திலே அவள் தவித்துக் கொண்டிருந்தபோது வாசல் கதவை யாரோ தட்டினார்கள். உத்ஸாகமின்றிக் கதவைத் திறக்கப் போனாள்; அப்பொழுது ஒரு பைத்தியக்கார எண்ணம் அவளது சோர்ந்த உள்ளத்திலே மிதந்து வந்தது.

'அந்தக் கதவுக்குப் பின்னால் நிற்பது அவராக இருந்து, சீதா, டிரஸ் செய்து கொண்டு கிளம்பு. நாம் சினிமாவுக்குப் போகலாம் என்றோ, கடற்கரைக்கு வா என்றோ அழைத்தாரானால் எப்படி இருக்கும்!' இந்த நினைவே அவள் நெஞ்சை நிமிர்த்திக் கண்களிலே ஒரு புதிய சோபையைப் பூசி விட்டது.

திறந்த கதவின் பின்னால் அவள் கணவன் நிற்கவில்லை. கனகாம்பர வர்ணச் சேலை உடுத்திய அடுத்த வீட்டுப் பிரேமாதான் நின்று கொண்டிருந்தாள்.

“சீதா, எங்க கோபு வந்தால் இந்தச் சாவியைக் கொடுக்கிறாயா! அவன் புட்பால் மாட்சுக்குப் போயிருக்கான். நாங்க எக்ஸிபிஷனுக்குப் போயிட்டு வரலாம்னு கிளம்பினோம். அவர் அங்கே நிற்கிறார். நான் வரட்டுமா!” என்றபடி இறங்கினாள் பிரேமா. சாவியை வாங்கிக் கொண்ட சீதாவின் கண்கள் மடிப்புப் பிரியாத அங்க வஸ்திரத்தைப் போட்டுக் கொண்டு வீதியிலே நிற்கும் பிரேமாவின் கணவனைப் பார்த்தது.

ஒட்டுதலாக அவர்கள் ஒயிலைப் பார்த்து விட்டு ஒரு பெருமூச்சுடன் “கொடுத்து வைத்தவள்” என்று நினைத்துத் திரும்பினாள். அவளுக்கு அழுகையாக வந்தது. நினைவு பொருமிற்று. 'இந்த மாதிரி அவர் என்றைக்காவது என்னை உல்லாசமாக அழைத்துப் போகிறாரா!' என்று கேட்டது உள்ளம். சாவியைப் படத்தின் ஆணியிலே மாட்டியபோது நிலைக் கண்ணாடி அவள் உருவத்தை ஒதுக்கி வைத்துக் காட்டியது. சோர்ந்து தளர்ந்த தன் உருவத்தைக் கண்டதும், பிரேமா தன் கணவனோடு போன நிலை நினைவுக்கு வந்து அவள் பொறுமையைக் கிளறிவிட்டது. உடனே போய் முகம் கழுவிக் கொண்டு வந்தாள். கண்ணாடியின் முன்னால் நின்றபடி முன் நெற்றி மயிரைத் தூக்கி வாரிக் கொண்டபோது அவள் இமை உயர்ந்து இதழ் மலர்ந்தது. எப்போதுமே அவளுக்குத் தன் அழகில் ஒரு கர்வம். இரண்டு குழந்தைகளுக்குத் தாயான பிறகும் கட்டுக் குலையாமல் இருக்கும் எந்தப் பெண்மணிதான் தன்னைப் பற்றிக் கர்வப்பட மாட்டாள்!

ஆனால் சீதாவுக்கு ஒரே குறை, தன்னைக் கணவன் இப்போதெல்லாம் எங்குமே அழைத்துப் போவதில்லை என்று. 'ஏன், என்னை அழைத்துக் கொண்டு வெளியே போக அவருக்கு வெட்கமாக இருக்கிறதா!' சீதா தன்னையே கேட்டாள்.

நெற்றியிலே இட்டுக் கொண்ட குங்குமக் கையை வகிட்டின் ஆரம்பத்திலே பதித்துத் துடைத்துக் கொண்டு திரும்பிய சீதாவின் நினைவு, 'பாவம், அவர் ஆபிஸிலிருந்து களைத்துப் போய் வருகிறார். அதன் பிறகு எப்படி அவர் என்னை வெளியே அழைத்துப் போவார்!' என்று நீண்டது. முதல் நாள் அவர் களைத்துப் போய் வந்து சாய்வு நாற்காலியில் சாய்ந்து தூங்கியதை நினைவு படுத்திக் கொண்டாள். உடனே 'தினமுமா இப்படிக் களைத்து வருகிறார்! அல்லது நான் தான் தினமும் என்னை எங்காவது அழைத்துப் போகச் சொல்லுகிறேனா! எப்போதாவது ஒரு நாளைக்கு என் ஆவலையும் பூர்த்தி செய்யக் கூடாதா!' என்று விவகாரம் பேசிற்று சிந்தனை.

வரவரத்தான் அவள் இந்தத் தன் ஆவலை வெளியிடாமல் மனசுக்குள்ளேயே மூடி வைத்துக் கொள்ளப் பழகிக் கொண்டாள். எவ்வளவோ தடவை அவள் வாய்விட்டுக் கேட்டபோது ராமு ஏதாவது காரணம் சொல்லி அவளை அழைத்துப் போக மறுத்து விடுவான். அவளுக்கு மட்டும் ரோசமிருக்காதா! இனி அவராகத் தன்னை அழைத்துப் போனாலன்றித் தானாகக் கேட்பதில்லை என்று வைராக்யத்துடனிருந்து வந்தாள்.

அப்படி ஒன்றும் சீதாவின் கணவன் ராமு குற்றம் சாட்டக் கூடியவனில்லை. தன் கணவனைப் பற்றி அவளுக்கு எப்போதுமே பெருமைதான். அழகிலும் சரி குணத்திலும் சரி அவனுக்கு ஈடு இணையே கிடையாதென்பது அவள் முடிவு. அவள் முகம் களைத்திருப்பதைக் கண்டால் “சீதா, நான் சொல்வதைக் கேளு. பேசாமல் படுத்துக் கொண்டு ரெஸ்ட் எடுத்துக்கோ. இன்னிக்கு நான் சமைக்கிறேன்” என்று சொல்லிச் சமையல் செய்யக் கிளம்பி விடுவான். தன் சமையல் அவளுக்கும் குழந்தைகளுக்கும் அஜீரணத்தைக் கொடுக்கும் என்று தெரிந்தாலும் அவன் சமைக்காமல் இருக்க மாட்டான்.

ஆனால் கொஞ்ச நாளாக, ஏன், தகப்பனான பிறகு என்றுகூடச் சொல்லலாம். அவனிடம் இளமையிலிருந்த குறுகுறுப்பும் உல்லாசமும் குறைந்து விட்டது. ஆபீஸ் வேலைகளிலேயே மூழ்க ஆரம்பித்தான். முன்போல அவனுக்கு நேரமிருப்பதில்லை. கைக்குழந்தைக்காரி என்ற அனுதாப உணர்ச்சி மேலோங்க அவளை அதிகம் தொந்தரவு செய்யக் கூடாதென்றும், அவன் அவளை எங்கும் வரும்படி அழைப்பதில்லை. நாளாவட்டத்தில் அதுவே பழகிப் போய் விட்டது. அதனால் சீதாவை அவன் உதாசீனம் செய்யவில்லை. முன்போல் சதா குறும்பும் விளையாட்டுமாக இருக்க அவன் நேரத்தை ஒதுக்கிக் கொள்ளவில்லையே தவிர அவளிடம் அவன் கொண்ட காதல் குறையவில்லை.

அடிக்கடி, “ஏன் சீதா, ஒரு மாதிரியாக இருக்கிறாய்! நான் ஒருவாரம் எப்படியாவது பார்த்துக் கொள்ளுகிறேன். நீ உன் பிறந்த வீட்டுக்குப் போய் இருந்துவிட்டு வாயேன்” என்று சொல்லுவான். ஆனால் அவள் அவனைப் பிரிந்து தனியாக



எங்கும் போக விரும்பவில்லை. கணவனோடு உல்லாசமாகப் போகும் அந்த நிலையைப்பற்றி அவள் எத்தனையோ கற்டனை எல்லாம் செய்திருக்கிறாள். கல்யாணமான புதிதில் தன் கனவெல்லாம் நினைவாகும் என்றுதான் பூரித்துப் போனாள். ராமு அவளிடம் உயிரையே வைத்திருந்தான். தன் எல்லையற்ற பிரேமையால் அவளை அபிஷேகம் செய்வித்தான்.

அந்த அன்பும் ஆசையும் இப்போது இல்லையா! இருக்கிறது. ஆனால் அந்தப் புது மோகத்தின் வேகம், நெஞ்சைக் கிறுக்க வைக்கும் லாகிரி இப்போது இல்லை. கல்யாணமான புதிதில் ராமு அடிக்கடி சீதாவைச் சினிமாவுக்கும் கோவிலுக்கும் அழைப்பான். ஆனால் அவள் அப்போது அவன் விரும்பிய போதெல்லாம் அவனோடு வெளியில் போக மறுத்தாள். உள்ளூற ஆசைத் துடிப்பும் கணவனோடு போகவேண்டுமென்ற இன்பத் தவிப்பு மிருந்தாலும் ஊருக்குப் பயந்தாள். இதைப்போன்ற பெரிய ஊரில்லை அது. சிறிய ஊரில் நாலு பேர் நாலு பேகவார்கள், வம்பளப் பார்கள் என்று வெட்கப்பட்டாள். ராமுவின் தாயார் மனதிலே நல்லெண்ணத்தை நிலைநிறுத்தவும்கூட அவள் அப்போது அன்புக் கணவனின் ஆசையை நிறைவேற்றப் பின் வாங்கினாள். அவன் பத்துத் தடவை அழைத்தால் ஒரு தடவைதான் அவனோடு கிளம்புவாள். அதுவும் கல்யாணமான ஒரு வருஷத்துக்குள் சீதா தாயாகும் நிலையை அடைந்த பிறகு அவள் வெளியே கிளம்பவே மறுத்து விட்டாள். அத்தனை வெட்கம்!

'ஒருவேளை குழந்தை பிறந்ததினால் நான் மாறி விட்டதாக நினைக்கிறாரோ' என்ற எண்ணம் அவள் நெஞ்சைச் சுட்டது. 'குழந்தை பிறந்தால் நான் கிழவியாகி விடுவேனா? குழந்தைகள் பிறந்தால் என் உள்ளத்திலே ஆசைகள் குறைந்து விடுமா!...இல்லை, நான் மாறவில்லை. தகப்பனாரானதினால் அவர்தான் மாறி விட்டார்!" அவள்



நெஞ்சைத் துக்கம் அடைத்தது. பொங்கிப் பெருகிய கண்ணீர் கன்னத்திலே வழிந்து குறு குறுத்தது.

“சீச்சீ, என்ன அழுகை! யாராவது பார்த்தால் கணவன் கொடுமைப் படுத்துவதாக அல்லவா நினைப்பார்கள்!” என்று கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்திருந்தாள். எதிரே ராமுவின் போட்டோ அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது. கண்களிலே குறும்பு வழியப் பார்க்கும் அந்தப் போட்டோவைக் கண்டுதான் அவள் தன் மனதைப் பறிகொடுத்துப் பரிசம் போடச் சொன்னாள்.

‘நான் அதிர்ஷ்டசாலிதான். அவர் அன்பும் குறைய வில்லை. ஆனால் என் ஆவலைப் புரிந்துகொள்ள அவருக்குத் தெரியவில்லை. இன்று எப்படியும் என் தவிப்பை, ஆசையை அவருக்குப் புரியவைத்து விடப் போகிறேன்’ என்ற நினைவோடு ‘இது என்னது இப்படி எல்லாம் என் மனம் அலை பாய்கிறது! இரண்டு குழந்தைக்குத் தாயான பிறகுமா இந்த ஆசை எல்லாம்!’ என்ற நிதானமும் நிழலாடியது. ‘இருபத்தைந்து வயதுக்குள் நான் ஆசைகளை அவித்துவிட்ட துறவியாகிவிட முடியுமா என்ன!’ என்று ஆசை வாதம் புரிய, கொண்டையிலே சந்திரஹாரமாக மல்லிகையைச் சூடிக் கொண்டாள் சீதா. ராமுவுக்கு மல்லிகை என்றால் ரொம்பப் பிடிக்கும். மனதிலே குறும்பு சிமிண்டி விளையாடப் பெட்டியினடியிலிருந்த ஸெண்ட் பாட்டிலை எடுத்துக் காதோரத்திலே தடவிக் கொண்டாள். எத்தனையோ வருஷங்களுக்கு முந்திய நினைவு—அவன் அந்த ஸெண்ட் பாட்டிலை வாங்கி வந்து அவள் முகத்தைச் சிவக்க வைத்த அந்த நினைவிலே மெய் மறந்து போனாள். அவன் வந்ததும் தன்னுடைய விசேஷ அலங்காரத்தையும் வாசனையையும் கண்டு எப்படிக் கேலி செய்வான் என்று எண்ணியபோது அவள் கன்னத்திலே ரோஜா வர்ணம் ஏறி நெற்றியிலே வியர்வை ஜில்லிட்டது.

ஆனால் ராமு ஆபீஸிலிருந்து வந்தபோது சீதாவின் அலங்காரமெல்லாம் மங்கிவிட்டது. வெகு நேரம் அவன் வரவுக்காகக் காத்திருந்தாள். அவள் இன்பத் தவிப்பெல்லாம் அடங்கிய பிறகும் கூட அவன் வரவில்லை.

சீதா மிகவும் அலுத்துப் போய்ச் சமையலறையைச் சாத்திக் கொண்டு வெளியே வந்தாள். கடைசியில் ராமு வந்தான். உடைகளை மாற்றிக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தான். சீதா மௌனமாகப் பரிமாறினாள். ராமு அவள் முகத்தைப் பார்த்துப்பேச முயன்றான். சீதா அவன் முகத்தை ஏறெடுத்தும் பார்க்க வில்லை.

சாப்பிட்டு விட்டுக் கையலம்பிக் கொண்டு ராமு தன் அறைக்கு வந்து பேப்பரை எடுத்து வைத்துக் கொண்டான். சற்று நேரத்துக்கெல்லாம் சீதாவும் வந்தாள்.

“என்ன சீதா, இத்தனை சீக்கிரமாக உன்னைச் சமையலறை விட்டு விட்டதா!” என்றான் ராமு பேப்பரை மடித்து வைத்துக் கொண்டே.

‘ஆமாம். என்னை சமையலறை விட்டால் என்ன! பிடித்துக் கொண்டால் என்ன! நீங்கள் எங்கேயாவது என்னை அழைத்துக்கொண்டு போகப் போகிறீர்களாக்கும்!” என்றாள் முக மலர்ச்சியை மறைத்துக்கொண்டு செல்லமாகச் சிணுங்கியபடியே. மாலையின் நினைவு அழுகை



யைக் கொண்டு வராதிருக்க வேண்டுமே என்று ரொம்பக் கட்டுப்பாடாக இருந்தாள்.

"உன்னை எங்கே அழைத்துக் கொண்டு போகச் சொல்லுகிறாய்!"

சீதா விருட்டென்று எழுந்து உட்கார்ந்து, "'உன்னை எங்கேயும் அழைத்துக் கொண்டு போக எனக்கு விருப்பமில்லை' என்று சொல்லுங்களேன். ஏன் மென்று விழுங்குகிறீர்கள்!" என்றாள்.

"சீதா, சரி. எங்கே போகணும்!"

"மனைவியை அழைத்துக் கொண்டு போக இடமா இல்லை!" சீதாவுக்குத் தன் குரலே பிடிக்கவில்லை. எவ்வளவோ ஆசையாகக் கேட்க வந்தாள். ஆனால் அதைச் சொல்ல முடியாதபடி பேச்சு திசைமாறிப் போய்விட்டது. கொஞ்சமாவது அவர் தன் மனசைப் புரிந்து கொள்ளவில்லையே. ஒட்டுதலாகக் கூடப் பேசவில்லை. இனி எப்படி அவரிடம் கேட்பது! அழுகைதான் கொப்பளித்து வந்தது. "நான் எங்கேயும் போகணும்னு சொல்லவில்லை! எனக்கு இந்த வீட்டை..." கண்ணீரை மறைக்கப் புடவைத் தலைப்பைத் தேடின அவள் கைகள்.

ராமு எழுந்து உட்கார்ந்து, "சீதா, நீ ரொம்பக் களைத்துப் போயிருக்கிறாய். உன் முகம் சோர்ந்திருக்கிறது. சீக்கிரமாகப் போய்ப் படுத்துக்கொண்டு ரெஸ்ட் எடுத்துக் கொள்!" என்றான், அவள் தோள்களை அழுத்திப்பிடித்துக்கொண்டே.

சீதாவினால் அழுகையைச் சமாதானப் படுத்த முடியவில்லை. தான் ஒன்றுக்கும் உதவாத, அழகில்லாத, கணவனை வசியப்படுத்தத் திறமை இல்லாத ஒரு பிறவி என்ற நினைப்பு மேலோங்கி அழுகையை அலை அலையாக வழிய விட்டது.

"சீதா, இப்படி அசடுமாதிரி அழாதே. நான் சொல்லுவதைக் கேளு. உன் அம்மாதான் உனக்கு அடிக்கடி கடிதம் எழுதுகிறாளே. ஒரு வாரம் ஊருக்குப் போய் இருந்து விட்டு வாயேன். குழந்தைகளைக் கூட அழைத்துக் கொண்டு போக வேண்டாம். எனக்கு நாலைந்து நாள் ஆபீஸிலே லீவு வருகிறது. நான் குழந்தைகளைக் கவனித்துக் கொள்கிறேன். நீ நிம்மதியாக...!" அவன் முடிக்கவில்லை. சீதா விருட்டென்று எழுந்திருந்தாள்.

"ஆகட்டும்போகிறேன்! அப்படியே தொலைந்து போயிடறேன்!" என்று சொல்லிக் கொண்டே படுக்கையறைக்குள் புகுந்து விளக்கைக்கூடப் போடாமல் மெத்தையில் விழுந்து விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள். 'சஹாரா பாலைவனத்துக்குப் போ என்று சொல்லாமல் இந்த மட்டுமாவது சொன்னாரே!' என்று கொதித்தது அவள் உள்ளம். 'நாலைந்து நாள் லீவு வருகிறதாம் லீவு! எது வந்தால் என்ன!'

'இந்த ஆண்களே இப்படித்தான்! ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாள் என்ற பழமொழியை என்னைப் போல ஒரு பெண்தான் ஏற்படுத்தி இருக்க வேண்டும். கல்யாணமான புதிதில் அங்கே வா, இங்கே வா என்று எத்தனை ஆசையாகக் கூப்பிடுவார்! நான் வராவிட்டால் அவருக்கு வரும் ஆத்திரமும் ஏமாற்றமும்......ம்!' அழுகை நின்று நெஞ்சு தவியாய்த் தவித்தது.

ஒரு நாள் அப்படித்தான் திடீரென்று ஆபீஸிலிருந்து வந்தவர் 'கிளம்பு கிளம்பு' என்று துரிதப்படுத்தினார். அப்போது அவள் முகம் அலம்பிக்கொள்ள இல்லை. தலைவாரிப் பின்னிக் கொள்ளக்கூட இல்லை. "ஐயோ, இப்படியேவா வரச் சொல்கிறீர்கள்!" என்று கேட்டபோது, "எப்படி இருந்தாலும் எனக்கு நீ ரதிதான் வா. அலங்காரம் இல்லாதபோதுதான் நீ மிகவும் அழகாயிருக்கிறாய்" என்று சொல்லிச் சினிமாவுக்கு இழுத்துக் கொண்டு போய் அங்கே அவர் படுத்திவைத்த பாடு! அந்த ஆசையும் அன்பும் இப்போது எங்கே போய்விட்டது!

குழந்தை பிறந்தால் அவருக்குத் தன்மீது ஆசையும் அபிமானமும் பற்றுதலும் அதிகமாகுமென்று நினைத்தாள் சீதா. 'வீட்டையும், வேலையையும் என் சொர்க்கமென்று எண்ணி, அலுத்துக் கொள்ளாமல் சதா சிரித்த முகத்துடன் அவர் எதிரில் காட்சியளிக்கிறேன். இத்தனைக்கும் நான் விரும்பியது மாதத்தில் ஒருநாள், இல்லை, விசேஷ தினங்களில் உல்லாசமாக எங்காவது அழைத்துக் கொண்டு போவதைத் தானே! இந்த என் ஆசையை அவர் நிறைவேற்றி இருந்தால் இன்று என் நெஞ்சிலே இந்த ஏக்கத்தின் மேடு இப்படி உயர்ந்திருக்குமா!'

ஜன்னல் வழியாக வந்த நிலவு சுவரிலே நீந்தி விளையாடிக் கொண்டிருந்தது. சீதாவின் ஏக்கப் பார்வை, நிலவொளியிலே குளித்துக் கொண்டிருந்த காலண்டரில் பதிந்தது. அது ஏதோ ஒரு இன்ஷியூரன்ஸ் கம்பெனிக் காலண்டர். உல்லாசமாகத் தம்பதிகள் இருவர் கைகோத்துக் கொண்டு பிரகாசமான வருங்காலத்தை நோக்கி நடை போடுவதுபோலத் தீட்டப்பட்டிருந்தது படம். தென்றலின் வேகத்தை எடுத்துக் காட்ட அவள் முந்தானை பறந்து கொண்டிருந்தது.

'இதேபோல நானும்...' என்ற எண்ணம் வந்ததும் ராமுவும் அவளும் திருச்சியிலிருந்தபோது மலைக் கோயில் வசந்தோத்ஸவத்தில் உச்சி மலை மேலே இரவு இளங்காற்றில் கட்டிப் பிடித்துக் கொண்டு நின்ற கோலம் நினைவுக்கு வந்தது. இதே மாதம் தான்—சித்திரை வைகாசியில். அவள் நினைவு நெட்டுயிர்த்து நின்றபோது ராமு உள்ளே வந்து விளக்கைப் போட்டான்.

"நீ இன்னும் தூங்கவில்லையா சீதா!" என்றான். சீதா அதற்குப் பதில் சொல்லவில்லை. "நான் நாளைக்குத் திருச்சிக்குப் போய் விட்டு வரப்போகிறேன்" என்றாள் பட்டென்று. எத்தனையோ காலமாக மறுத்து வந்தவள் திடீரென்று அந்த முடிவுக்கு எப்படி வந்தாள்! கடந்த கால நினைவுகளின் போதையிலே அவள் தன்னை மறந்து விட்டாளா!

"நான் வேண்டாமென்று சொல்கிறேன்! நான் தான் வெகுநாளாகப் போய் விட்டுவா என்கிறேனே! ஏன் சீதா, எல்லா ஜன்னல் கதவுகளையும் திறந்து வைத்துக் கொள்ளுவதற்கென்ன!" என்று ஜன்னல்களைத் திறந்து நிலவு வெள்ளத்தை உள்ளே பாயச் செய்தான்.

மறுநாள் சீதா தன் பிறந்த வீட்டுக்குக் கிளம்பி விட்டாள். குழந்தைகளையும் அழைத்துப் போவதாக அவள் எவ்வளவோ சொல்லியும் ராமு, அவளை மட்டும், வீட்டுத் தொல்லைகளை மறந்து பத்து நாள் நிம்மதியாக இருந்து விட்டு வரும்படி அனுப்பி வைத்தான். சீதாவுக்கும் தான் மணப் பெண்ணாக இளமைத் துடிப்புடன் கணவனோடு தனிக் குடித்தனம் நடத்திய இடத்தையும் அனுபவித்த இன்பக் கேளிக்கைகளையும் நினைவு படுத்திக் கொள்ள ஆசையாக இருந்தது. புறப்பட்டு விட்டாள். ராமுவுக்குக்கூட அவளை அனுப்பிய பிறகு வியப்பாக இருந்தது. இரண்டு மூன்று வருஷமாகப் போகவே மாட்டேன் என்று பிடிவாதமாக இருந்தவள் இன்று திடீரென்று பிறந்த வீட்டிற்குக் கிளம்பி விட்டதன் காரணம் புரியவில்லை.

தங்கள் பெண்ணின் திடீர் விஜயம் சீதாவின் பெற்றோர்களுக்கும் ஆச்சரியமாக இருந்தது.

குழந்தைகளைக்கூட அழைத்துக் கொண்டு வராமல் அவள் மட்டும் தனியாக வந்திருக்கிறாளே !

"கட்டிப் போட்டது போல இருந்தது அம்மா! ஒரு நாள் நிச்சிந்தையாக இங்கே இருந்து விட்டுப் போகலாமே என்றுதான் வந்தேன்" என்று சொன்ன சீதாவின் வார்த்தையில் அவர்களுக்கு நம்பிக்கைப்படவில்லை. கணவனில்லாமல் அவள் எங்குமே வர விரும்பாதவளாயிற்றே !

சாப்பாடான பிறகு மத்தியானம் கூடத்தில் அம்மாவின் அருகில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த சீதா, "ஏன் அம்மா, நம்ம ஊரிலே வசந்தோத்ஸவம் நடக்குமே. மலைக்கோட்டை உச்சிப் பிள்ளையார் மலைமேலே உள்ள மண்டபத்திலே ஸ்வாமியும் அம்மனும் ஊஞ்சலாடுவார்களே அது இந்த மாதத்தில்தானே! அந்த உத்ஸவம் நடந்தாகி விட்டதா!" என்று கேட்டாள்.

"இப்பத்தான் நடந்து கொண்டிருக்கு. நேத்திக்குத்தான் இரண்டாம் நாள் போயிருக்கு. பக்கத்தாத்திலே கூடப் போயிருந்தா !" என்றாள் அவள் தாயார்.

சீதாவுக்கு நெஞ்சிலே ரத்தம் பொங்கி நின்றது. எத்தனை பொருத்தமாக அவள் வந்திருக்கிறாள்!

அன்றிரவு சீதா வசந்தோத்ஸவத்திற்குப் போனாள். அவள் நினைவிலே இளமை வெறி ஏறி இருந்தது. அவளுக்குக் கல்யாணமான புதிதில் இந்த வஸந்தோத்ஸவத்திற்கு வந்திருக்கிறாள். அந்த நிகழ்ச்சியை அவளால் மறக்க முடியுமா !

அவள் வஸந்த மண்டபத்தைத் தாண்டி மேலே ஏறி மணி மண்டபத்தினருகில் வந்தாள். நகரின் மின்சார விளக்குகள் பாதாளத்திலே கண் சிமிட்டிச் சிரித்துக் கொண்டிருந்தன. சிலு சிலு என்று வசந்தம் வீசிக் கொண்டிருந்தது. அந்தக் காற்றை ஆழ்ந்து சுவாசித்துக் கொண்டு நின்றாள் சீதா. தூரத்திலே ஒரு இளம் தம்பதிகள் சூழ்நிலையை மறந்து உட்கார்ந்திருந்தனர். கணவனின் மார்பிலே சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள் பெண். அவர்கள் இந்த உலகத்திலேயே இல்லை. நாதசுரக்காரனின் ஊஞ்சல் பாட்டையோ, அருகில் நிற்கும் சீதாவையோ உணரும் சக்தி அவர்களுக்குக் கொஞ்சங்கூட இல்லை.

சீதாவின் உடலிலே இன்பப் புல்லரிப்பு ஓடி நெளிந்தது. இதே போலத்தான் இதே இடத்திலேதான் அவளும் அன்று ராமுவின் அணைப்பிலே எப்படி உருகிக் கொண்டிருந்தாள் ! கல்யாணமான புதிது. அவர் ஸ்பரிசம் கூட உடலிலே குறு குறுப்பை உண்டாக்கும் வயது. இன்னும் அவரோடு அவள் கலகலப்பாகப் பேசக்கூடப் பழக வில்லை. அந்த நிலையிலே அவளை மலைக் கோட்டைக்கு அழைத்தான் ராமு. அவளுக்கு வெட்கமாக இருந்தது. வெளிச்சமில்லாத அந்த இடத்திலே, இளந் தென்றலின் வருடலிலே, அவர் அணைப்பிலே அன்று அவள் கண்ட இன்பம் !

நின்று கொண்டிருந்த சீதாவின் கால்கள் அந்த இன்ப நினைவினால் ஜில்லிட்டுப் போய்விட்டது. அன்றிரவு சீதாவுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை.

மறுநாள் அவள் எழுந்திருந்தபோது, தான் எப்போதுமே பதினெட்டு வயதுச் சீதாவாக, புது மணப் பெண் சீதாவாக இருந்திருக்கக் கூடாதா என்ற எண்ணம்தான் மேலோங்கி நின்றது.

கணவனோடு தனிக் குடித்தனம் நடத்திய ஸ்டோரிலுள்ள அந்தப் பழைய வீட்டைப் பார்த்து விட்டு வரவேண்டும் போலிருந்தது அவளுக்கு. இப்போது அவள் உள்ள வீட்டில் நாலில் ஒரு பங்குகூட இல்லாத அந்தச் சின்ன வீட்டில் அவள் அனுபவித்த இன்பம்தான் எத்தனை !

அவள் அந்த ஸ்டோருக்குப் போனபோது அவள் குடியிருந்த வீட்டு வாசலில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அந்தப் பெண்ணுக்குப் பதினெட்டு வயதுதானிருக்கும். சீதா தன் வீட்டைக் குறிப்பாகப் பார்ப்பதைக் கண்ட அந்தப் பெண், "யாரைப் பார்க்கிறீர்கள், மாமி !" என்றாள்.

"யாரையுமில்லை. நாலைந்து வருஷத்துக்கு முன்னாலே நான் இந்த வீட்டிலே குடி இருந்தேன். இப்பொழுது இந்தப் பக்கம் வந்தேன். பழைய இடத்தைப் பார்க்க வேணும் போல ஆசையாக இருந்தது. ஆகவே வந்தேன்" என்றாள் சீதா கொஞ்சம் வெட்கத்துடன்.

"அதற்கென்ன! இப்போதுங்கூட இது உங்கள் வீடு மாதிரிதான். உள்ளே வாருங்களேன்" என்று வரவேற்றாள் அந்தப் பெண். "வேறு யாருமில்லை. அவர் ஆபீஸுக்குப் போயிருக்கிறார். நான் மட்டும் தான்..." என்று சீதாவின் தயக்கத்தையும் போக்கினாள்.

"தனிக் குடித்தனமா ! உன் பேரென்னம்மா!"

"சாந்தா...தனிக் குடித்தனம்தான் மாமி. பகல் எல்லாம் தனியாக இருக்க வேண்டி இருக்கிறது!" என்று சொல்லிவிட்டு மெல்லச் சிரித்துக் கொண்டாள் அந்தப் பெண்.

சீதா உள்ளே வந்தாள். அவளும் இப்படித் தானே தனிக் குடித்தனம் நடத்தினாள்! இதே வயதுதான். உள்ளே நுழைந்ததும் அவள் சம்மதமில்லாமலே அவள் பார்வை இடது கைப் பக்கமிருந்த சிறிய அறைக்குத் திரும்பிற்று. அதுதான் அவர்களின் அந்தரங்க அறையாக இருந்தது. அவள் மண வாழ்வின் இன்பப் புல்லரிப்புகளுக்கெல்லாம் காரணமாக இருந்து அவளை மகிழ்வித்த அறை அதுதான். இப்போதும் அங்கே இரண்டு மெத்தைகள் ஓரத்தில் சுருட்டி வைக்கப்பட்டிருந்ததைக் கண்டதும் சீதாவின் முகம் சிவந்து விட்டது. அது இப்போதும் அந்த இளந் தம்பதிகளின் படுக்கையறையாக விளங்குகிறது என்பதை

## மகா கும்பாபிஷேகம்

அகில இந்திய சாயி சமாஜத்தை ஆரம்பித்து வைத்து அதன் தலைவராக இருந்து தொண்டாற்றி வரும் ஸ்ரீலஸ்ரீ நரசிம்ம சுவாமி அவர்கள் பொது மக்களின் பொருள் உதவியைக் கொண்டு சென்னை மயிலாப்பூரில் சாயி பாபாவுக்கு ஒரு கோயில் கட்டியிருக்கிறார். இந்த மாதம் பத்தொன்பதாம் தேதியன்று அந்தக் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடக்கப் போகிறது. இந்த உத்தம கைங்கர்யத்துக்குப் பொருள் உதவி செய்ய விரும்புவோர், "அகில இந்திய சாயி சமாஜம், மயிலாப்பூர், சென்னை - 4" என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கும்படி மேற்படி சமாஜத்தின் கௌரவக் காரியதரிசியான ஸ்ரீ எம். டி. கிருஷ்ணமூர்த்தி கேட்டுக் கொள்கிறார்.

ஊடுருத்துக் கொண்டாள் சீதா. தன் நினைவைப் பசுமையாக்க எல்லாம் தான் அனுபவித்தது போலவே இருப்பதைக் கண்டு அவள் உள்ளம் பூரித்தது. உடல் சிலிர்த்தது.

''உட்காருங்களேன் மாமி!'' என்று உபசரித்தாள் சாந்தா.

சீதா அந்த அறைக்குள் உரிமையோடு எட்டிப் பார்த்தாள். அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. தாங்கள் மாட்டி யிருந்த அதே இடத்தில்தானு இவர்களும் நிலைக் கண்ணாடியையும் கோட் ஸ்டாண்டையும் மாட்டி இருக்க வேண்டும்!

சீதாவுக்கு அந்த வீட்டின் ஒவ்வொரு மூலையும் ஒவ்வொரு சம்பவத்தை நினைவு படுத்திப் புல்லரிக்கச் செய்து கொண்டிருந்தது. ஒரு தடவை அவர் மாமா பெண் கலா வந்திருந்தாள். அவளை அவர் மணப்பதாக இருந்தார் என்பதும் அவளுக்குத் தெரியும். இப்போது தன்னை மணந்து கொண்டு விட்டார் என்றாலும் கலாவைச் சீதா சந்தேகக் கண்களோடு பார்த்தாள்.

அன்று மாலை கலாவுடன் ராமு சினிமாவுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது அவளையும் கூப்பிட்டான். சீதா தான் வரவில்லை என்று மறுத்து விட்டாள். காரணம், தன்னை முதலில் அவர் அழைக்கவில்லை என்பதோடு, தனக்காக அவர் சினிமாவுக்குப் போகவில்லை, கலாவுக்காகத்தான் போகிறார் என்பதும் அவளை அவர்களோடு போகாமல் நிறுத்தி விட்டது. ராமுவும் சீதாவை அதிகம் வற்புறுத்தி அழைக்காமல் போய் விட்டான். சீதாவுக்குத் துக்கம் துக்கமாக வந்தது. சாப்பிடாமல் அழுது அழுது வீங்கிப்போன முகத்துடன் கணவன் வரவுக்காகக் காத்திருந்தாள். கலாவை அவள் சித்தி வீட்டில் விட்டுத் திரும்பிய ராமுவிடம் அவள் கொண்ட ஊடல்! அந்த அறையின் மூலையில் நின்றுகொண்டு அவள் விசித்து விசித்து அழுததையும், ராமு பரிதாபமாகத் தான் செய்ததை மன்னிக்கும்படி கெஞ்சியதையும் நினைத்துப் பார்த்தாள். அவளுக்குப் பத்து வருஷ இளமை திரும்பி விட்டது.

அந்தப் பெண்ணிடமிருந்து விடை பெற்றுக் கொள்ளும்போது ''ஸ்நானம் பண்ணுமல் இருக்கிறயா! எத்தனை மாதம்!'' என்று கேட்கத் தவறவில்லை சீதா! இதைக் கேட்டதும் சாந்தாவின் முகத்திலே ஜிவ்வென்று ரத்தம் பரவி விட்டது. ''ஆமாம், மாமி! இது மூணுமாசம்'' என்று சொல்லி விட்டு உள்ளே ஓடிவிட்டாள் அந்தப் பெண்.

'இப்படித்தானே நானும் முதல் குழந்தை உண்டானபோது வெட்கப் பட்டேன். அவர் என்னை எத்தனை கேலி செய்தார்' என்பதை நினைத்துக் கொண்டே திரும்பி வந்தாள் சீதா.

சாயங்கிரம் சீதாவின் தகப்பனர் மாப்பிள்ளையைப் பற்றி பேச ஆரம்பித்தார். ''என்னம்மா சீதா. மாப்பிள்ளை ஆபிஸிலே லீவுகூட எடுத்துக் கொள்ளாமல் ரொம்ப வேலை செய்கிறதாகக் கேள்விப் பட்டேனே! நிஜம்தானு! நம்ம சிவசாமியின் மருமான் வந்திருந்தான். அவனும் மாப்பிள்ளை ஆபீஸிலேதானே இருக்கிறன். பிரமோஷன் கிடைக்க வேண்டுமென்று பெரிய பெரிய பொறுப்புகளை எல்லாம் வலுவிலே வாங்கிப் போட்டுக் கொள்ளுகிறராம். இது பற்றிக் கேட்டதற்கு 'என்னப்பா செய்யறது! இரண்டு குழந்தைகளாச்சு. குடும்பம் பெருத்துப் போச்சு. சம்பாதிக்காமல் என்ன செய்யறது!' என்று சொன்னராம். அப்படி என்ன குடும்பம் பெரிசா பிடுத்து! இரண்டு குழந்தைகள்தானே! இதுக்கே இப்படிக் கவலைப்படற உன் புருஷன் இன்னும் இரண்டு பிறந்தால் என்ன செய்வாரோ! நீயாவது சொல்லிப்பாரம்மா. சுவரை வைத்துத் தானே சித்திரம் எழுதணும்! அதிகமா உழைத்தால் உடம்பு எதற்கு ஆகும்!'' என்று சொல்லிக் கொண்டு போனுர் கிழவர்.

இப்போதுதான் அவளுக்கு எல்லாம் புரிந்தது. தன் கணவன் சதா வேலை வேலை என்று ஆபீசே கதியாக இருப்பதின் காரணம் தெரிந்தது.

பொறுப்பை உணராமல் தான் குழந்தைபோல எதற்கோ ஆசைப்பட்டு மனசை அலட்டிக் கொண்டு விட்டதை நினைக்க நினைக்க அவளிடமே அவளுக்கு வெட்கமாக, வெறுப்பாக இருந்தது. உல்லாசத்தையும், விளையாட்டையும், கேளிக்கைகளையும் அனுபவிக்க வேண்டியது ஒரு குறிப்பிட்ட வயதும் காலமும்தான். பிறகு அனுபவித்த இன்பங்களின் நினைவிலே மகிழ்ந்து போக வேண்டியதுதான் ஒரு பெண்ணின் லட்சணம் என்பதை உணர்ந்து கொண்டபோது இரண்டு நாளாக அவளோடு விளையாடிய நினைவுச் சுழல் ஒரு நிலைப்பட்டது. குழந்தை மனம் தெளிந்தது.

''அப்பா, நான் இரவு வண்டிக்கே கிளம்பியாக வேண்டும்'' என்ற திடீர் முடிவையும் உருவாக்கியது. மகளின் உத்தரவு பெற்றேர்களுக்கு எந்த விதமான ஆச்சரியத்தையும் உண்டாக்கவில்லை.

காலையில் சீதா உள்ளே நுழைந்த போது ராமு இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு காப்பி போட்டுக் கொண்டிருந்தான்.

''அப்பா, அம்மா வந்துட்டாப்பா'' என்று கத்தினுன் சேகர். கையில் பால் கரண்டியுடன் வெளியே வந்த ராமு திகைப்புடன், ''என்ன சீதா! இரண்டு நாள்கூட ஆகவில்லையே!'' என்றான். உள்ளே பால் பொங்கி வழியும் வாசனை வந்தது. சீதாவின் கண்களிலும் நீர் பொங்கியது.

''ஒருவாரம் இந்த வீட்டுக் கவலை இல்லாமல் போய் இருந்து விட்டு வா என்று சொன்னால் இப்படி உடனே வீட்டை நினைத்துக் கொண்டு ஓடி வந்து விட்டாயே!'' என்றான் ராமு.

சீதாவுக்கு அவன் அன்பு அழுகையை வழிய வைத்து விட்டது. ''ஏன், நீங்கள் ஆபீஸ் வேலையை நிம்மதியா வீட்டிலேயே கொண்டு வந்து செய்யலா மென்று! எல்லாம் பிறத்தியாருக்குத் தான் வாத்தியார். நீங்கள் மட்டும் பிரமோஷன் கிடைக்கணும், நிறைய வருவாய் வரணும்னு குடும்பம் பெருகிப் போச்சுன்னு உடம்பை உடம்புன்னு பார்க்காமல் உழைக்கிறீர்களே!''

''அடி அசடே! நாங்கள் ஆண்கள். சம்பாதித்து உங்களைச் சந்தோஷமாக வைத்துக் கொள்ளக் கடமைப் பட்டவர்கள். தெரிந்ததா!''

''போதும், போதும் உங்கள் சமாதானம்!'' என்றாள் சீதா. அவள் கண்ணீர் உலர்ந்து இதழ் மலர்ந்திருந்தது.

''சரி, இன்றைக்கு எக்ஸிபிஷனுக்குப் போகலாம், வருகிறாயா!'' என்று கேட்டான் ராமு.

''நான் எங்கேயும் வரவில்லை. அங்கே போய்க் காசை வீணுக விரயமாக்குவானேன்!'' என்றாள் பொறுப்பு வந்த பெண்ணுக.

''எனக்குத் தெரியுமே! நான் கூப்பிட்டால் வர மாட்டேன் என்கிறது. பிறகு என்னை எங்கேயும் அழைத்துப் போகவில்லை என்று சிணுங்குவது!'' என்று அவள் தலையில் செல்லமாகக் குட்டினான் ராமு.

''இனிமேல் நான் சிணுங்கவே மாட்டேன். நீங்கள் வேண்டுமானால் பாருங்களேன்'' என்றாள் சீதா. அப்பொழுது ''அம்மா, எங்களுக்குக் காப்பி!'' என்று கேட்டுக் கொண்டே இரண்டு குழந்தைகள் உள்ளே ஓடி வந்தன!

# நீங்கள் வாங்கக்கூடியதே

## ஒரு நுட்பமான மினியேச்சர் காமிரா

முதலில் விலைகளை கவனியுங்கள்; இந்த 'கோடக்' மாடல்களுக்கு ஒரு நல்ல மடக்குக் காமிராவைவிட விலை அதிகமில்லை. எனினும் மிக நுட்பமாக இயங்கும் சிறு சைஸ் காமிராக்கள் இவை. அடக்கமான அளவு, எடைக் குறைவு, உபயோகத்தில் சிக்கனம், போகஸின் உன்னதமும், இவ்வெல்லா சௌகரியங்களும் பொருந்தியவை.

உங்கள் கோடக் வியாபாரியிடம் இந்த காமிராக்களை சென்று போய்ப்பாருங்கள்.



### கோடக் 'ரெடினெட்' காமிரா

ஷ்னீடர் 'ரியோமார்' f/4.5 கோட்டட் லென்ஸ் மற்றும் 1/300 செகண்டு வரை வேகமுள்ள, ப்ளாஷ் இணைப்புடன் கூடிய 'ப்ரான்டர்' S ஷட்டர். சிக்கனமான 'கோடக்' 135 பிலிமில் (35 mm) படமெடுக்கக்கூடியது. நெகடிவ் அளவு 24x36mm. பாதுகாப்பான கேஸுடன் விலை ரூ. 275/-



### 'ரெடினா' Ia காமிரா

விலை நயமான ஒரு உன்னத மினியேச்சர் காமிரா. இரண்டு வகை துரிதமான லென்ஸ்களுடன் கிடைக்கும். இரண்டும் பூச்சுள்ளவை, முற்றிலும் வர்ணத்திருத்தமுள்ளவை, முழுக்கலர் 'கோடக்ரோம்' அல்லது சாதாரண கறுப்பு-வெள்ளை பிலிமில் செப்பமான படங்கள் எடுக்கும். புதிய காம்பூர் ரேபிட் ஷட்டர் 1/500 செகண்டு வேகத்தில் கூட ப்ளாஷ் இணைப்புடன் இயங்கக் கூடியது. விரல் அசைப்பில் ஷட்டரை இயக்கவும் பிலிமைத் திருப்பவும் முடிவதால் இரட்டிப்பு எக்ஸ்போஷருக்கு இடமேயில்லை. நெகடிவ் அளவு 24 x 36 mm. 'ரெடினா-க்ஸெனார்' f/3.5 லென்ஸ் மற்றும் எவர்-ரெடி கேஸுடன் விலை ரூ. 370/-

'ரெடினா-க்ஸெனார்' f/2.8 லென்ஸ் மற்றும் எவர்-ரெடி கேஸுடன் விலை ரூ. 420/-

இவ்விலைகளில் விற்பனை வரி சேராது

**போக்கஸ் பிசகிய படங்கள் துர்லபம்**
மினியேச்சர் காமிரா லென்ஸின் போக்கஸ் நீளம் குறைவு அதாவது ஆழம் அதிகம். எனவே பெரிய காமிராக்களில் தென்படுவது போல் அவ்வளவாக போக்கஸ் பிழைகள் தெரியாது. துரிதமான செயல் படங்களுக்கு மிக உபயோகமானது.

**குறைந்த செலவில் அதிக படங்கள்**
மினியேச்சர் நெகடிவ்வுக்கு ஆகும் செலவு மிகச்சொற்பம். ஆதலால் பிலிம் விரயமோ என்ற கவலை குறையும். எனவே சந்தேகத்தினால் கைவிடப்பட்ட காட்சிகளைக் கூட முயற்சித்துப் பிடித்துவிடலாம்.

**வேண்டும்போதெல்லாம் உபயோகிக்கத் தயார்**
'கோடக்' மினியேச்சர் காமிராவை தூக்கிச் செல்வது மிக எளிது. ஆகையால் வேண்டும் போதெல்லாம் உபயோகிக்கத் தயாராக உங்களிடம் வைத்துக்கொள்ளலாம். அனேகவில் நிதிபதாகையிலும் யாருடைய கவனத்தையும் இழுக்காமல் நுட்பமான அரிய சிறுப்புகள் பிடித்துவிடக்கூடும்.

உங்கள் கோடக் வியாபாரியை இன்றே போய்ப்பாருங்கள்

## கோடாக் லிட்

(இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)

பம்பாய் – கல்கத்தா – டில்லி – மதராஸ்

K. 7702 (A)

# நீதிபதியின் தீர்ப்பு

ரா. பாலகிருஷ்ணன்

இரவு மணி இரண்டு அடித்தது. இலேசாகக் கண் விழித்தார், நீதிபதி நித்யானந்தம். மீண்டும் அந்தப் பெரிய கடிகாரம் இரண்டு தடவை ஒலித்தது போலிருக்கவே அவர் கண்களைக் கசக்கிக் கொண்டு சுவரை உற்று நோக்கினார். மணி தெரியவில்லை. விளக்கைப் போட எழுந்தார். மூன்றாம் முறையாகக் கேட்ட அந்தச் சப்தம் அவரைத் திடுக்கிடச் செய்தது. தலையணையின் கீழிருந்த கைத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு சந்தடியின்றிச் சமையலறையை அணுகியதும் அவர் சந்தேகம் வலுப்பெற்றது. சமையலறைக் கதவுகளின் இடையே உற்று நோக்கியவர், ஒரு கணம் அப்படியே சிலைபோல் நின்றார். வெளிப்புறத்து ஜன்னலின் கம்பிகள் இரண்டு பெயர்க்கப்பட்டிருந்ததும், மூன்றாவது கம்பியையும் துண்டிக்க ஒருவன் மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்ததும், மங்கலான விளக்கொளியிலே அவருக்குத் தெளிவாகத் தெரிந்தது.

அந்த ஒரு கம்பிதான் பாக்கி. அதுவும் நிலை பெயர்ந்து விட்டால், அவன் உள்ளே குதித்து விடுவான். பிறகு......! அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு இருளிலே ஓடி மறைந்து விடுவான். அந்த நிலைமையில் அவர் மூளை துரிதமாக வேலை செய்யத் தொடங்கியது. திரும்பிச் சென்று வேலையாட்களை எழுப்பி அழைத்து வருவதென்றால் அந்த அரவம் கேட்டுத் திருட வந்தவன் தப்பியோடி விடுவான். அறையைச் சுற்றிக் கொண்டு மதில் சுவரை யொட்டினாற்போல் சென்று பின் பக்கமாகத் தாக்கலா மென்றாலோ, உலர்ந்து உதிர்ந்து கிடக்கும் இலைகளின்மேல் அடி யெடுத்து வைக்கும் சலசலப்புக் கேட்டு அவன் உஷாராகி விடுவான். ஆகவே அந்த இரண்டு யோசனைகளும் பயனில்லை என்பதை உணர்ந்து, திருடன் சமையலறைக்குள் இறங்கும் வரை காத்திருந்தார். அந்தச் சிறு ஜன்னலின் வழியே உள்ளே குதிக்க வாட்டசாட்டமா யிருந்த அவனுக்கு ஐந்து நிமிஷங்களுக்குமேல் பிடித்தது. அவர் எதிர்பார்த்த சந்தர்ப்பம் கிட்டி விட்டது.



தாமதமின்றி அறையின் வெளித் தாழ்ப்பாளை நீக்கிவிட்டு ஓசைப்படாமல் கதவைத் திறந்த நித்யானந்தம், "அசையாமல் அப்படியே நில்! தப்பியோட முயன்றால், கையிலே துப்பாக்கி யிருக்கிறது; சுட்டுத் தள்ளி விடுவேன்!" என்று எச்சரித்த வண்ணம் விளக்கைப் போட்டார்.

'தான் வசமாக அகப்பட்டுக் கொண்டு விட்டோம், இனி தப்புவது அசாத்தியம்' என்பதை யுணர்ந்த திருடன் பிரமை பிடித்தவன்போல் நின்றான். பிரகாசமான அந்த விளக்கொளியில் அவன் முகத்தை உற்று நோக்கிய நித்யானந்தமும் ஏன் அவ்வாறு செயலற்று நிற்க வேண்டும்! அவருக்குப் பேச நா எழவில்லை. நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. ஆம்; அவனை அதற்கு முன்பு எங்கேயோ பார்த்திருப்பதாக ஒரு ஞாபகம்! எங்கே யென்றுதான் புலப்படவில்லை.

ஆனால், கையில் துப்பாக்கியுடன் தன்னை விழுங்கி விடுபவர்போல் பார்க்கும் நீதிபதியின் முகம் அவனுக்கு ஒரு கொடிப் பொழுதில் ஞாபகத்துக்கு வந்து விட்டது. எப்படி அவனால் மறக்க முடியும்! "அட பாவி! உன் வீட்டுக்கா வந்தேன்!" என்று குரோதம் நிறைந்த குரலில் கேட்டான் அவன். ஆம். அதே குரல்தான். இப்போது சந்தேகமே யில்லை அவருக்கு. சாட்சாத் அவனேதான்!

* * *

ஏறக்குறைய இரண்டு வருடங்களுக்கு முன், நீதிபதி நித்யானந்தத்தின் முன்பு அந்த வழக்கு விசாரணைக்கு வந்தது. பெரியதொரு பாங்கியைக் கொள்ளை யடித்த குற்றம்தான் என்றாலும் வழக்கு என்னவோ சாதாரண மானதுதான். சிக்கல்கள் அதிகமில்லை. குற்றவாளியின் வாக்குமூலம் ஒன்றைத் தவிர அவனுக்குச் சாதகமான அம்சம் வழக்கில் ஏதுமே யில்லை. ஆயினும் தீர்ப்பளித்து விட்டு வீடு திரும்பிய நித்யானந்தத்தின் முகத்தில் ஈயாட வில்லை. அமைதி நிலவும் அந்த முகத்திலே குழப்பத்தின் சாயல்தான் படிந்திருந்தது.

1950-ம் வருடம் நவம்பர் மாதம் பதினெட்டாம் தேதி இரவு சுமார் ஒரு மணிக்கு குபேரா பாங்கியிலே கன்னம் வைத்து, தன் கூட்டாளிகள் மூவருடன் உள்ளே நுழைந்து இரும்புப் பெட்டியை உடைத்து அடியிற் கண்ட ஜாபிதாவில் காணப்பட்டுள்ள பொருள்களைக் கொள்ளையடித்ததுடன், முன்னெச்சரிக்கையாகக் காவற்காரனின் கை கால்களைக் கட்டிப் போட்டு வாயிலே துணியை அடைத்து விட்டுத் தப்பியோடிய நால்வரில், கனம் கோர்ட்டாரின் முன்பு ஆஜர் செய்யப் பட்டிருக்கும் குற்றவாளி ஒருவனே பிடிபட்டிருக்கிறான். மேற்படி சம்பவங்களுக்கு ஆதாரமாக, குறிப்பிட்ட தினத்தில் மாலை சுமார் நான்கு மணிக்கு இவன் குபேரா பாங்கியின் முன்பு இரண்டு தடவைகள் போய் வந்ததைப் பாங்கியின் காவலாளி கவனித்திருக்கிறான். தன்

வாயில் துணியைத் திணித்துக் கை கால்களைக் கட்டிப் போட்டதும் இதே நபர்தான் என்பதை ருசுப்படுத்தத் தயார், என்று காவலாளி வாக்கு மூலம் கொடுத்திருக்கிறான்.

மேற்கண்ட குற்றங்கள் தவிர, தன் கூட்டாளிகளைப் பற்றிய விவரம் எதுவும் தனக்குத் தெரியாதென்று மறுத்து, அவர்கள் தப்பியோடித் தலைமறைவா யிருக்க அனுசரணையாக விருக்கும் குற்றத்துக்கும் எதிரியே பொறுப்பாளி.—இது தான் வழக்கு.

வழக்கு நீதி மன்றத்துக்கு வந்தபோது, சர்க்கார் தரப்பில் குற்றவாளி விசாரிக்கப்பட்டான்.

"உன் பெயர்!"

"பொன்னுசாமி."

"தொழில்!"

"விவசாயம்."

"கொள்ளையடிப்பது இல்லையா!"

குற்றவாளி மௌனம் சாதித்தான். மற்றவர்கள் சிரித்தனர். அந்தச் சிரிப்பு அவனை நெருப்பாக எரித்தது. பொன்னுசாமியின் சார்பில் யாரும் ஆஜராக வில்லை. ஆஜியிருந்தால் அந்தக் கேள்விக்கு ஆட்சேபம் கிளம்பியிருக்குமே பொருத்த மற்றது, அதிகப் பிரசங்கித்தனம் என்று!

நீதிபதி மேஜையின்மீது லேசாகத் தட்டியதும் நிசப்தம் நிலவியது. வக்கீல் தொடர்ந்தார். "உன்மீது சாட்டப் பட்டிருக்கும் குற்றங்களை நீ ஒப்புக் கொள்ளுகிறாயா!"

அவன் மீண்டும் மௌனம் சாதித்தான்.

"குறிப்பிட்ட தினம் நீ குபேரா பாங்கி வாசலில் குறுக்கும் நெடுக்குமாக இரண்டு தடவைகள் போனதுண்டா!" என்று முழங்கியது அந்த வக்கீலின் குரல். அவன் பதில் கூறினால்தானே!

"மௌனம் சம்மதத்தின் அறிகுறி. ஒன்று உன் குற்றங்களை நீ ஒப்புக்கொள்ள வேண்டும். அல்லது மறுத்தால் தக்க சாட்சி, முகாந்திரங்களுடன் உன் பேச்சுக்கு ஆதாரம் காட்ட வேண்டும். தெரிகிறதா!" என்று கர்ஜித்தார் அவர்.

கால்கள் தள்ளாடக் கூண்டில் நின்று கொண்டிருந்த பொன்னுசாமியின் முகத்தில் சந்தர்ப் பத்தை யொட்டிய சோகமும், தன்னை நோக்கி விளாசப்பட்ட கேள்விகளைக் குறித்து ஏளனமும் மாறி மாறித் தோன்றின. நீதிபதியின் முகத்தைப் பார்த்துப் பேசினான், அவன்.

"எசமான்! நான் எந்த விதமான குற்றத்தையும் செய்யவில்லை. ஒரு மாதத்துக்கு முன் தலையாற்றிலே வெள்ளம் பெருகிப் பல இடங்களில் உடைப்பெடுத்துக் கொண்டதும் அதனால் பல கிராமங்கள் அடியோடு நாசமாகி விட்டதும் தங்களுக்குத் தெரிந்திருக்கும். அவைகளுள் எங்கள் கிராமமும் ஒன்று. உடைப்பு ஊரை யழித்த தினம், கரைகளைப் பலப்படுத்துவதற்காக நானும் கிராமத்துக் குடிபடைகளுமாகச் சேர்ந்து ஊருக்கு ஒரு மைல் மேற்கே சென்று பலவீனமாயிருந்த இடங்களில் மண்ணை வெட்டிப் போட்டுக் கரைகளைப் பலப்படுத்தும் வேலையில் ஈடுபட்டோம். கூலி ஏதும் கிடையாது. பொது நன்மைக்குத்தான். முடிந்த வரையில் பாடுபட்டும் உடைப்பைத் தடை செய்ய முடியவில்லை. கரை பலமாக இருந்த இடங்களில்கூட ஜலம் வழிந்தோடத் தலைப்பட்டது. நிமிஷத்துக்கு நிமிஷம் நொங்கும் நுரையுமாகப் பெருகிக் கொண்டே யிருந்த இயற்கையின் வேகத்தை அணைபோட்டு நிறுத்துவது மனித யத்தனத்திற்கு அப்பாற் பட்டது என்று நிதர்சனமாகத் தெரிந்து விடவே, நாங்கள் சோர்வுடன் வீடு திரும்பினோம். இருட்டி ஒரு ஜாமம் ஆகி விட்டது.

"வீடு திரும்பினோம் என்று சொல்வதுகூடப் பிசகு தான். சில ஓட்டு வீடுகள் மட்டுந்தான் அந்தப் பிரவாகத்துக்கு ஈடு கொடுத்து எஞ்சி நின்றன. என் குடிசையோ, அக்கம் பக்கத்திலிருந்த குடிசைகளோ எதுவுமே இருந்த இடமே தெரியவில்லை. ஆற்றுப் படுகையி லிருந்த அந்தப் பெரிய வேல மரத்தடியில்தான் என் குடிசை யிருந்தது. அந்த வேல மரமே பாதியளவு மூழ்கி யிருந்தது. எனக்குச் 'சொரே'ரென்றது.

"'வேலம்மா! வேலம்மா!' என்று என் மனைவியின் பெயரைச் சொல்லி இரவு வெகு நேரம் வரையில் தொண்டை கிழியக்கத்தியும் பதிலே கிடைக்கவில்லை. ஊரே தத்தளித்துக் கொண்டிருக்கையில் என் மூன்று வயதுப் பையனுடன் தனியாகச் சிக்கிக்கொண்ட அவளால் என்ன செய்திருக்க முடியும்! எங்கு போயிருப்பாள்!

உம், எங்கே போயிருப்பாள்! எத்தனையோ வாழை மரங்கள் வேரோடு நிலை பெயர்ந்து மிதந்து கொண்டிருந்தனவே அந்த வாழைக் கட்டைகளோடு கட்டையாக வேலம்மாளும் என் குழந்தையும்...... அதற்கு மேல் அங்கு நின்று யோசனை செய்யத் தோன்றவில்லை எனக்கு. தொலை தூரத்தில் 'ஓடு ஓடு' என்ற குரல்கள் எழும்பின. இப்போது ஓடா விட்டால் என் உயிருக்கும் ஆபத்து என்ற உணர்ச்சியால் உந்தப்பட்டு கால்கள் போன போக்கிலே, தரை தென்பட்ட திசையிலே ஓடினேன். இரவு முழுவதும் ஓடிக் கொண்டே யிருந்தேன். கால்கள் சோர்ந்து விழும் வரையில்" என்று சொல்லிச் சற்றே நிறுத்தி, தன் முகத்தில் அரும்பிய வியர்வையும் கண்களின் துளித்த நீர் முத்துக்களையும் ஒரு முறை துடைத்துக் கொண்டான், பொன்னுசாமி.

வெண்டா வெறுப்பாகப் பொறுமையின்றி அவன் கதையைக் கேட்டுக் கொண்டிருந்த சர்க்கார் வக்கீல் எழுந்து, "கனம் கோர்ட்டார்..." என்று எதையோ சொல்ல முன் வந்தார்.

நீதிபதி குறுக்கிட்டு, "குற்றவாளியின் வாக்கு மூலம் முடியும் வரையில் குறுக்கிட வேண்டாம்!" என்று தடுத்து விட்டார்.



பொன்னுசாமி தொடர்ந்து கூறினான்: "இனி மேல் நான் சொல்ல வேண்டியது அதிகமில்லை. என் பெண்சாதி ஒரு அநாதை. ஒன்றிரண்டு நாட்கள் தங்கி யிருக்கலாம் என்பதற்குக் கூடப் போக்கிடம் இல்லாதவள். மீண்டும் என்னைச் சந்திக்கும் வரையில் ஏதாவது ஒரு வேலை தேடிப் பிழைக்கலாம் என்ற எண்ணத்தில் பட்டணக் கரைக்கு வந்திருக்கலாம் என்ற ஒரே நம்பிக்கையின் மீதுதான் நானும் இங்கு வந்து சேர்ந்தேன் — அதாவது அவள் தெய்வாதீனமாகத் தப்பிப் பிழைத்திருந்தால்! அன்று முதல் இன்றுவரை அவளையும் தேடுகிறேன். மானத்துடன் வயிறு பிழைக்க ஒரு வேலையும் தேடுகிறேன். எதுவுமே கிடைக்கவில்லை. ஆசை மனைவியையும் அருமை மகனையும் இழந்து விட்டுப் பிச்சை யெடுத்து வாழும் எனக்கு நிரந்தரமான இடம் என்று எதுவுமே யில்லை, இந்தப் பட்டணத்தில். பகல் முழுவதும் மனம் போனபடி சுற்றிவிட்டுக் களைத்த பின் எந்த இடமா யிருந்தாலும் சரி, அங்கேயே படுத்து விடுவேன். இதே வீதியில்தான் கொள்ளை நடந்த தினம் அந்தப் பாங்கி வாசலில் படுத்திருந்தேன். பார்க்கப் போனால், அது ஒரு பாங்கிக் கட்டிடம் என்பதுகூட எனக்கு அப்போது தெரியாது. நான் கொள்ளை யடிக்கவுமில்லை; அதில் எவ்வித சம்பந்தமுமில்லை எனக்கு என்பது கடவுளறிய உண்மை" என்று சொல்லி நிறுத்தினான், பொன்னுசாமி. அவன் தனது சோகக் கதையை முடித்தபோது உடலும் உள்ளமும் ஒருங்கே சோர்ந்து விளங்கினான். அநுதாபம் நிறைந்த நீதிபதியின் கண்களை ஏறிட்டுப் பார்த்தான். தான் கூறிய உண்மையை அவர் நம்புவார் என்ற உணர்வு பிறந்தது அந்தக்கள்ளமற்ற உள்ளத்தில்.

நீதிபதியின் சில மாமூலான கேள்விகளுக்குப் பொன்னுசாமி தக்க பதில் கூறினான். நீதிபதி தலையசைத்தவுடன் சர்க்கார் தரப்பு வக்கீல் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டார்.

"குற்றவாளியின் வாக்கு மூலத்தைக் கேட்ட பிறகும் அவன் குற்ற மற்றவன் என்பதற்கு ருசு எதுவுமே காண முடியவில்லை. பாங்கியில் கொள்ளை போயிருப்பது மிகப் பெரிய தொகை. இந்த வழக்கில் குற்றவாளி தான் நிரபராதி என்பதற்கு ஆதாரம் காட்ட முடியாததால் அவன் சட்டப்படி தண்டனைக்குள்ளாக வேண்டியது தான் என்பதைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டும்" என்று முழங்கி விட்டு வெற்றிப் பெருமிதத்துடன் உட்கார்ந்தார், அவர்.

நீதிபதி தீவிரமாகச் சிந்தித்தார். குற்றவாளி கூறியவை யனைத்தும் வார்த்தைக்கு வார்த்தை உண்மையென்று அவரது உள்ளுணர்ச்சி எடுத்துக் காட்டியது. பொன்னுசாமியின் களங்கமற்ற உள்ளத்தை அவனது முகமே எடுத்துக் காட்டியது. ஆனால் மனச் சாட்சியை மட்டும் ஆதாரமாகக் கொண்டு வழக்கிற்குத் தீர்ப்பளிப்பது சட்டத்தையே புறக்கணிப்பதற்கு ஒப்பாகும் என்பது அவருக்குத் தெரியாதா, என்ன! அதிலும் இவ்வழக்கிலே பொய்ச் சாட்சியமும் சந்தர்ப்பங்களும் பொன்னுசாமிக்கு எதிராக நின்று சதி செய்தனவே!

அவனுக்கு விடுதலை யளிக்கச் சட்டம் இடந்தரவில்லை. அவனைத் தண்டிக்கவோ நீதிபதியின் மனச்சாட்சி ஒப்பவில்லை. சட்டத்தை யொட்டி நீதியை நிலை நாட்டத்தானே அவருக்கு அவ்வளவு பெரிய தொகை சம்பளம்! சட்டத்திலேயே




வளரும் குழந்தைகளின்

போஷிப்பிற்கு இன்றியமையாதது

குழந்தைகளின் உடலைப் பராமரித்து வளர்ப்பதில் ஈடு இணையற்ற ஏஜண்டாக விளங்குகிறது விடோபெரின். உடலில் ரத்தமின்மை, வைடமின்கள் குறைவு மற்றும் உடலுக்குப் பலவீனத்தை யளிக்கும் கோளாறுகள் பலவற்றையும் போக்க இது சிறந்த டானிக்காக விளங்குகிறது.




விடோபெரின்

தயாரிப்பாளர்:

ஸ்ரீ மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிமிடெட், மல்லேஸ்வரம், பெங்களூர்

விற்பனை ஏஜண்டுகள்:

பெஸ்ட் & கம்பெனி லிமிடெட், தபால் பெட்டி நெ. 63 சென்னை

BZ. 36

ஊறித் திளைத்த அவரால் சட்டத்தின் இரும்புப் பிடிக்கு மீறி எதையும் செய்ய முடியவில்லை.

பொன்னுசாமிக்குப் பதினெட்டு மாதச் சிறை வாசம் கிடைத்தது. ஊருக்கு உழைக்கப் போய் உயிருக்-குயிரான தன் மனைவியையும் மகளையும் பறி கொடுத்த அந்த உத்தமனுக்கு விரோதமாக சிறை வாசத் தண்டனை அளிக்க நேர்ந்ததை நினைத்துத் தம்மைத் தாமே நொந்த வண்ணம் வீடு திரும்பினார், நீதிபதி நித்யானந்தம்.

* * *

இரண்டு வருடங்களுக்குப் பிறகு இன்று அதே பொன்னுசாமி தன் வீட்டிலேயே திருட வந்திருக்கிறான் என்பது அவருக்கு ஐயமறத் தெரிந்து விட்டது. அன்று குற்றமற்றவன் என்று தாம் யாரைக் கருதினாரோ, அதே பொன்னுசாமி இப்போது நிஜக் கள்வனாகத் தம் முன் நிற்கிறான். "நீ பொன்னுசாமிதானே!" என்று அவனைக் கேட்டே விட்டார்.

"ஆம், அதே பொன்னுசாமிதான்" என்று ஏளனமும் அருவருப்பும் கலந்த குரலில் கூறிவிட்டு முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டான்.

நித்யானந்தம் நிதானமாக, "ஆமாம்; அன்று உன்னை நான் தண்டித்தபோது நீ அந்தக் கொள்ளையில் சம்பந்தப்பட்டிருக்க மாட்டாய் என்றே கருதினேன். இப்போது தெரிகிறது, உன் தொழிலே இதுதான் என்று! உம், அப்படியே பின்புறமாகவே நகர்ந்து செல், அடுத்த அறை வரையில். மீண்டும் என் கடமையைச் செய்கிறேன். ஒரே வித்தியாசம் என்னவெனில், இந்தத் தடவை உன்னைச் சட்டப்படி தண்டனைக் குள்ளாக்க என் மனச் சாட்சி தாராளமாக இடங் கருகிறது. அவ்வளவுதான். உம், நட. தப்பியோட முயற்சித்தால், இதோ பார்!" என்று துப்பாக்கியைச் சற்றுத் தூக்கிப் பிடித்தார்.

அவர் இஷ்டப்படியே நடந்து கொண்டான், பொன்னுசாமி. இதற்குள் வீட்டில் உறங்கிக் கொண்டிருந்த யாவரும் விழித்துக் கொண்டு பரபரப்புடன் அங்கு வந்து கூடிவிட்டனர். வலக் கரத்திலுள்ள துப்பாக்கியைக் கெட்டியாகப் பிடித்த வண்ணம் இடது கையால் மேஜை மீதிருந்த டெலிபோனைக் கையிலெடுத்ததுதான் தாமதம், "ஐயோ, சாமி! நீங்கள்தான் பெரிய மனசுடன் அவரைக் காப்பாத்த வேணும்" என்று அலறிய வண்ணம் ஓடோடியும் வந்து நித்யானந்தத்தின் கால்களைப் பற்றிக் கொண்டாள், அவர் வீட்டு வேலைக்காரி. சற்றும் எதிர் பாராத விதமாக நிகழ்ந்த இந்தச் சம்பவம் அவரைத் திகைப்புக் குள்ளாக்கியது.

"ஆ! வேலம்மாவா! நீ உயிருடன் இருக்கிறாயா! இங்கேயா இருக்கிறாய்! குழந்தை என்ன வாயிற்று! எவ்வளவு நாட்களாக இந்த வேலை செய்கிறாய்! உன்னை எங்கெல்லாமோ தேடியலைந்தேனே!" என்று கேள்வி மேல் கேள்வியாக அடுக்கியவண்ணம் தன் மார்புக்கு எதிரில் பிடிக்கப்பட்டிருந்த துப்பாக்கியையும் லட்சியம் செய்யாது வேலம்மாளைத் தூக்கி நிறுத்தினான், திருட வந்த பொன்னுசாமி.

"இந்தப் புண்ணியவான்தான் ஆதரவில்லாதவளாக வந்த என்னையும் உங்கள் மகளையும் காப்பாற்றினார்" என்று பொன்னுசாமிக்குப் பதில் கூறிவிட்டு, நித்யானந்தத்தின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

"யசமான்! இவருதான் என் புருஷர். இவரை நீங்க காப்பாத்தா விட்டால் என்னையும் என் மகளையும் இத்தனை காலமும் நீங்க ரட்சித்ததெல்லாம் வீணாகி விடும். இவரை மன்னிப்பீர்களா, யசமான்!" என்று பரிதாபகரமாகக் கெஞ்சினாள், அவள். கண்களில் நீர் திரையிட்டு நின்றது.

"சாமி! ஒரு குற்றமும் செய்யாத என்னைத் தண்டித்து விட்டீர்கள். நிஜமாகத் திருட வந்தது இப்போதுதான். பெண்சாதியையும் பிள்ளையையும் இழந்து விட்டு, என் வாழ்க்கையில் ஏற்பட்ட வெறுப்பினால் இந்தத் துணிச்சல் ஏற்பட்டு விட்டது எனக்கு. நான் செய்தது தவறுதான். எனக்கு மன்னிப்பு உண்டா!" என்று நித்யானந்தத்தின் கருணை ததும்பும் முகத்தை நோக்கிக் கேட்டான் பொன்னுசாமி.

வேலம்மாவின் வாயால் அந்தச் சோக சித்திரத்தை மீண்டு மொருமுறை கேட்ட பிறகு பொன்னுசாமி அன்று கொடுத்த வாக்கு மூலம் உண்மைதான்; அவன் நிரபராதி என்பது திட்டமாகத் தெரிந்து விட்டது அவருக்கு.

அவர் சொன்னார்: "பொன்னுசாமி! நீ செய்யாத ஒரு குற்றத்துக்கு ஏற்கெனவே வீண் தண்டனை யனுபவித்து விட்டாய். என் இஷ்டத்துக்கு மாறாகத்தான் அதைச் செய்ய நேர்ந்தது, அப்போது. இன்று நீ செய்துள்ள குற்றத்தை நான் மூடி மறைப்பது சட்ட விரோதமென்றாலும் உனக்கு மன்னிப்பளிக்கவே தூண்டுகிறது என் மனச் சாட்சி. என் தவறுக்கும் அதுதான் உரிய பிராயச் சித்தம். இன்று முதல் நீயும் உன் மனைவி, குழந்தையுடன் என் வீட்டிலேயே தோட்டத்தைக் கவனித்துக்கொண் டிருந்துவிடு" என்று சொல்லிவிட்டு நிம்மதியுடன் படுக்கச் சென்றார், நித்யானந்தம். அவர் நெஞ்சில் நெடுநாளாக இருந்த ஒரு சுமை அன்று அகன்று விட்டது.

# திரு – கொச்சியில் நடந்ததென்ன?

திருவாங்கூர் கொச்சியில் தமிழர்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதிகளான அகஸ்தீச்வரம், தோவாளை, கல்குளம், விளவங்கோடு, நெய்யாற்றின்கரை, செங்கோட்டை, தேவிகுளம், பீருமேடு, முதலிய எட்டுத் தாலுகாக்களை மொழிவழி மாகாண அமைப்பின்போது தாய்த் தமிழகத்துடன் சேர்க்க வேண்டுமென்றும், அது வரை தமிழர்களின் ஜீவாதார உரிமைகளைக் காப்பதற்கான வழிவகைகள் செய்யப்பட வேண்டுமென்று முள்ள அடிப்படைக் கொள்கையின் தான் திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் செயல்படத் தொடங்கியது. அதே கொள்கையில் தான் செயல்பட்டு, தேர்தலில் போட்டியிட்டு, வெற்றியும் பெற்றது.

நடந்த பொதுத் தேர்தலின் முடிவு யாவரும் அறிந்ததே! கட்சி அடிப்படையில் பெருவாரியான ஸ்தானங்களைப் பெற்றிருந்த காங்கிரஸ் கட்சியானது தி. த. நா. காங்கிரஸ் கட்சியின் ஒத்துழைப்போடு மந்திரி சபை அமைக்க முன் வந்தது.

திரு - கொச்சித் தமிழர்களின் ஒத்துழைப்பு அதிகம் ஆக, ஆக அவர்கள் புறக்கணிக்கப் பட்டதைத் தவிர வேறொன்றும் காணவில்லை. தமிழர்

களின் குறைகள் சட்டசபையில் விவாதத்திற்கு வந்தபொழுது தி. த. கா. காங்கிரஸினர் அரசாங்கத்தோடு சேர்ந்து கொண்டு எதிர்த்து வாக்களித்தனர். எதற்காக! தமிழன்பர்கள் துன்புறுவதைக் கண்டு களிப்பதற்காகவா!—அல்ல! பலமுடைய ஸ்திரமான நிர்வாகம் நிலவச் செய்வதிலுள்ள ஆர்வம் அத்தனைக்கு மேலோங்கி விட்டது! இத்தகைய செயல்களுக்கெல்லாம் அவர்களுக்குக் கிடைத்த பரிசு, அரசாங்கம் தமிழர்களிடம் மாற்றாந் தாய்க் கொள்கையைக் கடைப்பிடித்ததுதான்! வட திருவிதாங்கூரில் பல முன்னேற்ற ஏற்பாடுகளைச் செய்யத் தவறாத சர்க்கார் தென் பகுதிகளைப் புறக்கணிக்கவும் தவறவில்லை. தமிழ் மக்கள் மாளாத் துயரத்தில் மூழ்கினர்; மூழ்கியிருக்கின்றனர். அதோடு மட்டுமா! திரு-கொச்சி மந்திரி சபையில் பதவி வகிக்க வேண்டுமென்றால் தி. த. கா. கா. இந்திய தேசிய காங்கிரசுடன் இரண்டறக் கலந்துவிட வேண்டுமென்றும் தவறினால் தொடர்பு துண்டிக்கப்படுமென்றும், கேரளப் பிரதேச காங்கிரஸும், அகில இந்திய காங்கிரஸின் பொதுக்காரியதரிசியும் கூறுமளவிற்கு மிஞ்சிவிட்டது தி. த. கா. காங்கிரஸின் ஒத்துழைப்பு.

சூழ்நிலை இந்த அளவிற்கு மிஞ்சிவிடவே வேறு வழியின்றி தி. த. கா. கா. பிரதிநிதிகள் திரு-கொச்சியில் தமிழர்கள் வாழும் பகுதிகளைக் கொண்ட தனிப்பிரதேசக் காங்கிரஸ் கமிட்டி அந்தஸ்து அளிக்க வேண்டுமென்று கேட்டனர். அதற்காகப் புதுடில்லியில் பல நாட்கள், கேரள காங்கிரஸ் கமிட்டி தலைவர், அகில இந்திய காங்கிரஸ் பொதுக் காரியதரிசி, தமிழர் பிரதிநிதி, இவர்களிடையே மும்முரமாகப் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. ஆனால் அது வெற்றி பெறவில்லை. தமிழர்களின் குறைந்த பட்ச கோரிக்கை கூட நிராகரிக்கப்பட்டு விட்டது. ஒரே ராஜ்யத்தில் இரண்டு பரதேச காங்கிரஸ் கமிட்டிகள் இருக்க முடியாது என்று கூறிற்று மேலிடம். சென்னை, பம்பாய் மத்யப் பிரதேசம் போன்ற ராஜ்யங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட பிரதேச காங்கிரஸ் கமிட்டிகள் செயல்படவில்லையா! ஏன் அதே அந்தஸ்து திரு-கொச்சி தமிழகத்திற்குக் கொடுக்கப்படக் கூடாது!

சாத்வீகமான முறைகளால் பயன் கிடைக்காது என்று உணர்ந்ததும், தி த. கா. கா. அரசாங்கத்துடன் தமது உறவைத் துண்டிக்கத் தீர்மானித்தது தவறல்ல வென்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். அதைத் தொடர்ந்து தமிழர் பிரதிநிதி தம் மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்தார்.

கடைசி நிமிஷத்திலும் தம் வேண்டுகோள் நிராகரிக்கப்படவே தி. த. கா. கா. வினர் நம்பிக்கைத் தீர்மானத்தை எதிர்த்து வாக்களித்தனர். ஆக தீர்மானம் 5 மெஜாரிட்டி வோட்டுக்களால் தோற்கப்பட்டது.

ஜனநாயக மந்திரி சபையாக இருக்குமானால் சட்டசபையைக் கலைக்கும் முன்னரே சபையின் நம்பிக்கையை இழந்த மந்திரிகள் தங்கள் ராஜிநாமாவை ராஜப் பிரமுகரிடம் சமர்ப்பித்திருக்க வேண்டுமே யொழிய பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கக் கூடாது.

அடுத்தபடியாக பொதுத் தேர்தல் நடக்கவிருக்கும் இத்தருணத்தில் நம்பிக்கை யிழந்த மந்திரி சபை நீடிப்பது, அவர்கள் தங்கள் பதவியைத் தேர்தல் காரியங்களுக்காகத் துர் உபயோகம் செய்ய ஏதுவாகும். அப்படிச் செய்ய நேர்ந்தால் அது தயங்காமல் தியாகங்கள் பல செய்து பாரத நாட்டுக்குச் சுதந்திரம் தேடித் தந்த காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கு மாபெரும் இழுக்கு ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை. காங்கிரஸ் மேலிடத்தார் ஆவன செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

நாகர்கோயில்
27—9—53 எஸ். மகாதேவன்

# படித்துப் பாருங்கள்!

## குணபாடம்

**மி**கப் புராதனமான நம் நாட்டு வைத்தியத்துக்கு ஆதாரமாக மிகப் பண்டைக் காலத்து நூல்கள் ஏராளமா யிருக்கின்றன. அவையெல்லாம் செய்யுள் உருவத்தில்தான் காணப்படுகின்றன.

ஏட்டுச் சுவடிகளில் இருக்கும் பழம் பெரும் நூல்களைப் பெயர்த்து எழுதி அச்சுக்குக் கொண்டு வருவது மிகமிக அருமையான காரியம்.

இந்த அருமையான காரியத்தைச் சிறப்பாகக் குணபாடம் என்னும் இந்நூலில் காண முடிகிறது. செய்யுள் வடிவிலும், சிதைந்தும் கிடந்த இந்தப் பழம் பெரும் நூலுக்குச் சுலபமாகப் பொருள் விளங்கும் வண்ணம் எளிய நடையில் விளக்கம் எழுதப்பட்டிருக்கிறது.

அயம், எஃகு, செம்பு, பித்தளை, பொன், வெள்ளி முதலிய உலோகப் பொருள்களைப் பஸ்மமாக்கி மருந்துகளாக உபயோகிக்கும் பழம் மருத்துவ முறைகளின் குண விசேஷங்களைச் சொல்லும் இந்நூலுக்கு 'குணபாடம்' என்னும் பெயர் பொருத்தமானது தான். சித்த வைத்திய முறையைப் பயிலும் மாணவர்களுக்கு இந்நூல் மிகவும் இன்றியமையாதது.

ஆக்கியோர்: டாக்டர் ஆர். தியாகராஜன் எல். ஐ. எம்., பிரசுரம்: சென்னை கவர்மெண்ட் பிரஸ், சென்னை; விலை: ரூ. 11—10—0.

## குங்குமச் சிமிழ்

**ப**லவித உணர்ச்சிகளையும் சம்பவங்களையும் கொண்டு ரஸமாகப் புனையப்பட்ட பன்னிரண்டு சிறு கதைகள் இந்தக் குங்குமச் சிமிழில் அடங்கியிருக்கின்றன. சரளமான நடையில் நல்ல விறுவிறுப்புடன் கதைகள் செல்லுகின்றன.

"கார்காலத்துக் குளிரின் சலசலப்பில் அவள் உடலோடு மனமும் சேர்ந்து மெதுவாக நடுங்கியது. விசாலமான தெருவின் தோற்றம் அதன் பிரகாசமான விளக்கு வெளிச்சத்தில் தோய்ந்து அவள் பயத்தை அதிகரிக்கச் செய்தது. அவள் கண்களைத் தளரவிட்டுப் படிக்கட்டைக் கவனித்துக் கீழே இறங்கலானாள்" என்ற "களங்கம்" என்ற சிறு கதையில் படிக்கும்போது, படிப்பவர் உள்ளமும் கதையோடு ஒட்டிச் செல்கிறது.

எழுதியவர்: ஆர். வி; கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை-4. விலை: ரூ. 2-0-0.

## ஸ்ரீ சந்தியாவந்தனம்

**ஸ**ம்ஸ்க்ருத மூலம், பதவுரை, கருத்து, முதலியவைகளுடனும் அநுஷ்டானத்தை விளக்கும் படங்களுடனும் விளக்கங்களுடனும் கூடிய நூல். ஆசிரியர்: ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா; பிரசுரம்: வைதிகதர்ம வர்த்தினி, 2/215, தம்பு செட்டித் தெரு, சென்னை-1. விலை: ரூ. 1-4-0.

# லாபகரமான பண்ணை வேலைகளுக்கு அக்ரிகோ கருவிகளை நம்பலாம்



மேற்கு இந்தியக் கொந்து: மிகவும் கெட்டியானது. ஆயினும் வேலை செய்ய சுலபமானது. உறுதிவாய்ந்ததால் நீடித்துழைக்கக்கூடியது.



மைசூர் மண்வெட்டி: கூராகவெட்டும் முனைகள் நன்றாக வேலை செய்கின்றன. சீரான அமைப்புள்ளதால் வேலை செய்ய சுலபமானது.



டாங்க் மண்வெட்டி: ஆழமாக வெட்டுவதற்கு உகந்தது. நீடித்துழைக்கக் கூடியது.




இந்தியாவின் ஆயிரக்கணக்கான பண்ணைகளில் அக்ரிகோ கருவிகள் அற்புதமாக வேலைசெய்து வருகின்றன. ஹை-கார்பன் எஃகிலிருந்து தயாரிக்கப்பட்டு நீடித்து உழைப்பதற்காக பரிசீலனை செய்யப்பட்டிருப்பதால் அக்ரிகோ கருவிகளையே எல்லா விவசாயிகளும் விரும்புகிறார்கள்

## டாடா அக்ரிகோ கருவிகள்



தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பனி லிட்.,
தலைமை ஸேல்ஸ் ஆபீஸ்:
23-B நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா-1
கிளை ஆபீஸ்கள்:
பம்பாய், மதராஸ், நாக்பூர், அஹமதாபாத், ஸெகந்திராபாத், விஜயநகரம் கன்டோன்மென்ட், ஜலந்தர் கன்டோன்மென்ட், & கான்பூர்

AG. 3867

# தமிழ்க்களஞ்சியம்




டி.கே.சி

## 36. விசித்திரமான படிப்பு!

வருகிறார் கவிராயர்!

"கல்விச் சமுத்திரம்
கமலாலயந், தமிழ்க்
கடல்மடை திறந்தவெள்
ளம்
கற்பனை பிறப்பிடம்
கலைமகள் இருப்பிடம்
கவிமாரி பொழியுமே
கம்
..............."

இந்தத் தோரணையில் பாடுகிறார் கவிராயர், முற்றத்தில் வந்து.

"இது யார் அங்கே?" என்று கேட்கிறார் உள்ளிருந்த பிரபு.

வேலையாள் போய் விசாரித்தான். புலவர் என்று வந்து சொன்னான் பிரபுவினிடம்.

"சத்தம், ஒத்தம் போடக் கூடாது என்று சொல்லு. ஒரு ரூபாயைக் கொடுத்துப் போகச் சொல்லு" என்றார்.

அப்பாவிப் புலவர் என்ன செய்வார்? அடுக்குத் தொடர் எல்லாம் அப்படியே நின்று விட்டது.

பிரபுவின் காரியமும் பரிதவிக்க வேண்டிய காரியந்தான். பாடல்களினால் அவருக்கு வந்த தலைவலிக்கு மருந்து போட யார் இருக்கிறார்கள்?

* * *

ஒரு நல்ல புலவர். ரசமான புலவர். அவரும் பல இடங்களில் கஷ்டப் பட்டவர்தான். (பிரபுக்களுக்குப் பயம் விட்ட பாடில்லை.) ஒரு நாள் மிழலை என்ற ஊருக்குப் போனார் புலவர்.

அந்த ஊர் ஜமீன்தார் புலவரை ரொம்பவும் மதித்து நன்றாய் உபசாரம் செய்தார். பாடல்களை அனுபவித்தார். புலவரை ஆங்காங்கு ரொம்ப ரொம்பப் பாராட்டினார். ஒரு வாரம் இப்படிப் பொழுது போய்க் கொண்டிருந்தது. புலவர் ஊருக்குப் புறப்படுகிறார்.

ஒரு தாம்பாளத்தைக் கொண்டு வரச் சொன்னார் ஜமீன்தார். தாம்பாளமும் வந்தது. பணப் பையையும் கொண்டு வரச் சொன்னார். பைக்குள் இரண்டு கையையும் விட்டுக் கை நிறைய ரூபாயை எடுத்துத் தாம்பாளத்தில் வைத்தார். இரண்டாவது தடவையும் அப்படியே

ரூபாயை அள்ளித் தாம்பாளத்தில் வைத்தார். எடுத்து வைத்ததில் ஒரு ரூபாய் கூடச் சிந்தவில்லை. பையை விட்டுக்குள் கொண்டு போகச் சொன்னார். போய் விட்டது பை. தாம்பாளத்தை அப்படியே நீட்டினார். புலவருக்கு இந்த அனுபவம் புதியதாய் இருந்தது. ஒரே சந்தோஷ வெறி. அந்த வெறி பாடலாய் வருகிறது.

அடுக்கப் படிக்கின்ற
செந்தமிழ்ப் பாவலர்
ஆரினை யும்

தடுக்கப் படிக்கின்ற
கல்விகல் லார்

மற்றப் பிரபுக்கள் எல்லாம் புலவர்களை அதட்டவும், மட்டந் தட்டவும் படித்து வந்திருக்கிறார்கள். அதே படிப்பாய்ப் படித்து வந்திருக்கிறார்கள். அந்தப் படிப்பில் பி. ஏ., எம். ஏ. பட்டங்கூட வாங்கி யிருக்கிறார்கள்.

பிரபுக்கள் காரியம் இப்படி யிருக்க, இந்த ஜமீன்தார், இந்த மழவையூர் அதிபர், தமிழில் இத்தனை மோகம். கொடை கொடுக்கிறது அபாரம். பரம்பரையாய் வந்திருக்கிறது இந்த வன்ளன்மை என்று அதிசயிக்கிறார்.

குழந்தையாய் இருக்கும் பொழுது நடக்கத் தெரியாதுதான். (தவழத்தான் தெரியுமாம்.) ஆனால் வேறொரு பயிற்சியில்க் கை தேர்ந்து விட்டது குழந்தை!

அடுக்கப் படிக்கின்ற
செந்தமிழ்ப் பாவலர்
ஆரினை யும்

தடுக்கப் படிக்கின்ற
கல்விகல் லார், இந்தத்
தாரணி யில்

கொடுக்கப் படிக்கின்ற
கல்விநன் றாய்வந்து
கூடிய பின்

நடக்கப் படிக்கின்ற
நாட்டார் மிழலை
நாதிப ரே!

அதிசய பாவம் அழகாய் உருவெடுத்திருக்கிறது. அபூர்வமான சிருஷ்டி!

கொடுக்கப் படிக்கின்ற
கல்விநன் றாய்வந்து
கூடிய பின்

நடக்கப் படிக்கின்ற
நாட்டார் மிழலை
நாதிப ரே!

ஜமீன்தாருடைய முன்னோர்களும், சரி சரி, மேற்படி மேற்படிதான்!


# இதுதான்!

## உண்மையான

## “ஐடெக்ஸ்” கண் மையின் சின்னம்




**REGD. TRADE MARK**

**Eyetex** “ஐடெக்ஸ்” என்ற பெயரால் பண்டையக் கால சாஸ்திரிய முறைப்படி முதன் முதல் கண் மை பெண்மணிகளின் அழகிற்கென்றே தயாரித்து விற்பனைக்கு வெகு காலமாக அனுப்பி வரும் அரவிந்த் லாபரட்டரீஸார் இதன் மூலம் பொது மக்களுக்கும் வியாபாரிகளுக்கும் அறிவிப்பது என்னவென்றால்:—

மிகவும் குணமுள்ளதும், பொது மக்களின் ஆதரவையும், விருப்பத்தையும் பெற்றுள்ள **Eyetex** “ஐடெக்ஸ்” என்ற கண் மைப் பெட்டிகளைப் போன்று இன்னும் இதரர்களால் அநேகமாக பெட்டிகளின் அளவு பெயர், பார்வை எழுத்துக்களின் கோர்வை முதலியவை எங்களது **Eyetex** “ஐடெக்ஸ்” தானே என்று எளிதில் ஏமாறும்படியாக புதுப்புது பெயர்களிலும், விதங்களிலும் கண் மை வந்து கொண்டிருக்கின்றன.

எங்களது **Eyetex** “ஐடெக்ஸ்” கண் மையின் குணம் கண்டு ஆதரவு அளித்து வரும் பொது மக்கள் மட்டமான போலிகளைக் கண்டு எளிதில் ஏமாந்து விடக் கூடுமென்று வாங்கும்போது மேல் கண்ட பெட்டியின் மார்க்கையும், அரவிந்த் லாபரட்டரீஸாரால் தயாரிக்கப் பட்டதுதானா என்றும் கவனித்துப் பார்த்து வாங்குமாறு இதன் மூலம் கேட்டுக் கொள்ளுகிறோம்.

**Eyetex** “ஐடெக்ஸ்” கண் மையை சிறு குழந்தைகள் முதல் உபயோகிக்கலாமென்றும் பரிக்ஷித்தறிந்த பல டாக்டர்கள் அத்தாக்ஷி செய்திருக்கிறார்கள். போலிகளை வாங்கி உங்களது அழகான கண்களை கெடுத்துக் கொள்ளாதீர்கள்.

**Eyetex** “ஐடெக்ஸ்” கண் மை எல்லா ஊர்களிலும் எல்லா ஷாப்புகளிலும் 12 அணா விலைக்குக் கிடைக்கும்.

தயாரித்து விநியோகிப்பவர்கள்:

**அரவிந்த் லாபரட்டரீஸ்**

ஆர்காட் ரோடு :: மதராஸ் - 16

G. P.

# சிக்கன வாழ்க்கை

டி. ஜி. எஸ்.

"இந்தாருங்கள்! ஆபீஸ் போகும் வழியிலே இதை ஞாபகமாய்த் தபாலில் சேர்த்து விடுங்கள்" என்று புன்னகையுடன் சொன்னபடியே ராகவனிடம் ஒரு உறையை நீட்டினாள் அவன் மனைவி கமலா.

அதன் மேல் எழுதியிருந்த, 'கோபால கிருஷ்ணய்யர், அட்வகேட், தஞ்சாவூர்' என்ற விலாசத்தைப் பார்த்ததும் "ஹோ! உன் அப்பாவுக்கா! என்ன எழுதியிருக்கிறாய்? பணம் வேண்டுமென்றுதானே?" என்று கேட்டான் ராகவன்.

"ஆமாம். உங்கள் சம்பளப் பணம் நூற்றைம்பது ரூபாயும் நேற்றோடேயே தீர்ந்து விட்டது. மாதத்தில் இன்னும் இருபது நாள் பாக்கியிருக்கிறதே!" என்று சொல்லிய படி இன்னொரு புன்னகையை அவன்மீது அள்ளி வீசினாள் கமலா.

"கமலா! நீ இப்படி அடிக்கடி உன் அப்பாவைப் பணம் கேட்டுக் கடிதமெழுதுவது எனக்குப் பிடிக்கவில்லை. நாம் கொஞ்சம் செட்டும், கட்டுமாய்க் குடித்தனம் நடத்தினால்தான் நல்லது. கணவன், மனைவி என இரண்டு பேரேயுள்ள குடும்பத்தில் நூற்றைம்பது ரூபாய் பத்தே நாளில் செலவழிந்து விட்டது என்றால் கேட்பவர்கள் சிரிப்பார்கள்!" என்று கொஞ்சம் ஆத்திரமாகவே சொன்னான் ராகவன்.

"ஆமாம், நான் என் சுகத்திற்குமட்டுமா எல்லாவற்றையும் செலவழிக்கிறேன்?" என்று அவள் பதிலுக்குக் கோபமாகக் கேட்டாள்.

"கமலா! நான் உன்னைச் செலவு செய்ய வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் வீணாக நெய்யையும், பாதாம் பருப்பையும் போட்டு டிபன் செய்வதிலும், உபயோகமில்லாத நாஸூக்குச் சாமான்களிலும் பணம் செலவாகிறதைத்தான் குறைக்க வேண்டுமென்கிறேன்!" என்றான் ராகவன்.

"என் பிறந்தகத்தில் எனக்குச் சிக்கனமாய்ச் செலவு செய்யக் கற்றுக் கொடுக்கவில்லை. என் அப்பா கணக்கே கேட்பதில்லை" என்றாள் அவள்.

"உன் அப்பாவுக்கு ஆயிரத்துக்கு மேல் வரும்படி வருகிறது; அவர் செலவு செய்யலாம். ஆனால் எனக்கு அப்படியெல்லாம் செலவு செய்யக் கட்டி வராது" என்று சொல்லியபடியே கிளம்பி விட்டான் அவன்.

ஆபீஸ்போகும் வழியிலே அவன் உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தது. கமலாவின் தாராளவாழ்க்கை அவனுக்குப் பிடிக்கவில்லை.

"மாமனார் இருக்கும் வரை தானே செய்வார்? அப்புறம் எனக்கு நான்கைந்து குழந்தைகள் பிறந்து விட்டால்?..."

எதிர் காலத்தைப்பற்றி நினைக்கும்போதே அவனுக்குப் 'பகீ' ரென்றது. அன்று பல மணி நேரம் யோசனை செய்த பின்னர் அவன் ஒரு முடிவுக்கு வந்தான்.



கமலா தன் தகப்பனாருக்குக் கடிதம் எழுதியமூன்றாம் நாள் அவன்பெயருக்கு நூறு ரூபாய் மணியார்டர் வந்தது. அவன் அதைக் கையில் வாங்கிக் கொண்டபோது ஏற்பட்ட குதூகலம், அன்றைய தபாலிலேயே அவள் தகப்பனார் எழுதிய கடிதத்தைப் பார்த்ததும் மறைந்து போய் விட்டது.

கடிதம் மிகவும் சுருக்கமானது தான்:

"சௌ கமலாவுக்கு ஆசீர்வாதம். உன் கடிதம் கிடைத்தது. நீ கேட்டபடி நூறு ரூபாய் மணியார்டர் அனுப்பியுள்ளேன். ஆனால் நீ இப்படி அடிக்கடி பணம் கேட்டு எழுதுவது எனக்குப் பிடிக்கவில்லை. சிக்கனமாயிருக்கக் கற்றுக் கொள். இது தான் நான் உனக்குக் கடைசியாக அனுப்பும் மணியார்டர். இனிமேல் என்னிடமிருந்து பணத்தை எதிர் பார்க்கக் கூடாது.

உன் அன்புள்ள
தகப்பனார்."

கமலாவுக்குக் கோபம், ஆத்திரம் எல்லாம் ஒருசேர வந்தன. அந்தக் கோபத்திலே, தகப்பனார் அனுப்பிய பணத்தை வந்தனத்துடன் திருப்பி அனுப்பி விடுவது என்று கூடத் தீர்மானித்துவிட்டாள் அவள்.

அன்று ஆபீஸிலிருந்து திரும்பிய ராகவன் கமலா முகத்தைப் பார்த்ததும் ஏதோ விஷயமிருக்கிறதென்று ஊகித்துக் கொண்டான்.

"என்ன கமலா, ஒரு மாதிரி சோர்ந்தாற் போல் இருக்கிறாய்?" என்று அவன் கேட்ட போது அவள் அழுதே விட்டாள்.

பின்னர் தகப்பனாரின் கடிதத்தை அவனிடம் கொடுத்து, "படித்துப் பாருங்கள்! உங்கள் இஷ்டம் போலவே ஆகிவிட்டது. எனக்கு அவர் அனுப்பிய பணத்தைக்கூட வைத்துக் கொள்ள இஷ்டமில்லை. அதைத் திருப்பி

அனுப்பி விடுங்கள். நாம் எப்படியாவது பார்த்துக் கொள்ளலாம். இனிமேல் என் அப்பாவுக்குக் காலணா கேட்டுக் கடிதாசு எழுதுவதில்லை. இதனால் எந்தச் சௌகரியம் குறைந்தாலும் சரி" என்றாள் கமலா.

"அவர் அனுப்பிய பணத்தைத் திருப்பி அனுப்புவது அழகில்லை. அத்துடன் பாக்கி நாட்கள் செலவுக்கு யாரிடமாவது கடன் வாங்கத் தானே வேண்டும்? இருந்தாலும் உன் அப்பா இப்படி எழுதுவாரென்று நான் நினைக்கவே யில்லை..." என்றான் ராகவன்.

"ஹூம்! எனக்கு நூற்றைம்பது ரூபாயில் குடும்பம் நடத்தச் சாமர்த்திய மிராது என்று நினைத்து விட்டார் போலிருக்கிறது. இருக்கட்டும்; அதையும் செய்து காட்டுகிறேன்..." என்றாள் கமலா.

"ஏதேது! உன் சபதம் பாஞ்சாலி சபதத்தை வென்று விடும் போலிருக்கிறதே!" என்றான் அவன் சிரித்துக் கொண்டே.

நாட்கள் ஓடி மாதங்க ளாயின. கமலா குடித்தனம் செய்யும் விதம் ராகவனுக்கு ஆச்சரியத்தை அளித்தது.

"என்ன கமலா! முதல் தேதி வாங்கி வந்த சர்க்கரை இன்னுமா இருக்கிறது? 'ஸ்வீட்' செய்து நாளாயிற்றே! ஏதாவது 'ஸ்வீட்' பண்ணேன் இன்றைக்கு" என்பான்.

"'ஸ்வீட்'டும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம். அப்படி 'ஸ்வீட்' சாப்பிட ஆசையாயிருந்தால் நீங்கள் நல்ல ஹோட்டலில் சாப்பிட்டு விட்டு எனக்கும் வாங்கி வாருங்கள். வீட்டில் செய்வதானால் கொஞ்சமாய்ச் செய்ய முடியாது. உங்களுக்குச் சம்பள உயர்வானதும் அதெல்லாம் பார்த்துக் கொள்ளலாம்" என்று கூறலானாள்.

முப்பது ரூபாய் வாடகை கொடுத்துக் கொண்டிருந்த வீட்டை விட்டு இருபது ரூபாய் வாடகையுள்ள வீட்டைப் பிடித்தான் ராகவன். பால் செலவைப் பாதியாக்கி விட்டான். காப்பிச் செலவோ சிக்கனமாகி ஐந்தி லொன்றாகியது. எல்லாம் கமலாவின் யோசனையின் பேரில் தான்.

ஆறு மாதத்திற்கப்புறம் ஒருநாள், "இந்த மாதம் நீங்கள் கொடுத்த பணத்திலே முப்பது ரூபாய் மிச்சம்" என்றாள் கமலா.

"கமலா! எனக்கொரு யோசனை தோன்றுகிறது: உன் அப்பாவுக்குக் கடிதம் எழுதி நீ குடித்தனம் செய்வதை வந்து பார்க்கச் சொல்ல வேண்டு மென்பதுதான் அது" என்றான் அவன்.

கமலாவுக்கு அன்று தன் தகப்பனாரின் மேல் ஏற்பட்ட கோபம் மறையவே யில்லை. வீட்டுக்கு எப்போதாவது கடித மெழுதினாலும் தன் சிரமத்தைப் பற்றி எழுதுவதே யில்லை. அவள் தகப்பனார் மனமும் மாறிய தாய்த் தெரியவில்லை.

ஆகவே, தன் கணவன் தகப்பனாருக்கு எழுதுவதைப் பற்றிப் பிரஸ்தாபித்ததும்,


இதைப்போன்ற டூத் பிரஷ் வேறில்லை!
பற்களை உறுதிப்படுத்தும் புது அம்சங்கள்
• முற்றிலும் ஸ்டெரிலைஸ் செய்யப்பட்டது
• கால்கேட் டூத் பிரஷ்களின் ஹாண்டில்கள் தனி வர்ண
• பிளாஸ்டிக் ஹாண்டிலில் நிஜ நைலான் நார்கள்
• மிருதுவாக பாலிஷ் செய்கிறது; இனாமல் சிதையாது
• பல் ஈறுகளை மிருதுவாகத்தடவி உறுதிப்படுத்துகிறது
COLGATE
NYLON TOOTH BRUSH
AN EXCELLENT QUALITY TOOTH BRUSH WITH GENUINE NYLON BRISTLES - FIRMLY FASTENED
குழந்தைகளுக்கு
ஸ்திரீகளுக்கு
ஆண்களுக்கு
2 சைஸ்கள்
பெரியவர்களுக்கு குழந்தைகளுக்கு
ஹார்ட், மீடியம், சாப்ட் டப்ட்ஸ்
கால்கேட்
நைலான் டூத் பிரஷ்
"துவண்டு" போவதில்லை



இன்ஸ்பெக்டர் :—அந்த ஹோட்டலில் தீப்பிடித்துக் கொண்டு விட்டது என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது?

அவர் :—ஹோட்டல் ஸர்வர்கள் எல்லோரும் வழக்கத்துக்கு விரோதமாக பரபரப்புடன், இங்கும் அங்கும் போய் வந்தார்கள் !

"உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்" என்றான். தனக்குச் சிரத்தை யிருப்பதாகக் காட்டிக் கொள்ளவில்லை.

"ஏன் கமலா ! உன் தகப்பனார் உனக்கு நல்லதைத்தானே சொன்னார்? அவர் மேல் ஏற்பட்ட கோபம் இன்னுமா மாறவில்லை?" என்றான் ராகவன்.

கமலா பதிலே சொல்லவில்லை.

★

அதற்கு ஒரு வாரம் பொறுத்து, ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை வீட்டு வாசலில் 'டாக்ஸி' வந்து நின்றது.

அதிலிருந்து ராகவனின் மாமனாரும், மாமியாரும் இறங்கினர். வாசலிலே நின்றிருந்த கமலாவைப் பார்த்ததும், "ஏனம்மா, உடம்புக்கு என்ன? ஒரு மாதிரியா யிருக்கிறாயே!" என்றார் அவர் கவலையுடன். கமலாவின் தாயார் மட்டும் கமலாவைப் பார்த்ததும் அர்த்த புஷ்டியுடன் புன்னகை செய்தாள்.

"வாருங்கள், வாருங்கள்" என்று வாசற் பக்கம் வந்து வரவேற்றான் ராகவன்.

அன்று சாப்பாட்டுக்குப் பிறகு, "இந்தாருங்கள் மாமா ! கமலாவின் பணம் எழுநூறு ரூபாயும் சொச்சமும். இதை நீங்களே அவளிடம் கொடுத்து விடுங்கள்" என்றான் ராகவன் ஒரு கட்டு நோட்டுக்களை அவரிடம் நீட்டியபடி.

அங்கு இருந்த யாவருமே அச்சமயம் பிரமித்துப் போயினர்.

"என்ன, கமலாவின் பணமா?" என்று கேட்டார் வியப்புடன் அவள் தகப்பனார்.

"ஆமாம், மாமா! நீங்கள் நான் எழுதியபடி கமலாவின் பெயருக்குப் பணம் அனுப்பாமல் அவள் செலவுக்கென்று என் பெயருக்கு அனுப்பி வைத்த பணம்தான். நான் உங்களுக்கு எழுதியது கமலாவுக்குத் தெரியாது. நீங்கள் முன்னம் அவளுக்கு எழுதியபடி அவள் நீங்கள் பணம் அனுப்புவதையே நிறுத்தி விட்டதாகத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறாள். என்ன செய்வது ! அவளை அப்படி ஏமாற்றுவது என் மனசுக்குக் கஷ்டமாய்த்தான் இருந்தது. இருந்தாலும் அவளுடைய நன்மையை உத்தேசித்து அந்தக் காரியத்தைப் பொறுமையுடன் செய்து வந்தேன். ஆனால் நல்ல பலன் ஏற்பட்டு விட்டது. என் சம்பளப் பணத்திலேயே செட்டாகக் குடித்தனம் செய்யக் கற்றுக் கொண்டு விட்டாள்..." என்றான் ராகவன்.

"ஓஹோ ! நீங்கள் செய்த சூழ்ச்சிதானா இது? சரி, இந்தப் பணத்தை உங்கள் சிரமத்துக்குச் சன்மானமாகவே எடுத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்ன கமலா குடு. குடுவென்று உள்ளே போய் இன்னும் கொஞ்சம் பணத்தை எடுத்துவந்து, "இதோ, இன்னும் நூறு ரூபாய் இருக்கிறது. இதுவும் அவர் சம்பளப் பணத்தில் நான் மிச்சம் பிடித்ததுதான். இதையும் வேண்டுமானால் சேர்த்து எடுத்துக் கொள்ளட்டும்" என்று சொல்லி நோட்டுக்களைக் கொடுத்தாள்.

கமலாவின் தகப்பனார் அவளைப் பெருமையுடன் பார்த்தார். பின்னர், "ஆனால் கமலா, இப்படிச் சிக்கனமாய்ச் செலவு செய்துதான் உன் உடம்பு ஒரு மாதிரியாகி விட்டது" என்று அவர் சொன்னார்.

அப்போது, "சரிதான்; வெறுமனே இருங்கள். அவள் உடம்பு 'ஒரு மாதிரியா' யிருப்பது வேறு காரணத்தால்" என்றாள் அவர் மனைவி.

ராகவனுடைய உடல் புல்லரித்தது.

ராகவனின் மாமனார் முகத்தில் சந்தோஷம் பொங்கியது. "அம்மா, கமலா ! அப்படியானால் நீ கொஞ்சகாலம் பிறந்த வீட்டில் இருப்பது நல்லது. நீயும் எங்களுடன் புறப்பட வேண்டியதுதான் !" என்றார்.

"ஆமாம், மாப்பிள்ளை! கமலாவை அழைத்துக் கொண்டு போய்த்தான் ஆக வேண்டும். இந்த நிலையில் அவள் இங்கிருப்பது சரியல்ல! நாங்கள் அழைத்துப் போகிறோம் !" என்று மாமியாரும் பாடினாள்.

"உங்கள் இஷ்டத்துக்கு மாறாக நான் என்ன சொல்லப் போகிறேன்" என்றான்.

சில நாட்களுக்குப் பிறகு கமலா தன் தகப்பனார், தாயாருடன் பிறந்தகத்துக்குக் கிளம்பிய போது, "சிக்கனமென்று கண்டதைத் தின்று உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள்" என்றாள்.

"அதெப்படி முடியும், கமலா? இந்த ஆறு மாத காலமாய்த்தான் சிக்கனம், சிக்கனமென்று என் வாயையும் வயிற்றையும் கட்டி வைத்து விட்டாயே" என்று சொல்லிச் சிரித்தான் ராகவன்.

சுகந்த பரிமளத்திற்கு . . .

# மைசூர் பாத் டேப்லெட்டுகள்

மனோரம்யமான மல்லிகைப்பூ வாசனையுடன்கூடியது

புகழ்பெற்ற மைசூர் சந்தன சோப்பாரின் தயாரிப்பு

எல்லா இடங்களிலும் கிடைக்கும்

*

## கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

---

# மார்புச்சளி

'பெப்ஸ் அருந்துங்கள்'

என்று டாக்டர்

சொல்லுகிறார்





இருமல், ஜலதோஷம்; தொண்டைப்புண், மார்புச்சளி, இன்புளுயன்ஸா மற்றும் தொண்டை, மார்பு சம்பந்தமான நோய்கள் அபாயகரமானவை. இத்தொல்லைகளை எல்லாம் பெப்ஸ் மூலம் நிவர்த்தி செய்துகொள்ளுங்கள். பெப்ஸ் மூச்சு விடுவதை சுலபமாக்குகிறது. பெப்ஸிலிருக்கும் செழிப்பான மருந்துச் சத்துக்கள் மார்புக்குள்ளும் சுவாச கோசங்களிலும் ஊடுருவிச் செல்லுகிறது. அதனால் தான் பெப்ஸ் துரிதமாகவும் நிச்சயமாகவும் இருமலைத் தடுக்கிறது: புண்ணை குணப்படுத்துகிறது: ஆபத்து விளைவிக்கும் நோய்க்கிருமிகளைக் கொல்லுகிறது: சுவாச கோசத்திற்கும் தொண்டைக்கும் இதமளிக்கிறது. தொண்டை, மார்பு நோய்களுக்குகந்த தித்திக்கும் சுவையுள்ள மாத்திரைகளான பெப்ஸையே டாக்டர்கள் சிபார்சு செய்கிறார்கள்.

பெப்ஸ் நன்கு அருந்துங்கள் **PEPS**



தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள்.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்.

# உறுதியான தேகதிடம்



## நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்



ஆரோக்யமளிக்கும் தன்மை நிரூபணமான இந்த டானிக்கைச் சாப்பிட்டுப் பாருங்கள். போஜனம் புஷ்டியாவது மின்றி போஷாக்கும் பெறுவீர். உங்கள் தினசரி வேலைகளையும் தேகாப்பியாசங்களையும் சரிவரச் செய்யபுதிய சக்தியும் உறுதியான தேகதிடமும் பெறுக. சீக்கிரமே தோன்றுகிறபடி உங்கள் உறுப்புகள் வலுவடைவதற்கு அவசியமான போஷாக்கு கிடைக்கும்.

வளரும் குழந்தைகளுக்கு ருசி மிகுந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மிகவும் உதவிகரமானது. இருமல், சளி ஏற்படாதவாறு எதிர்ப்பு சக்தி உண்டாக்கும்.




# WATERBURY'S
## COMPOUND

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் திடமுடன் வைத்திருக்கும்

NAS. 40-53




## 13. பச்சைக் கிளி

சங்கீத வித்வானுடைய பதிலைக் கேட்ட மந்திரவாதி மேலே பேசத் தெரியாமல் திணறிப் போய் விட்டான்.

அவனுடைய நிலைமையைக் கண்ட சங்கீத வித்வானுக்கு, உள்ளத்துக்குள் சிறிது இரக்கம் ஏற்பட்டது.

“அப்படியானால் ஒன்று செய்கிறீர்களா?” என்றார் சங்கீத வித்வான்.

“என்ன?” என்றான் மந்திரவாதி.

“இதோ இருக்கிறான் பாருங்கள் சிறுவன். இவன் பெயர் நந்தகுமாரன். இவனுக்குப் பிரபாவை வெகு நன்றாகத் தெரியும்! அவனிடம் நீங்கள் கொடுத்த மந்திர மோதிரத்தைக் கொடுத்து விடுகிறேன். இவனுக்கு உங்கள்மந்திர மோதிரத்தை உபயோகப் படுத்தும் விதத்தைக் கூறுங்கள். அந்த மந்திர மோதிரத்தைக் கொண்டு, அதன் உதவியினால் இவன் பிரபாவைத் தேடிக் கண்டு பிடிக்கட்டும்!” என்றார் சங்கீத வித்வான்.

சங்கீத வித்வான் இவ்வாறு கூறி வந்த போது மந்திவாதி நந்தகுமாரனைக் கவனித்தான்; உற்றுப் பார்த்தான்.

முன்பிருந்ததைவிட இப்பொழுது இவன் எவ்வளவு மாறுதல் அடைந்திருக்கிறான். எவ்வளவு அழகிய முகம்! எத்தகைய பரந்த மார்பு! வீரம் செறிந்த திண்ணிய புயங்கள்! என்றெல்லாம் எண்ணி மகிழ்ந்தானோ என்னவோ தெரியவில்லை.

சங்கீத வித்வான் பேச்சை நிறுத்தியவுடன் மந்திரவாதி சுய உணர்வு பெற்று, “அப்படியே செய்து விட்டால் போகிறது. எனக்குக்கூட வயசு ரொம்பவும் ஆகி விட்டது. தளர்ச்சி வேறு வந்து விட்டது. என்னால் தேடிக் கிடி அலைய முடியாது. இந்தப் பையன் நல்ல சுறுசுறுப்பான இளைஞனாக இருக்கிறான். ஆடி ஓடி அவனால் தேட முடியும். மேலும் பையனைப் பார்த்தாலே எடுத்த காரியத்தைச் சாதிக்காமல் திரும்ப மாட்டான் போல் தோன்றுகிறது! அதனால் நீங்கள் சொன்னபடியே பையனுக்கு மந்திர வித்தையைக் கற்றுக் கொடுத்து விடுகிறேன். இவனே பிரபாவைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வரட்டும். பிரபா இஷ்டப்பட்டால் அவனையே வேண்டுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளட்டும்!” என்று உற்சாகமாகக் கூறினான்.

இதைக் கேட்ட சங்கீத வித்வான், “அடாடா! உங்களுக்குத் தெரியாதா?

ஏற்கெனவே பிரபாவும் இவனும் காட்டை விட்டு ஓடி வந்து கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று திட்டமிட்டனர். அது ஏதோ காரணத்தால் நடக்கவில்லை. எல்லாம் அது அது காலம் வந்தால்தானே நடைபெறும்! அதற்கு இப்போதுதான் சந்தர்ப்பம் வந்திருக்கிறது!'' என்று கூறினார் சங்கீத வித்வான்.

நந்தகுமாரன், ''போதும்! போதும்! நிறுத்துங்கள். மேலே நடக்க வேண்டிய காரியத்தைக் கவனிக்கலாம்'' என்றான்.

ஆம், நந்தகுமாரனுக்குத் தெரியும், மந்திரவாதிக்குத் தன்னைப் பற்றி எல்லாம் தெரியும் என்பது. ஆனால் தன்னைப் பற்றி ஒன்றும் தெரியாதுபோல் அவன் நடிக்கும் போது தான் மட்டும் ஏன் மந்திரவாதி தனக்குத் தெரியும் என்று காண்பித்துக் கொள்ள வேண்டும் என்று நந்தகுமாரன் சும்மா இருந்தான்.

மறு நாள் மந்திரவாதி, பல மந்திர ஜால வித்தைகளை நந்தகுமாரனுக்குக் கற்றுக் கொடுத்தான்.

இருந்த இடத்தில், இருந்த வாக்கிலே காணமற் போவதற்கும் வேறு உருவம் எடுத்துக் கொள்வதற்கும் கற்றுக் கொடுத்தான். பட்சி உருவம் எடுத்துப் பறப்பதற்கும், மிருக உருவம் பெற்று நான்கு கால்களில் நடப்பதற்கும் கற்றுக்கொடுத்தான். ஒரு பிடி மணலைச் சர்க்கரையாக மாற்றுவதற்கும், சர்க்கரையை மணலாக மாற்றுவதற்கும் கற்றுக் கொடுத்தான். மொத்தத்தில் பலவித மந்திரங்களையும் தந்திரங்களையும் கற்றுக் கொடுத்தான்!

''இவ்வளவு வித்தைகளும் கையில் அந்தச் சக்தி வாய்ந்த மாய மோதிரம் இருந்தால்தான் பலிக்கும். அது இல்லையென்றால் எந்த மந்திரத்துக்கும் பயன் கிடையாது!'' என்றான் மந்திரவாதி.

பிறகு சங்கீத வித்வானிடம், ''ஐயா, நான் உம்முடைய சிஷ்யனை என் சிஷ்யனாக ஏற்றுக் கொண்டு, என் வித்தைகளையெல்லாம் சொல்லிக் கொடுத்து விட்டேன். எனக்கும் இத்தனை நாட்களாகத் தகுந்த சிஷ்யனைத் தேடி என் வித்தைகளைக் கற்றுத் தரவேண்டும் என்ற அவா இருந்தது. அது பூர்த்தியாகி விட்டது. இனி அந்த மோதிரத்தை உங்கள் சிஷ்யனிடம் கொடுத்து விடுங்கள். இனி நாமிருவரும் ஈசன் திருவடி நிழலைப் பரவிப் பாடி மகிழ்வோம்'' என்றான் மந்திரவாதி.

உடனே சங்கீத வித்வான் தாம் இது காறும் ஒளித்து வைத்திருந்த மாய மோதிரத்தை நந்தகுமாரனிடம் கொடுத்தார்.

அதைப் பெற்றுக் கொண்ட நந்தகுமாரன் அவர்கள் இருவர் கால்களிலும் விழுந்து வணங்கினான். ''உங்கள் இருவரையும் குருவாகப் பெறுவதற்கு எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கவேண்டும்' என்று நாத் தழு தழுக்கக் கூறினான்.

இருவரும் நந்தகுமாரனைத் தட்டிக் கொடுத்து, ''எல்லாம் ஈசன் செயல்! இனி நீ தாமதிக்கக் கூடாது. பாவம், குழந்தை பிரபா எங்கே காட்டில் தவிக்கிறாளோ, என்னமோ! நீ உடனே அவளைக் கண்டு பிடித்தேயாக வேண்டும்! ஓடு! அல்லது பறந்து செல்!'' என்றார்கள் இருவரும்.

நந்தகுமாரன் தான் கற்ற மந்திரத்தை அப்பொழுதே உச்சரித்தான்.

அடுத்த கணம் ஆளைக் காணவில்லை. ஆம், நந்தகுமாரனைத் தான் காணவில்லை!

''சரி, அவன் காற்றாகி விட்டான்'' என்று சங்கீத வித்வான் நினைத்தார்.

அடுத்த பத்து நிமிஷம் கழித்துக் கீச்சுக் குரலில் 'நான் போய்விட்டு வரட்டுமா' என்று ஒரு குரல் தலைமாட்டில் கேட்டது.

இருவரும் அண்ணாந்து பார்த்தனர். சிறைக் கம்பி மேல் பச்சைக் கிளியின் உருவத்தில் நந்தகுமாரன் இருந்தான்.

''போய் வா! போய் வா!'' என்று இருவரும் சேர்ந்தாற்போல் கூறினர்.

இப்பொழுதுதான் சிறைக் காவலர்கள் விழித்துக் கொண்டனர்.

இவ்வாறு நல் வார்த்தை கூறி யாரை வழியனுப்புகிறார்கள் என்று பார்த்தனர். பட பட வென்று சிறகு அடித்துக் கொள்ளும் சத்தம் கேட்டது. அண்ணாந்து பார்த்தனர். பச்சைக் கிளி பறந்து செல்வதைக் கண்டனர்.

''இங்கே எப்படிக் கிளி வந்தது?'' என்று அவர்கள் அதிசயித்தனர்.

அடுத்த கணம் சிறைக்குள் பார்த்தால் அவர்கள் கைது செய்திருந்த இடைப் பையன் நந்தகுமாரனைக் காணவில்லை என்பதைத் தெரிந்து கொண்டார்கள்! அவர்களுக்குப் பகீர் என்றது!

அந்தச் சமயம் பார்த்துச் சேனாபதியின் ஆட்கள் இருவர் தூரத்தே வருவது தெரிந்தது!

அந்த வீரர்களைக் கண்டதும், சிறைக் காவலர்களின் குலை நடுக்கம் இன்னும் அதிகரித்தது.

''எங்கே அந்தப் பையன்? சீக்கிரம் சொல்லுங்கள்! அப்படிச் சொல்லவில்லை என்றால் உங்கள் தலைபோவதோடல்லாமல் எங்கள் தலைகளும் உருண்டுவிடும்! உடனே சொல்லுங்கள்!'' என்று கெஞ்சினார்கள்.

''எங்களுக்கு என்ன அப்பா தெரியும்!'' என்று சொன்னார்கள் இருவரும்.

ஆம், அவர்கள் தங்களுக்கு ஒன்றுமே தெரியாதுபோல் நடித்தனர். (தொடரும்)

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.




ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.





குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.





மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

## புரோடெக்ஸ்
## ஆல் பர்பஸ்
## டாய்லட் பவுடர்



# டன்லப்

மீது

சுக

பிரயாணம்

செய்யுங்கள்




DCX-2T



# ரேயான்

நூல்கள்

அழகும்,

உழைப்பும்

பொருந்திய

ஆடைகளுக்கு

இந்தியாவின் முதன் முதலான ரேயான் தொழிற்சாலையில் நூற்கப்படும் நூல்கள் தினசரி அணியும் ஆடைகளையும், பனியன்கள், லைனிங்குகள், இலாஸ்டிக் சாமான்கள், மேஜை நாற்காலி துணிகள் முதலியவைகளைத் தயாரிக்க சிறந்தவை. 120 மேலும் 150 டினையர்களில் கிடைக்கும். பிரகாசமான, பளபளப்பான, நீடித்துழைக்கக்கூடிய அமைப்புள்ளவை.






வியாபார விவரங்களுக்கு:
தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிட்.,
ரேயான்புரம் போஸ்ட்,
வடக்கு திருவாங்கூர்.
மேனேஜிங் ஏஜெண்ட்கள்:
(திருவாங்கூர்) லிட்.

TR 3652

*பரிசுக் கட்டுரை :*

# சோஷலிஸம் ஏன் வேண்டும்?

வி. எஸ். சேதுராமன் எம். ஏ.

## 1. முன்னுரை

இந்த மாதிரி எத்தனையோ கேள்விகளுக்குப் பதில் சொல்லிச் சொல்லிப் பெர்னார்ட்ஷாவுக்கு அலுப்புத் தட்டி விட்டது. சுமார் ஐம்பது வருஷங்களாக ஓயாமல் ஒழியாமல் சோஷலிஸத்தைப் பற்றி எழுதித் தள்ளியும்கூட அதில் ஒன்றையும் புரிந்து கொள்ளாமல் கேட்ட கேள்விகளையே திருப்பித் திருப்பி ஜனங்கள் கேட்டுக் கொண்டிருந்தால், எந்த மனுஷனுக்குத்தான் கோபம் வராது!

ஆகவே, அறிஞர் ஷா பேனாவை ஒரு தீட்டுத் தீட்டிக் கொண்டு, கடைசியாக ஒரு வாக்கியத்தை எழுதினார். பேனா முனையிலிருந்து நெருப்புப் பொறிகள் போல வார்த்தைகள் உதிர்ந்தன :

''இருபத்தைந்து வயதிற்குக் குறைந்த வாலிபர்கள் யாரேனும் சோஷலிஸத் தத்துவத்தை விரும்பவில்லையென்றால், அத்தகையவர்களுக்கு 'இருதயம்' என்ற உறுப்பே இல்லை என்றுதான் கூறவேண்டும்; அதே போல, அந்த வயதுக்கு மேற்பட்டவர்கள் சோஷலிஸக் கொள்கையைப் புரிந்து கொள்ளவில்லையென்றால், அவர்களுக்கு மூளையே கிடையாது என்றுதான் அர்த்தம்!''

இந்த ரத்தினச் சுருக்கமான பதிலைக் கேட்டதும் ஷாவின் வாசகர்களைப் போல நாமும் திகைப்படைந்து நிற்பது சகஜம் தானென்றாலும், அதில் அடங்கியுள்ள ஒரு பெரிய உண்மையை அலட்சியமாகப் புறக்கணித்து விடலாகாது. ஏனெனில், பெர்னார்ட் ஷா கூறிய பிரகாரம் முதன் முதலில் இளைஞர்கள் சோஷலிஸத்தைப் புரிந்து கொள்வது இதய உணர்ச்சியின் வேகத்தினால்தான். காரணம், 'உலக அனுபவம்' என்ற உரலிலே மசியாத வாலிப உள்ளமானது, சமுதாயத்திலே காணப்படும் அநீதிகளையும் ஏற்றத் தாழ்வுகளையும் கண்ட மாத்திரத்தில் சீறிக்கொண்டு கிளம்புகிறது. அதே சமயத்தில் இத்தகைய அநீதிகளற்ற,—சமத்துவம் நிலவுகின்ற,— ஒரு கனவு உலகமும் அந்த வாலிபனது கற்பனை வெளியிலே தோன்றி விடுகிறது. ஆகவே, இளைஞர்களது இயற்கையான உணர்ச்சி வேகமும் நீதி உணர்ச்சியும் அவர்களைச் சமதர்ம தத்துவத்தை நெருங்கச் செய்கிறது.

அதே போல, அறிவும் அனுபவமும் பழுத்து, எந்தக் கொள்கையையும் சிந்தனைத் தராசிலே எடை போடும் முதியவர்களும் கூட, தமது பகுத்தறிவைப் பயன்படுத்திச் சரியானபடி காரண – காரியங்களை ஆராய்ந்தால், 'சோஷலிஸ'த்தின் அடிப்படையை ஒப்புக் கொண்டு விடுவார்கள்.

''பக்தியினாலாயினும் சரி, ஞான மார்க்கத்தினாலாயினும் சரி, இறுதியில் மனிதன் என்னை அடையலாம்'' என்று பகவத் கீதையில் கண்ணன் கூறியது போல, ''வெறும் உணர்ச்சியினாலும் சரி, கூர்ந்த பகுத்தறிவாலும் சரி, சோஷலிஸத்தை ஏற்காமல் தப்ப முடியாது'' என்கிறார் ஷா!

## 2. இதுதான் சோஷலிஸம்!

'சோஷலிஸம்' என்ற சமதர்மக் கொள்கை மனித வர்க்கத்துக்குப் புதியதல்ல. எப்பொழுது மனித சமுதாயத்தில் 'சொத்து உரிமைக்' கொள்கையும், 'பணக்காரன்—ஏழை' என்ற பாகுபாடும் தோன்றினவோ, அன்றைய தினத்திலிருந்தே இவைகள் இல்லாத சமுதாயத்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்ற ஆவலும் மனிதனுடைய இதயத்தின் ஆழத்திலே வேரூன்றி விட்டது. இந்த ஆவலின் எதிரொலியையே, பழங்காலத்துக் கவிஞர்களின் கவிதைகளிலும் சரி, நவயுக எழுத்தாளர்களின் உத்வேகம் ததும்பும் எழுத்திலும் சரி, நாம் அடிக்கடி பார்க்கிறோம்.

உதாரணமாக, நமது கவிஞர் திலகமாகிய கம்பர் அற்புதமாக சிருஷ்டித்திருக்கும் ''ராம ராஜ்யம்'' என்ற கனவு-உலகத்தில் ஒரு கணம் பிரவேசித்தால் போதும், உண்மையான சமதர்மம் என்றால் என்ன என்பதைப் புரிந்துகொள்ள! ''வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்'' என்று கம்பீரமாக ஆரம்பித்து, ''ராம ராஜ்யத்திலே 'உடையவர்கள்' 'இல்லாதவர்கள்' என்ற பதங்களுக்கே அர்த்தமில்லை!'' என்று கவிஞர் முடிக்கும்போது, நமது இலட்சியத்தையே எட்டிப் பிடித்து விட்டதைப் போன்றதொரு உணர்ச்சி தோன்றுகிறதல்லவா! இன்றும் அறிஞர்களால் பிரமாதமாகப் புகழப்படும் தாமஸ் மூர் எழுதிய ''யுடோபியா'' (கற்பனை உலகம்) என்ற நூல் தோன்றுவதற்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே கம்பனுடைய ராமராஜ்யக் கனவு வெளி வந்து விட்டதை நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

ஆனால், சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில் இயந்திரத் தொழில்கள் பெருகி, அதனோடு வேலையில்லாமை, தொழிலாளரைச் சுரண்டுதல் போன்ற பிரச்னைகளும் தோன்றிவிடவே, வெறும் கற்பனை அளவிலிருந்த ''சமதர்ம தத்துவம்'' விஞ்ஞான ரீதியில் விளக்கப் படலாயிற்று. முதன் முதலாக, 1827-ம் ஆண்டில் ராபர்ட் ஓவன் என்ற ஆங்கில அறிஞர், ''சோஷலிஸம்'' என்ற பதத்தை உபயோகித்து, கூட்டுறவு முறையின் சிறப்பை விளக்கினார். பிறகு பிரான்ஸில் ஸெயிண்ட் சைமன், பூரியர் என்ற சிந்தனையாளர்களும், ஜெர்மனியில் காரல் மார்க்ஸும் பொருள் உற்பத்தியையும் வினியோகத்தையும் எவ்வாறு சமுதாயத்தின் பொது உரிமையாகச் செய்வது என்பதைப் பல்வேறு வழிகளில் விளக்கினார்கள். முக்கியமாக, காரல்மார்க்ஸின் சித்தாந்தமே, நவீன சமதர்மக் கருத்துகளுக்கு ஆணிவேராக அமைந்து விட்டது.

எனவே, சோஷலிஸ சித்தாந்தங்கள் அநேகம் இருக்கின்றன என்பதை நாம் மறந்து விடலாகாது. எப்படி வேதாந்தக் கருத்தை விளக்க அத்வைதம், துவைதம் முதலிய பல சித்தாந்தங்களும் ஏற்பட்டுள்ளனவோ, அதே மாதிரியாக 'சமதர்ம' தத்துவத்துக்குத் தரப்படும் வியாக்கியானங்களையும் செயல் முறைகளையும் ஒட்டி, ''ஸிண்டிகலிஸம்,'' ''கில்டு சோஷலிஸம்'', ''கலெக்டிவிஸம்'' என்ற பல பிரிவுகள் தோன்றியுள்ளன. உற்பத்தியையும் பொருள் வினியோகத்தையும் தொழிலாளர் சங்கத்தினிடமே ஒப்படைத்து விடுவதுதான், 'ஸிண்டிகலிஸம்'. இது பிரான்ஸ் நாட்டிலே தோன்றிய தத்துவம். 'கலெக்டிவிஸம்' என்பது, இன்று ரஷ்யாவிலே நடப்பதைப் போல, அரசாங்கத்தினிடமே பொருள் உற்பத்தி, வினியோகம் முதலியவைகளை ஒப்படைத்து விடுவதாகும். 'கில்டு சோஷலிஸம்' இந்த இரண்டுக்கும் மத்தியில், அரசாங்கமும் தொழில் ஸ்தாபனமும் கூட்டாக நிர்வாகம் புரிவதை ஆதரிக்கிறது.

# ஜிம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டிகளுக்கு

### பிரதி மாதாந்திர விஜயம்

நோயாளிகளின் நன்மையை உத்தேசித்து 1953 அக்டோபர் மாதம் முதல் கீழ்க்கண்ட ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு மாதத்திலும் குறிப்பிட்ட தேதிகளில் கீழே குறிப்பிட்டுள்ள நேரங்களில் எமது டாக்டர் ஆலோசனை கூறுவதற்குத் தயாராக இருப்பார்.

○●○

ஆலோசனை நேரம் :

குறிப்பு :—முற்பகல் = 9மணி முதல் 11 மணி வரை; பிற்பகல் = 3 மணி முதல் 5 மணி வரை
A. M. & P. M. = காலை 9 முதல் 11 மணி வரை, மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| கரூர் | 1 (முற்பகல்) | மெஸர்ஸ். செண்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| சேலம் | 2 (A.M. & P.M.) | மெஸர்ஸ். சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி லிட். |
| ஈரோடு | 3 (முற்பகல்) | மெஸர்ஸ். ஸ்ரீ கிருஷ்ணா & கோ., கெமிஸ்ட்ஸ் |
| திருப்பூர் | 3 (பிற்பகல்) | மெஸர்ஸ். ஆர். எஸ். வாசன் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| கோயமுத்தூர் | 4 (A.M. & P.M.) | மெஸர்ஸ். சல்வர் & கோ., கெமிஸ்ட்ஸ், ராஜா தெரு |
| பாலக்காடு | 5 (முற்பகல்) | மெஸர்ஸ். நாதம் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| பழனி | 6 (முற்பகல்) | ஸ்ரீ ஷண்முகானந்தா பவன், ரயில்வே ஸ்டேஷன் ரோடு |
| திண்டுக்கல் | 6 (பிற்பகல்) | மெஸர்ஸ். சி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ், ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மதுரை | 7 & 8 (A.M. & P.M.) | மெஸர்ஸ். டி.என்.சி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ், வடக்கு சித்திரை வீதி |
| கோயில்பட்டி | 9 (முற்பகல்) | மெஸர்ஸ். தனலக்ஷ்மி மெடிகல் மார்ட், கெமிஸ்ட்ஸ் & டிரக்கிஸ்ட்ஸ் |
| திருநெல்வேலி | 10 & 11 (A.M &P.M.) | தி சந்திர விலாஸ், போர்டிங் & லாட்ஜிங் திருநெல்வேலி ஜங்ஷன் |
| திருவனந்தபுரம் | 12 (A.M. & P.M.) | மெஸர்ஸ். எம். வி. கணபதி ஐயர் & சன்ஸ், அட்டகுளங்கரை |
| தென்காசி | 13 (முற்பகல்) | மெஸர்ஸ். தி மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| ராஜபாளையம் | 14 ,, | மெஸர்ஸ். வி. எஸ். திருப்பதி ராஜா மெடிகல் & ஜெனரல் மார்ட் |
| காரைக்குடி | 15 (A.M. & P.M) | மெஸர்ஸ். ஏ. வி. & சன்ஸ், டிராவலர்ஸ் ரூம்ஸ் |
| புதுக்கோட்டை | 16 (முற்பகல்) | வஸந்தா லாட்ஜ் |
| தஞ்சாவூர் | 17 (A.M. & P.M.) | ராஜா சத்திரம் |
| பட்டுக்கோட்டை | 18 (முற்பகல்) | ஸ்ரீ வி. ஜகதீச ஐயர், புத்தக வியாபாரம், பெரியதெரு |
| திருத்துறைப்பூண்டி | 18 (பிற்பகல்) | ஸ்ரீ டி. வி. சந்திரசேகரம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| மன்னார்குடி | 19 (A.M. & P.M.) | Ms. மீனு கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 20 ,, | விசாரிக்குமிடம் : கப்பையா மெடிகல் ஹால் அல்லது தி மெடிகல் எம்போரியம், விஜயபுரம் |
| நாகபட்டினம் | 21 (முற்பகல்) | மெஸர்ஸ். எஸ்.டி. சௌந்தரராஜ பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |

(தொடர்ச்சி எதிர் பக்கம் பார்க்கவும்)

ஆனால், மேற்கூறிய வித்தியாசங்களெல்லாம் மேம்போக்கானவைகளே தவிர, அடிப்படைத் தத்துவத்தைப் பாதிப்பவையல்ல. எனவே, "சோஷலிஸம்" என்று பொதுப் படையாகக் குறிக்கப்படும் தத்துவத்தில் பின்வரும் அம்சங்கள் முக்கியமாக விளங்கக் காணலாம் :—

1. உற்பத்திச் சாதனங்களாகிய நிலம், இயற்கை வசதிகள், இயந்திரங்கள் முதலியவை சமுதாயத்தின் பொது உடைமையாக விளங்க வேண்டுமே தவிர, தனிப்பட்டவர்களின் ஆதிக்கத்தில் இருக்கலாகாது. அப்போதுதான் தனி மனிதர்கள் லாபமடைவதும், அதன் காரணமாக உழைப்பின் பலன் வியர்த்தமாவதும் நின்று, சமுதாயம் முழுதுமே அந்தப் பலனைப் பகிர்ந்து கொள்ளலாம்.

2. அந்த நிலையில், சமுதாயத்துக்கு அவசியமான பொருள்களை உற்பத்தி செய்வதற்கும், கேவலம் லாபத்தை மட்டும் உத்தேசித்துத் தயாரிக்கப்படும் அனாவசியமான பொருள்களின் உற்பத்தியை நிறுத்தவும் பொருளாதாரத் திட்டம் வகுப்பது அவசியமாகிறது.

3. திட்டத்தை வகுப்பதும், பிறகு அதை நிறைவேற்றுவதும், பொருள்களைத் தகுந்தபடி விநியோகிப்பதும் பெரும்பாலும் சர்க்காரின் பொறுப்பாகிவிடுவதால், எத்தகைய சோஷலிஸ அமைப்பின் கீழும் ஓரளவு தனி மனிதனது உரிமைகள் பாதிக்கப்படுவதும் சர்க்காரின் ஆதிக்கம் விரிவடைவதும் தவிர்க்க முடியாத விளைவுகளாகும்.

இந்த அம்சங்கள் எத்தகைய சமதர்ம மார்க்கத்துக்கும் பொதுவாக இருப்பவையென்றாலும், செயல் முறை வேறுபாடுகளால் இவைகளும் சிறிது பாதிக்கப் படுகின்றன. உதாரணமாக, கம்யூனிஸ்டுகள் தமது கட்சியின் சர்வாதிகாரத்தை நிலைநிறுத்தினால்தான் இத்தகைய நிலையை உண்டாக்க முடியுமென்று வாதிக்கிறார்கள்; அதனால் ஜனநாயகமும் தனி மனிதனது உரிமைகளும் அழிந்து போவதைப் பற்றி அவர்களுக்கு அக்கறை இல்லை. ஆனால், இங்கிலாந்திலும் மற்ற நாடுகளிலுமுள்ள சோஷலிஸ்டுகள், ஜனநாயக அமைப்பைப் பாதுகாத்த வண்ணமே சமதர்மத்தை நிலைநாட்ட வேண்டுமென்ற கொள்கையுடன் இருக்கிறார்கள். மேலும், பலாத்காரமும் புரட்சி மார்க்கமும் அவசியமென்று பொதுவுடைமை வாதிகள் நம்புகின்றனர். ஆனால், ஜனநாயக அமைப்பைப் பயன்படுத்தி, சிறிது சிறிதாக மாறுதல்களைச் செய்து, 'வளர்ச்சி மார்க்கத்தினால்' சமதர்ம இலட்சியத்தை அடையலாம் என்பது சோஷலிஸ்டுகளின் நம்பிக்கை. இத்தகைய அடிப்படையான வித்தியாசங்களினால்தான், எந்த நாட்டிலும் சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும் ஒத்துப் போவதற்கு இயலவில்லை!

மனிதனுக்கு மனிதன் அடிமை என்பதில்லாமல் சம சந்தர்ப்பத்தை அளிக்க வேண்டுமென்ற தத்துவம், யாரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. ஆயினும் விஞ்ஞான நிபுணர் ஐன்ஸ்டீன் கூறியது போல, "சர்க்காரின் அதிகாரமும் இயந்திரங்களின் ஆதிக்கமும் சேர்ந்து சிலருடைய கைகளில் செல்வாக்கும் பொருளும் தேங்கச் செய்வதை எப்படித் தடுப்பது! தனி மனிதனுடைய சுதந்திரம் பறிபோகாமல் எவ்வாறு பாதுகாப்பது!" என்பவைகள்தான் சோஷலிஸ சித்தாந்தம் பதிலளிக்க வேண்டிய மிக முக்கியமான கேள்விகள்.


| | | |
|---|---|---|
| நன்னிலம் | 21 (பிற்பகல்) | மெஸர்ஸ். ஜி. எஸ். ராஜன் & ஆர். ஆர். சுவாமி ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மாயவரம் டவுன் | 22 (A.M. & P.M.) | மெஸர்ஸ். ராமகிருஷ்ணா வைத்யசாலை, கிருஷ்ணராயர் சந்து |
| சீர்காழி | 23 (முற்பகல்) | டாக்டர் ஆர். சபேச அய்யர் டிஸ்பென்ஸரி. |
| சிதம்பரம் | 24 (A.M. & P.M.) | மெஸர்ஸ். ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி |
| கடலூர் | 25 ,, | மெஸர்ஸ். கமலா & கோ., கெமிஸ்ட்ஸ், புதுப்பாளையம் |
| விழுப்புரம் | 26 ,, | மெஸர்ஸ். சி. குபேந்திர செட்டி & சன்ஸ் |
| திருக்கோவிலூர் | 27 (முற்பகல்) | மெஸர்ஸ். ஸ்ரீ கிருஷ்ணா மெடிகல் ஹால், கெமிஸ்ட்ஸ், பெருமாள் சந்நிதி தெரு |
| விருத்தாசலம் | 27 (பிற்பகல்) | மெஸர்ஸ். ஸ்ரீ நடராஜா மெடிகல் ஹால் |
| காஞ்சீபுரம் | 28 (A.M. & P.M.) | 86, சாலை தெரு, பெரிய காஞ்சிபுரம் |
| வேலூர் | 29 ,, | மெஸர்ஸ். வி. பி. சிவம் & கோ., கெமிஸ்ட்ஸ், லாங் பஜார் |
| சித்தூர் | 30 (முற்பகல்) | மெஸர்ஸ். மிட்டா வெங்கடாசலம் செட்டி கெமிஸ்ட்ஸ் |

ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

மதராஸ் ★ திருச்சிராப்பள்ளி ★ கும்பகோணம்

## 3. இயக்கம் வளர்ந்த கதை

இது வரையில் சோஷலிஸ சித்தாந்தத்தைப் பற்றியும் அதன் சரித்திர பூர்வமான வளர்ச்சியைக் குறித்தும் பொதுப்படையாக ஆராய்ந்தோம். இனி, நம் நாட்டைப் பொறுத்தவரையில் இந்தக் கொள்கை எவ்வாறு அரசியல் வானிலே உதயமாகிப் பிரகாசிக்கத் தொடங்கியது என்பதையும், இதனைக் குறிக்கோளாகக் கொண்டுள்ள சோஷலிஸ்டுக் கட்சியின் தற்போதைய நிலை எவ்வாறு உள்ளது என்பதையும் கவனிக்க வேண்டும்:

சென்ற முதல் உலகப் போர் ஆரம்பமாவதற்கு முன்பாக, நம் நாட்டில் சோஷலிஸக் கொள்கை பரவியதாகத் தெரியவில்லை. காரணம், நாட்டிலே இயந்திரத் தொழில்கள் ஆரம்பதசையிலிருந்தன. மேலும், அந்நியர் ஆதிக்கத்தை எதிர்ப்பதற்காகத் தேசியவாதிகளால் வளர்க்கப்பெற்ற "சுதேசி இயக்கம்" உள்நாட்டு முதலாளிகளுக்கு அனுசரணையாகவே அமைந்தது. பொதுவாக விவசாயிகளும் தொழிலாளிகளும் படிப்பு வாசனையற்றவர்களாய் இருந்ததால், ஸ்தாபனங்களை அமைத்து இயக்கத்தைப் பலப்படுத்தவும் போராடவும் அறிந்திருக்கவில்லை. ஆனால் உலகப்போரின் இடையிலே ரஷ்யாவில் முடியாட்சி ஒடுக்கப்பட்டு லெனின் தலைமையின் கீழ் பொதுவுடைமைக் கட்சியின் ஆதிக்கம் நிலை நிறுத்தப்பட்ட சம்பவமானது, மற்ற நாடுகளைப்போல இந்தியாவிலும் ஒரு அதிர்ச்சியை உண்டு பண்ணியது. அப்போது, ரஷ்யாவிலே அமைக்கப்பட்ட மூதலாவது 'காமின்டான்' ஸ்தாபனமானது, உலகத் தொழிலாளர்கள் அனைவரையும் வர்க்க ரீதியாய் ஒன்று சேர்த்து உலகப் புரட்சியை நிகழ்த்தும் நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. இதனால் ரஷ்யப் புரட்சிக்கும் இதர நாடுகளின் தொழிலாளர் இயக்கங்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படலாற்று.

ஒரு பக்கத்திலே ரஷ்யப் பொதுவுடைமை வாதிகளின் இடைவிடாத பிரசாரம், இன்னொரு பக்கத்தில் காங்கிரஸ் கட்சியில் பழைய மிதவாதிகளின் செல்வாக்கு குறைந்து தீவிர வாதிகளான இளைஞர்களுக்கும் பாமர மக்களுக்கும் கிடைத்த பிடிப்பு, மற்றொரு புறத்தில் சென்னையிலே முதன் முதலாகத் தோன்றி நாடெங்கும் வளரத் தொடங்கிய ஆலைத் தொழிலாளர் இயக்கம், — இந்த மூன்று சக்திகளின் பரிணமிப்புத்தான் 1920-ம் ஆண்டிற்குப் பிறகு சோஷலிஸக் கொள்கை வேரூன்றுவதற்கான சூழ்நிலையை உண்டாக்கியது எனலாம். அதே சமயத்தில், தேசிய வாதிகளிடையிலும் கருத்து வேற்றுமைகள் தோன்றலாயின. "பொருளாதாரத் திட்டம் இல்லாத வறட்டுத் தேசியம் எதற்குப் பிரயோஜனம்!" என்று சமதர்ம வாதிகள் விவாதித்தனர்; "இப்போதைக்குக் காந்திய நிர்மாணத் திட்டமே போதும்; சுதந்திரம் வந்த பிறகு பொருளாதாரச் சீர்திருத்தத்தைக் கவனித்தால் போகிறது" என்ற தோரணையில் பழைய காங்கிரஸ்வாதிகள் பேசிவந்தனர். ஆயினும், 1920-ம் ஆண்டில் அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸை நிறுவிய பெருமையில் முக்கியமான பங்கு லாலா லஜபதி, திவான் சமன்லால் போன்ற தேசியவாதிகளையே சாரும்.

அடுத்த பத்து வருஷங்களில் சமதர்ம இயக்கம் வேகமாக வளரலாயிற்று. அப்போது உலகெங்கும் நிலவிய பொருளாதார நெருக்கடி இந்தியாவையும் தாக்கியதால், விவசாயிகளின் மத்தியிலும் வேலையில்லாத வாலிபர்களிடையே அதிருப்தியும் பெருகி வந்தன. அடிக்கடி பம்பாய் முதலிய நகரங்களில் கதவடைப்புகளும் வேலை நிறுத்தங்களும் நிகழ்ந்தமையால், தொழிலாளரிடையே வர்க்க உணர்ச்சியும் போராட்ட மனப்பான்மையும் அதிகரிக்கத் தொடங்கின. இத்தகைய சந்தர்ப்பங்களைப் பலாத்காரப் புரட்சிக்குப் பயன்படுத்தச் சில கோஷ்டியினர் முயல்வதைக் கண்ட பண்டித ஜவாஹர் போன்ற தலைவர்கள், தொழிலாளர் இயக்கத்தையும் தேசிய இயக்கத்தையும் இணைத்து, அமைதியான வழிகளில் சோஷலிஸக் கொள்கையை நிலை நாட்டுவதற்காகப் புதிய இலட்சியத்தைத் தோற்றுவித்தார்கள். சில வருஷங்களுக்கு அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸும் தேசிய காங்கிரஸ் சபையும் ஒன்றுபட்டு வேலை செய்தன. அதே சமயத்தில், முற்போக்கான தேசிய வாதிகள் சுயராஜ்ய இலட்சியத்துடன் சோஷலிஸத்தையும் இணைத்து, அதற்காகக் காங்கிரஸ் ஸ்தாபனத்திற்குள்ளாகவே ஒரு சோஷலிஸ்டு கட்சியைத் தனிப்பட்ட கோஷ்டியாக அமைத்தார்கள். அதன் ஆரம்ப காலத்திலிருந்தே ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயண், ஆசார்ய நரேந்திர தேவ் முதலிய சிறந்த தலைவர்கள் சரியான முறையில் தேசியவாதிகளுடன் ஒத்துழைத்து இயக்கத்தை நடத்தி வந்திருக்கிறார்கள். அவர்களது முயற்சியாலும் பண்டித நேருவின் செல்வாக்கினாலும், 1931-ம் ஆண்டில் கூடிய கராச்சி காங்கிரஸில் ஓரளவு சமதர்ம அடிப்படையைக் கொண்ட பொருளாதாரத் திட்டம் வகுக்கப்பட்டது.

பிறகு நிகழ்ந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற தேசியப் போராட்டங்களில் சோஷலிஸ்டுகள் முன்னணியில் நின்று சொல்லொணாத துன்பங்களை அனுபவித்தார்கள். ஆனால், 1936-ம் ஆண்டிலிருந்து அரசியல் சூழ்நிலை மாறத் தொடங்கியதும் அவர்களுக்கும் மற்ற காங்கிரஸ் வாதிகளுக்குமிடையே அபிப்பிராய பேதங்களும் அதிகரிக்கலாயின. எங்கே சமஷ்டி அரசியலைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டுவிடுமோ என்ற சந்தேகத்தினால், சோஷலிஸ்டுகளும் மற்ற இடது சாரியினரும்




டாக்டர் (ஆச்சரியத்துடன்):— ஸார், உங்களுக்கு வந்திருக்கும் வியாதி சாதாரணமானதல்ல; வைத்திய உலகத்துக்கே ஒரு பொக்கிஷம் கிடைத்த மாதிரி.

நோயாளி (திகிலுடன்):— அப்படியானால் நான் உங்களுக்குக் கொடுக்க வேண்டிய 'பில்' பணம் எவ்வளவு ஆகும்?

வெளிப்படையாகக் காந்தியடிகளையும் அவரது திட்டங்களையும் தாக்கத் தொடங்கினர். இதன் விளைவாக, 1937 லிருந்து 1939 வரை மாகாணங்களில் பதவி வகித்த காங்கிரஸ் வாதிகளுக்கும் சோஷலிஸ்டுகளுக்கு மிடையே பலத்த சச்சரவுகள் ஏற்பட்டன. 1939-ல் நிகழ்ந்த திரிபுரா காங்கிரஸ் வலது சாரிகளுக்கும் இடது சாரியினருக்கு மிடையே மூண்ட போரின் 'குருக்ஷேத்திர பூமி' யாகவே விளங்கியது.

ஆயினும், 1942-ம் ஆண்டில் தோன்றிய அரசியல் கொந்தளிப்பில், சோஷலிஸ்டுகள் தேசிய வாதிகளுடன் சேர்ந்து தியாகத் தீயில் குதித்து எழுந்தனர். அப்போது தீரர் ஜயப்பிரகாச நாராயணரும், வீராங்கனை அருணா ஆஸப் அலியும் புரிந்த வீரதீரச் சாகசச் செயல்களை மறப்பதற்கு இயலுமா!

நாடு சுதந்திரம் பெற்றுக் காங்கிரஸின் கையில் நிர்வாகம் ஒப்படைக்கப் பட்டதும், காங்கிரஸ், போராட்ட காலத்திலிருந்த தூய்மையும் உத்வேகத்தையும் இழந்து, இங்கிலாந்திலுள்ள 'கன்ஸர்வேடிவ்' கட்சியின் ஸ்தானத்தை இங்கே அடையலாயிற்று. எனவே, 1948-ல் நாஸிக்கில் நடைபெற்ற மகாநாட்டில், சோஷலிஸ்டுக் கட்சி விலகித் தனியே இயங்குவதென்று தீர்மானிக்கப் பட்டது. தொழிலாளர் இயக்கத்தைக் கம்யூனிஸ்டுகளிட மிருந்து மீட்கவும், புதிய ஜனநாயக அரசியலில் சட்ட பூர்வமான எதிர்க் கட்சியாக விளங்கி நிர்வாகத்திலுள்ள குறைகளை எடுத்துக் காட்டவும், இவ்வாறு சோஷலிஸ்டுகள் ஓர் தனிக் கட்சியாக அமைவது அவசியமாயிற்று.

காங்கிரஸிலிருந்து விலகிய பிறகு, சோஷலிஸ்டுக் கட்சியின் சரித்திரத்தில் மூன்று முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. முதலாவதாக, கம்யூனிஸ்டுகள் வசமிருந்த ரயில்வே, தபால்-தந்தி முதலிய தொழிலாளரின் ஸ்தாபனங்களை மீட்டு, சர்க்காரிடமிருந்து அவர்களுக்குப் பல சலுகைகள்,—அதுவும் போராட்ட மின்றி,—பெற்றுத் தந்தது, மகத்தான சாதனையாகும். இரண்டாவதாக, ஜயப்பிரகாச நாராயணர் முதலிய தீவிர சோஷலிஸ்டுகளும்கூட, காந்திய திட்டங்களின் அடிப்படையை உணர்ந்து அவற்றைச் சமதர்ம தத்துவத்துடன் இணைக்க முயல்வது, ஒரு குறிப்பிடத்தக்க மாறுதலாகும். 'பூமிதான இயக்கம்', பழுத்த சர்வோதய வாதிகளும் தீவிர சோஷலிஸ்டுகளும் ஒருங்கே போற்றுகின்ற அற்புத இயக்கமாக அல்லவா ஆகிவிட்டது! மூன்றாவதாக, சென்ற பொதுத் தேர்தலுக்குப் பிறகு பிரஜா கட்சியும் சோஷலிஸ்டு கட்சியும் இணைந்திருப்பதைக் குறிப்பிட வேண்டும். இந்த இணைப்பினால் சோஷலிஸ்டு இயக்கம் எந்த அளவில் பலமடைந்திருக்கிறது என்பதை வருங்கால சம்பவங்கள்தான் தீர்மானிக்க முடியும். தேர்தலிலே சோஷலிஸ்டுக் கட்சி சற்று பலஹீனமடைந்த போதிலும், மொத்த வோட்டுகளின் கணக்குப் பார்க்கும்போது காங்கிரஸிற்கு அடுத்த அகில இந்தியக் கட்சி என்ற உன்னத ஸ்தானத்தைச் சோஷலிஸ்டு கட்சி வகிக்கிறது.

### 4. இயக்கத்திலுள்ள குறைகள்

பொதுத் தேர்தலில் கட்சி அடைந்த தோல்வியைக் கண்டு, எந்தச் சமதர்ம வாதியும் 'தோல்வி மனப்பான்மை'யை அடைந்து விடலாகாது. அதற்கு மாறாக, அத்தகைய தோல்வியின் காரணங்களை ஆராய்ந்து அவைகளைக் கூடுமான வரையில் களைய முயல்வதுதான், வெற்றிப் பாதையில் முதலாவது படியாகும். அவ்வாறு ஆராயும்போது, இந்தச் சில குறைகளும் மிக முக்கியமானவைகளாகத் தோற்றமளிக்கின்றன:




"உன் வழக்கில் நான் வாதாட வேண்டுமென்று நீ விரும்புகிறாய். அது சரி, உன்னிடம் பணம் இருக்கிறதா?"

"பணமா? என்னிடம் ஏது? ஆனால் என்னிடம் ஒரு புதிய மோட்டார் சைக்கிள் இருக்கிறது."

"ஆகா, அது போதுமே! அதன்மேல் பணம் வாங்கலாம். நல்லது. உன் வழக்கு என்ன?"

"அந்த மோட்டார் சைக்கிளை நான் திருடி விட்டேன், ஸார்!"

1. இன்னமும் தெளிவான காரிய திட்டம் ஒன்று தயாரித்து, பொது மக்களிடம் சமர்ப்பிக்கப் படவில்லை. 'பூமிதான இயக்கம்', 'உழுபவனுக்கே நிலம்' முதலிய உயர்ந்த இலட்சியங்களை விளக்கி விடுவதால் மட்டும் எதையும் சாதித்து விட முடியாது. நீண்டகால திட்டத்தோடு ஒரு குறுகியகால திட்டமும் தயாரிக்கப்பட வேண்டும். நாளைக்கு ஏதேதோ கிடைக்கும் என்பதற்காக ஜனங்கள் காத்திருக்க மாட்டார்கள்; 'இன்றைக்கு என்ன கிடைக்கும்!' என்பதுதான் அவர்களுடைய கேள்வி. ஆகவே, குறுகிய காலவரையறைக்குள் நிறைவேற்றக்கூடிய (காந்திய நிர்மாணத் திட்டம் போன்ற) காரிய சாத்தியமான திட்டங்களை வகுப்பதுதான் முதல் தேவையாகும்.

2. கொள்கைகளையும் காரிய திட்டங்களையும் விளக்கும்போது, தலைவர்கள் ஒரே விதமான கருத்துக்களை வெளியிட வேண்டும். ஜயப்பிரகாச நாராயண் ஒருவித விளக்கம் தந்தால், லோஹியா வேறொரு வியாக்கியானம் செய்கிறார். இதனால் ஊழியர்களுக்கும் சரி, ஜனங்களுக்கும் சரி, கருத்துத் தெளிவில்லாமல், குழப்பமே ஏற்படுகிறது. தலைவர்களிடையே யுள்ள அபிப்பிராய பேதங்கள் பத்திரிகைகளிலும் வெளி அரங்கத்திலும் வந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

3. சோஷலிஸ்டுத் தலைவர்கள் சிறந்த அறிவாளிகளாக இருந்தபோதிலும், அவர்களில் பலருக்கு நிர்வாக அனுபவம் போதவில்லை. அளவு கடந்து தத்துவங்களைப் பேசிக் காலங் கடத்துகிறார்களே தவிர, நடைமுறையில் பூர்த்தியாக வேண்டிய



மானேஜர் :—இது என்ன! உம்முடைய செலவுக் கணக்கில் பெரிய தொகை ஒன்று எழுதி யிருக்கிறதே?

ஏஜெண்டு :—அதுவா? அது என் பிரயாணத்தின் போது ஏற்பட்ட ஹோட்டல் செலவு 'பில்'.

மானேஜர் :—இனிமேல் வெளியூர்களுக்குப் போனால் ஹோட்டல்களை விலைக்கு வாங்க வேண்டாம்!

வேலைகளை மன உறுதியுடன் பூர்த்தி செய்வது என்பதைக் காணோம். உதாரணமாக, ஸர்தார் பட்டேல் போன்ற ஒரு சோஷலிஸ்டுத் தலைவரைக் குறிப்பிட்டுக் காட்ட முடியுமா என்பதை யோசித்துப் பாருங்கள். ஆகவே, இந்தத் தலைமுறையைச் சேர்ந்த இளம் தலைவர்களாவது நிர்வாகத்திலும் காரிய சாதனையிலும் சிறந்து விளங்கப் பயிற்சி பெற வேண்டியது அவசியம்.

4. பல சிறந்த தலைவர்கள் பின்னணிக்குப் போய் விட்டனர். அறிவுக் கூர்மையும் மேதையும் கூட அளவுக்கு மிஞ்சினால் ஆபத்துதான் போலிருக்கிறது! யுத்த காலத்திலேயே ஸ்ரீ மஸானி "கலப்புப் பொருளாதாரம்" என்று பேசிக் கொண்டு வேறு மார்க்கத்தில் திரும்பி விட்டார். ஸ்ரீ அச்சுத பட்டவர்த்தன் அரசியல் துறவு பூண்டதும், அருணா ஆஸப் அலி கட்சி மாறியதும், ஸ்ரீராம் மனோகர் லோஹியா வறட்டுத் தர்க்கங்களில் ஈடுபட்டதும், கட்சியைப் பலஹீனப்படுத்தி விட்டன. எனவே, திடமான தலைமை ஏற்படுவதும் திறமையுள்ள தலைவர்களைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி அளிப்பதும் உடனடியான தேவைகள்.

5. தேர்தல் காலத்திலே அனாவசியமாக ஆயிரம் தொகுதிகளில் போட்டி விட்டதானது கட்சியைச் சிதற அடித்து விட்டது. அதற்கு மாறாக, குறிப்பிட்ட சில இடங்களில் மட்டும் வேலை செய்திருந்தால், ஊழியர்கள் சிதறுண்டு போகாமலும் சக்தி விரயமாகாமலும் இருந்திருக்கும். உதாரணமாக, கம்யூனிஸ்டு கட்சியினர், தஞ்சாவூர் ஜில்லா போன்ற சில இடங்களைப் பொறுக்கி எடுத்து, அங்கே சட்டசபை தொகுதிக்கும் மத்திய பார்லிமெண்டு தொகுதிக்கும் இணைந்து வேலை செய்தனர். அதனாலேயே அவர்களுக்குத் தேர்தலில் எதிர்பாராத வெற்றிகள் எல்லாம் கிடைத்தன!

6. பிரஜா — சோஷலிஸ்டு ஐக்கியமானது, சில வகைகளில் சிரமம் அளிக்கக் கூடியது. ஸ்ரீ கிருபளானி, பிரகாசம் போன்ற தலைவர்கள் காங்கிரஸை விட்டு வெளியேறியது, கொள்கை வித்தியாசத்தினால் அல்ல என்பது யாவருக்கும் தெரிந்ததே. அத்தகைய சந்தர்ப்ப வாதமும் அந்தத் தலைவர்களுக்குச் சொந்த மாகாணங்களில்கூடச் செல்வாக்கு குறைந்து வருவதும் கட்சியின் கலனைப் பாதிக்கவே செய்யும். ஆகவே, அந்த மாகாணங்களில் தமது கட்சியை வலுப்படுத்திக் கொள்வதில் சோஷலிஸ்டு இளைஞர்கள் முனைய வேண்டும்; அப்பொழுதுதான், அவசியமானால் பயனற்ற தலைவர்களை உதறி எறிந்துவிட்டுப் போவதும் சாத்தியமாகும்.

(7) ஜனநாயகத்தை விரும்புவதாய்க் கொள்கையளவில் தெரிவித்த போதிலும், அடிக்கடி ஜனநாயக எதிரிகளுடன் சோஷலிஸ்டுகள் சேர்ந்து விடுகின்றனர். உதாரணமாக, ராஜாஜீ சென்னையில் ஜன நாயகத்தைப் பாதுகாத்து விட்டார் என்று வாயாரப் புகழும் ஸ்ரீ கே. பி. மேனன், அந்த முயற்சியில் எவ்வளவு தூரம் தாம் பக்கபலமாய் இருந்திருக்கிறார் என்பதையும் சிந்திக்க வேண்டும். எக்காரணம் பற்றியும் ஜனநாயக எதிரிகளுக்கும் வகுப்பு வாதிகளுக்கும் சிறிதும் இடமளிக்காது என்பதைச் சோஷலிஸ்டுகள் உறுதியாகக் கடைப் பிடித்தால்தான், அவர்களது மதிப்பு உயரும்; சக்தியும் பெருகும்.

7. எல்லாவற்றிற்கும் மேலாக, கட்சிக்குப் பொதுஜனத் தொடர்பைப் பெருக்குதற்கு வழி தேடவேண்டும். தொழிலாளர்களிடையிலும் விவசாயிகளிடையிலும் கூடச் சோஷலிஸ்டுகள் இன்னும் போதிய ஆதரவு பெறவில்லை. தீவிரமான பிரசாரமும் உத்ஸாகம் நிறைந்த இளைஞர்களின் கூட்டுறவும் இந்த வேலைக்கு இன்றியமையாதவை.

5. வருங் காலத்திலே...

சோஷலிஸ்ட் கட்சிகளுக்கு நாள் இன்னும் அதிகமாக ஒளிவிட்டுப் பிரகாசிக்கப் போகிறது என்பதில் துளிக்கூடச் சந்தேகமில்லை. ஏனெனில், நமது பாரதநாடு ஒருகாலும் பலாத்காரச் செயல் புரிவோரையும் வகுப்புவாதிகளையும் ஆதரிக்காது. ஆகையால், ஜனநாயகத்தில் பற்றுதலுடைய காங்கிரஸுக்கும் சோஷலிஸ்டுகளுக்கும்தான் நிலைத்த பொதுஜன ஆதரவு இருக்கும். இவை இரண்டிலும்கூட, சிறந்த பொருளாதார நிட்டமும் இளமையும் உடைய சோஷலிஸ்டுக் கட்சி முன்னேறுவதற்கு வசதிகள் அதிகமாக உள்ளன. ஆனால், அந்த வசதிகளைப் பயன்படுத்தித் தீவிரமாக வேலை செய்தாக வேண்டும்.

1. தெளிவான காரிய திட்டம். 2. அரசியல் வகுப்புகள் போன்ற ஏற்பாடுகள் மூலம் இளைஞர்களுக்குப் பயிற்சி. 3. பிரசாரத்தின் மூலம் பொதுஜனத் தொடர்பு. 4. ஆங்காங்கு சமூக நலன்களுக்கான வேலைகளில் பொது ஜனங்களுக்கு வழிகாட்டித் துணைபுரிதல். 5. ஜனநாயக சக்திகளுடன் தொடர்பு. 6. வகுப்புவாதத்துடன் இடைவிடாப் போர். 7. தொழிலாளர் இயக்கங்களை நன்முறையில் பாதுகாத்தல் — இவைகளே வருங்காலத்தில் கட்சியின் பலத்தைப் பெருக்கக் கூடியவை.

ரங்கூனில் ஆசிய சோஷலிஸ்டு மகாநாட்டுக்கு வந்த ஸ்ரீ ஆட்லி கூறினார் : "ஜவாஹருக்குப் பிறகு காங்கிரஸின் செல்வாக்கு குறையலாம்; ஆனால், ஆசியாவில் சோஷலிஸம் இனி உன்னத ஸ்தானத்தை எய்துவதை யாராலும் தடை செய்ய இயலாது" என்று. அவரது தீர்க்கதரிசனம் வீணாகி விடாதென்று நம்புவோமாக.

# வாழ்கிறார் திரு. வி. க.

ச. வான்மதி

தமிழ்த் தந்தை திரு. வி. க. அன்பை வளர்த்தார்; நற் பண்பை வளர்த்தார்; சமரசத்தை வளர்த்தார்; சன்மார்க்கத்தை வளர்த்தார்; சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், திருவள்ளுவத்தையே வளர்த்தார்!

எனக்கு இளமையிலேயே தமிழ்ப் பெரியார் திரு. வி. க. வின் நூல்களினிடத்து அளப்பரிய பற்று; பாசம்; காதல் எல்லாம் உண்டு. அவர் எனது தாத்தாவாகிய திரு. தி. மு. தெய்வசிகாமணி ஆச்சாரியாரவர்கள் இயற்றிய, "மேடைத் தமிழ்" என்னும் பெரும் நூலுக்கு வரைந்த அணிந்துரை இருக்கின்றதே அதை இதுவரை நான் ஆயிரந் தடவையாவது படித்துப் படித்துச் சுவைத்துச் சுவைத்து அனுபவித்திருப்பேன்!

இத்தகைய புலவர் திலகமும், தமிழ்த் தந்தையுமாகிய திரு. வி. க. வை நேரில் காண வேண்டும்; கண்டு அவரை வாழ்த்தி வணங்கல் வேண்டும்; அவர் தம் அறிவுரையை நேர்முகமாகப் பெறல் வேண்டுமென்ற அவா என் உள்ளத்தை அழுத்தமாகப் பற்றியது! இவ்வாறு என்னுள் திரண்ட வேட்கை என்னைப் பிடர் பிடித்துச் சிவகங்கையிலிருந்து சென்னைக்கு உந்தியது!

கடந்த மூன்றும் தைப் பொங்கலன்று, திரு. வி. க. வைக் கண்டு வாழ்த்துரை ஒன்று அவருக்கு வழங்க வேண்டுமென்று நினைத்தேன். நானே வாழ்த்துரை ஒன்று புனைந்து அதற்குக் கண்ணாடிச் சட்டம் போட்டுக் கொண்டிருக்கும் நேரத்தில் என் தாத்தா தி. மு. தெ. அவர்கள் தற்செயலாய்ப் பார்த்து விட்டார்.

"என்ன செய்கிறாய்?" என்று கேட்டார்.

நான் "இன்று பொங்கல்! தமிழர் திருநாள்! இந்நன்னாளில் தமிழ் வளர்த்த திரு. வி. க. அவர்களுக்குச் சிறியேன் நான் வாழ்த்துரை வழங்க எண்ணுகிறேன்! இது வரையிலும் திரு. வி. க. வை நேரில் கண்டதில்லை. இன்றுதான் பார்க்கப் போகிறேன்..." என்றேன். அவர் உடனே மகிழ்ச்சியுற்று நான் திரு. வி. க. அவர்களுக்கு நல்க எழுதிய வாழ்த்துரையைப் படித்தார்.

"சரி.........இன்று மாலை, ஐயாவைக் காணப் போகிறேன். நீயும் என்னுடன் வா, பார்க்கலாம்!" என்றார்.

அன்று மாலை நானும் என் தாத்தா அவர்களும் ராயப்பேட்டை சென்றோம். அங்கு "சாது அச்சக"த்தின் மேல் மாடியில் கண்டேன் திரு. வி. க. வை! தமிழ் வளர்த்த தந்தையைக் கண்டேன்! ஒழுக்கத்தின் சிகரத்தைக் கண்டேன்! எளிமையின் இருப்பிடத்தைக் கண்டேன்! இனிமையைக் கண்டேன்.

திரு. வி. க. அப்பொழுது படுக்கையில் படுத்திருந்தார். தாத்தா தி. மு. தெ. அவர்கள் "அய்யா...வணக்கம்" என்றார். திரு. வி. க. அவர்களின் கண் ஒளி மங்கியிருந்த காலமது. ஆதலின் குரல் ஒலியால் இன்னாரெனத் தெரிந்து, "யார் ஆச்சாரியாரா? வாருங்கள்! உட்காருங்கள்!" என்றார். நானும், "ஐயா... வணக்கம்" என்றேன். திரு. வி. க. "வாருங்கள்" என்று கூறிவிட்டு நான் புதியவனானமையால் "யார்......அது?" என்று என் தாத்தாவை நோக்கிக் கேட்டார்.

"என்னுடைய பேரன். என் மகளின் மைந்தன். சிவகங்கையிலிருந்து உங்களைத் தரிசிக்க வேண்டுமென்று ஆவலுடன் வந்திருக்கிறான்" என்று கூறினார்!

உடனே திரு. வி. க. அவர்கள் உவகையுடன், "அப்படியா! வாருங்கள் தம்பி! இப்படி வந்து உட்காருங்கள்..." என்று தம் அருகே அழைத்து அமரச் செய்தார்.

திரு. வி. க. வைக் கண்டதும் நான் உணர்ச்சி வெள்ளத்தில் நீந்தினேன்!

அன்பு பெருக்கெடுத்தது! அவரது கரங்களைப் பற்றினேன்; கண்களில் ஒற்றினேன்!

"ஐயா, இன்று என் வாழ்விலோர் திருநாள்! உங்களைக் கண்டு வணங்க வேண்டுமென்று நீண்ட நாளாக ஆசை! இன்றுதான் நிறைவேறிற்று" என்று கூறி நான் கையிற் கொண்டு போயிருந்த மலர் மாலையை திரு. வி. க. அவர்களுக்குச் சூட்டி வாழ்த்துரைகளைப் படித்து அவர் கையில் கொடுத்தேன். திரு. வி. க. அவர்கள் கருணை உள்ளத்துடன் கனிவு பொங்கப் படுக்கையிலிருந்து எழுந்திருந்து, நான் தந்த கண்ணாடிச் சட்டமிட்ட வாழ்த்துரைகளை ஏற்றுக் கொண்டார்கள்.

"தம்பி! ஏன் சிரமம்? உள்ளத்தில் அன்பிருந்தால் போதாதா? கண்ணாடிச் சட்டம், மலர் மாலை இவைகளெல்லாம் எதற்கு?" என்று கூறினார்.

அன்றிலிருந்து நாள் தோறும் தவறாமல் நான் திரு. வி. க. வின் இல்லம் செல்வேன். திரு. வி. க. அவர்களின் அரிய பெரிய விரிவுரைகளைக் கேட்பேன். திரு. வி. க. எனக்குத் தந்த அறிவுரைகள் தனிப்பட்ட எனக்கு மட்டுமல்ல இளைஞர் உலகிற்கே பயனும் பலனும் தரத்தக்கவை. அவற்றைத் தொகுத்து எழுதினால் பெரியதோர் நூலாகும். இவைகள் இன்னும் என் செவிகளில் ஒலித்த வண்ணம் இருக்கின்றன.

திரு. வி. க. இறந்து விட்டாரா? இல்லை! அவர் வாழ்கிறார்! அவர் எழுதிய "இறவாத புகழுடைய நூல்களின்" மூலமாக வாழ்கிறார். கோடிக் கணக்கான தமிழர்களுக்கு அறிவுரையும், ஆக்கல் வேலைத் திட்டங்களும் அன்புடன் கூறிக் கொண்டிருக்கிறார்!

வாழ்க திரு. வி. க! வளர்க தமிழ்!

# இப்பொழுதே மலேரியாவை அகற்றுங்கள்

## நிச்சயமாக! ஆபத்தில்லாமல்! குறைந்த சிலவில்!

# 'பாலுட்ரின்'

## மலேரியாவை வீழ்த்துகிறது

**மலேரியாவின் சின்னங்களைத் தெரிந்துகொள்ளுங்கள்**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்த்து வலி உண்டாகும். இந்த அறிகுறிகள் ஏற்பட்டால் உடனேயே டாக்டரைப் பாருங்கள்.

**மலேரியா கொல்லக்கூடியது**

ICP 179

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு டம்ளர் தண்ணீருடன் உட்கொள்ளுங்கள்.

வயதுவந்தவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும்: ஒரு மாத்திரை
6 லிருந்து 12 வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு: அரை மாத்திரை
6 வயதுக்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு: கால் மாத்திரை




தினந்தோறும் ஜுரம் குணம் அடையும் வரை கொடுக்கவும்.

# மைதிலி

புஷ்யன்

பங்களா வாசற்படியில் நின்று கொண்டு வலது பக்கத்தில் இருந்த கேட்டையே ஆவலுடன் நோக்கிக் கொண்டிருந்தாள் மைதிலி. தெருவில் போகும் கார்களைப் பார்க்கும் போதெல்லாம் இதோ வந்து விட்டார் என்று எண்ணிக் களித்தபோது அவைகள் திரும்பாமல் நேரே வேகமாய்ப் போய் விட்டதைக் கண்டதும் அவள் பெருமூச் செறிந்தாள்.

"அம்மா! இன்னும் எஜமான் வரவில்லையா! நீங்கள் வேண்டுமானால் சாப்பிடுங்களேன்......" என்று கூறினான் பரிசாரகன்.

"அவர் வரட்டும். அப்புறமே சாப்பிடுகிறேன்......" என்றாள் மைதிலி.

"க்ரீங், க்ரீங்" என்று ஊதிக்கொண்டு அவள் எதிர்பார்த்த கார் வந்து விட்டது. கம்பீரமாக அது கேட்டில் நுழைவதைக் கண்டதும் அவளுக்கு மிகவும் சந்தோஷம் உண்டாயிற்று.

காரிலிருந்து இறங்கி வந்தான் ஜகந்நாதன்.

"சங்கரா! எஜமான் வந்து விட்டார். இலையைப் போடு!" என்று உள் பக்கம் திரும்பிக் கூறி விட்டு ஜகந்நாதன் வருவதைப் பார்த்தாள்.

அவன் வீட்டுக்குள் நுழைந்ததும் அவன் பின்னால் சென்றவாறே, "ஏன் இத்தனை நேரம்...! மணி எட்டரை ஆகிவிட்டதே...எங்கே போயிருந்தீர்கள்! மாலை ஆறு மணியிலிருந்து உங்களை எதிர்பார்த்துப் பார்த்துக் கால் கடுத்து விட்டது. கண் பூத்து விட்டது!" என்றாள் மைதிலி.

ஜகந்நாதன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. உள்ளே போய்ச் சோபாவில் உட்கார்ந்தான்.

"ஊம், ஏன் நான் கேட்டதற்குப் பதிலே சொல்லவில்லை! ஏன் இத்தனை நேரம்!" என்று மீண்டும் கேட்டாள் மைதிலி.

"என்னமோ வேலை இருந்தது!" என்று அசுவாரசியமாகச் சொன்னான் ஜகந்நாதன்.

"என்ன, அவ்வளவு தலைபோகிற வேலை! இன்று உங்களுடன் சினிமாவுக்குப் போகலாம் என்று தயாராய் இருந்தேன். இப்படி ஏமாற்றி விட்டீர்களே, என்னதான் அவ்வளவு முக்கியமான வேலை, சொல்லுங்களேன்!"

அவளுடைய தொண தொணப்பை அவனால் சகிக்க முடியவில்லை. "என்னமோ வேலை இருந்தது. அதையெல்லாம் உன்னிடம் சொல்லிக் கொண்டிருக்கணுமா என்ன!"

"ஏன்! சொல்லத்தான் வேண்டும். நான் தெரிந்து கொள்ள வேண்டாமா!" என்றாள்.

"நீ தெரிந்து கொண்டு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. வெளியில் போனால் எவ்வளவோ காரியங்கள் இருக்கும். அதையெல்லாம் ஒவ்வொன்றையும் உன்னிடம் விவரித்துக் கொண்டிருக்க முடியுமா என்ன!" என்றான் ஜகந்நாதன்.

"என்னென்னமோ என்றால் என்ன அர்த்தம்! மனைவி என்ற உரிமையில் உங்கள் நடவடிக்கைகளில் எனக்கும் அக்கறை உண்டல்லவா! அதனால் தெரிந்து கொள்ள வேண்டியதுதானே!" என்றாள்.

"என் நடவடிக்கைக்கு இப்போது ஒன்றும் கேடு வந்து விடவில்லை" என்றான் ஜகந்நாதன்.

"அடிக்கடி நீங்கள் இப்போதெல்லாம் நேரம் கழித்து வருகிறீர்கள். நான் எவ்வளவு வேதனையுடன் நீங்கள் வரும்வரை காலம் கழிக்கிறேன் தெரியுமா! திடீரென்று உங்கள் போக்கு ஏதோ மாற்றமடைந்திருக்கிறது. என்னைக் கண்டால் உங்களுக்குப் பிடிக்கவில்லைபோல் நடந்து கொள்கிறீர்கள்!" என்று கூறி விசும்ப ஆரம்பித்தாள்.

"ஆரம்பித்து விட்டாயா உன் அழுகைப் புராணத்தை... என் பிராணனை எடுப்பது என்று தீர்மானித்து விட்டாயா! நடுத்தெருவில் நிற்க வேண்டிய உன்னை வீட்டுக்குள் அழைத்து வந்தால் உனக்கு ஏன் மண்டைக் கர்வம் ஏறாது! நீ கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லுவதற்கு இங்கு யாரும் காத்துக் கொண்டிருக்கவில்லை!" என்று கத்தினான் ஜகந்நாதன்.

அவன் பேச்சைக் கேட்டு மைதிலி வெருண்டாள். மேலே பேச முடியாமல் திகைத்தாள்.

## 2

ஜகந்நாதன் பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன். லக்ஷக் கணக்கில் சொத்து இருந்தது. சென்னையில் நான்கு கம்பெனிகள் வைத்து நானாவிதமான வியாபாரத்தில் இறங்கியிருந்தான் அவன். அதில் நிறைய லாபம் வந்து குவிந்து கொண்டிருந்தது. அவன் ஏகாங்கி. அவனுடைய தாயாரும் தகப்பனாரும் அவனுடைய இருபதாவது வயதிலேயே இறந்து விட்டார்கள்.

அவன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது கல்லூரியின் சங்கக் கூட்டத்தில் ஒருநாள் வரதட்சணைக் கொடுமையைப் பற்றி விவாதம் எழுந்தது. அதில் ஜகந்நாதன் பங்கெடுத்துக் கொண்டு தீவிரமாகப் பேசினான். 'வரதட்சணைக் கொடுமை ஒழியவேண்டும். அதனால் ஏழைகள் பெண்களுக்கு விவாகம் செய்து வைக்க முடியாமல் திண்டாடுகிறார்கள். பணக்காரர்கள் ஏழைமை நிலையில் உள்ள பெண்களை விவாகம் செய்து கொள்ளவேண்டும். பணக்காரர்கள் ஒரு காரியம் செய்தால் உடனே மற்றவர்கள் பின்பற்றுவார்கள். அதற்கு உதாரணமாக நான் ஒரு ஏழையின் பெண்ணையே மணந்து கொள்கிறேன்" என்று கூறினான். அத்துடன் கறுப்பான பெண்ணைக்கூட கல்யாணம் செய்து கொள்ளத் தயார் என்று கூறினான். அவன் பேச்சைக் கேட்டு மாணவர்கள் கரகோஷம் செய்தனர். அவன் வீரன்போல் மேடையை விட்டு வந்தான்.

அன்று முதல் அவனுடைய உள்ளத்திலே இந்த எண்ணமே குடிகொண்டிருந்தது. யாருமே மணம் செய்து கொள்ள விரும்பாத ஏழைமையிலும் ஏழைமையான ஒரு பெண்ணை, கறுப்பானவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று தீவிரமான எண்ணங் கொண்டான். ஒரு உதாரண புருஷனாய், லட்சிய வீரனாய் விளங்க வேண்டுமென்று பெரும் ஆசை கொண்டான்.

அவனுடைய பெற்றோர்கள் அவனுக்கு இருபது வயது நடக்கும்போதே இறந்து விட்டனர். அவனுடைய இஷ்டப்படி விவாகம் செய்து கொள்வதைத் தடுப்பவர் யாருமில்லாமல் போகவே அவன் தன் கொள்கைப்படி மிகவும் ஏழையான ஒரு பெண்ணை, யாரும் எளிதில் மணக்கத் துணியாத ஒரு பெண்ணை அவன் தேடினான்.

அவன் வேண்டுகோளைக் கேட்டுத் திருவாளர் ஜகதீசன் பிரமித்தார். தனக்கு இப்பேர்ப்பட்ட பணக்கார மாப்பிள்ளை வருவான் என்று கனவில் கூட அவர் எதிர்பார்க்கவில்லை.

"மைதிலியையா கல்யாணம் செய்து கொள்கிறேன் என்கிறீர்கள்!" என்றார்.

"ஆமாம்; அதில் உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபணை யில்லையே,......" என்றான் ஜகந்நாதன்.



"நீங்கள் போன மாதம் அனுப்பிய சமையற்காரன் ரொம்ப மோசம், ஸார்!"

"நீங்கள் அவன் தோற்றத்தைக் கண்டு முடிவு கட்டிவிடக் கூடாது, ஸார்!"

"இல்லை, இல்லை! அவன் தோற்றத்தைக் கண்டு நான் இந்த முடிவுக்கு வர வில்லை. அவனது நிடீர் மறைவைக் கண்டுதான் இந்த முடிவுக்கு வந்தேன்."

"ஆட்சேபணையா! இந்த அதிர்ஷ்டம் கிடைக்க நான் என்ன பாக்கியம் செய்தேன்! மைதிலி கறுப்பாய் இருக்கிறாளே தவிர மிகவும் கெட்டிக் காரி. எல்லா வேலைகளையும் சுறு சுறுப்பாய்ச் செய்வாள். எஸ். எஸ். எல். ஸி. வரை படிக்க வைத்திருக்கிறேன். வரன் ஒன்றும் கிடைக்கவில்லையானால் அவள் ஏதாவது உத்தியோகமாவது தேடிக் கொள்ள முடியும்படி இருக்கட்டும் என்றுதான் நினைத்தேன். அவளுக்கு இவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் காத்திருக்கிறது என்று யார் எதிர் பார்த்திருக்க முடியும்!" என்றார்.

மைதிலி ஜகந்நாதனின் மனைவியானாள். மைதிலிக்கு ஏற்பட்ட மனச் சந்தோஷத்தைப் பற்றி வர்ணிக்கவே முடியாது.

அவனுடைய பங்களாவுக்குள் காலடி யெடுத்து வைத்ததும் அவளுக்கு ஒரே பிரமிப்பாய்ப் போய் விட்டது. எத்தனை பெரிய பங்களா! எவ்வளவு சோபாக்கள், பங்களாவைச் சுற்றிலும் அரை பர்லாங்குக்குக் காம்பவுண்டு. உள்ளே நானாவித மரங்கள், புஷ்பச் செடிகள். இத்தனைக்கும்தான் எஜமானி என்பதை நினைக்கும்போது அவளுக்கு உண்டான பெருமை அளவு கடந்ததாக இருந்தது.

தன்னை மனமுவந்து விவாகம் செய்து கொண்ட ஜகந்நாதனை நினைத்தபோது அவனிடம் அவளுக்குப் பெருமதிப்பு உண்டாயிற்று தன்னை ஆண்டு கொண்ட தெய்வமாகப் பாவித்தாள்.

மைதிலியை அவன் வெறும் கல்யாணம் செய்து கொள்ளவில்லை. தன் அன்பை யெல்லாம் அவள் மீது சொரிந்தான். சாயந்திரம் அவளைக் காரில் அழைத்துக் கொண்டு கடற்கரைக்குப் போவான். இருவரும் அலைகளினருகே உட்கார்ந்து ஆனந்தமாகப் பொழுதைப் போக்குவார்கள்.

கல்யாணமானதும் நண்பர்களுக்கெல்லாம் விருந்து வைத்தான். எல்லோருக்கும் மைதிலியை அறிமுகம் செய்து வைத்தான். அங்கு வந்திருந்த நண்பர்கள், அவர்களுடைய மனைவிமார்கள் பெண்கள் எல்லோரும் மிக அழகாக இருப்பதைக் கண்டதும் அவளுக்கு மிகவும் கூச்சமாக இருந்தது. ஆனால் அவளுடன் அன்புடன் பேசிப் பழகியதைக் கண்டதும் அவளுக்கு ஒரு ஆறுதலாயிருந்தது.

"உம், எல்லாம் பணம் செய்யும் காரியம். இன்றைக்கு நான் இவ்வளவு பணக்காரியாக இல்லாவிட்டால் இவர்கள் எல்லோரும் இத்தனை அன்புடன் பழகுவார்களா!" என்று எண்ணினாள். அவளுடைய இல்லற வாழ்க்கை இன்பமாகக் கழிந்து கொண்டிருந்தது.

3

ஒரு நாள் ஜகந்நாதன் சாயந்திரம் தன் வேலைகளை முடித்துக் கொண்டு வந்ததும் சிற்றுண்டி அருந்தி விட்டு வெளியில் புறப்பட்டான். மைதிலியும் எப்போதும்போல் தன்னை அலங்கரித்துக் கொண்டு அவனுடன் வெளியில் போக அவளும் பின்னால் கிளம்பினாள். அவள் வருவதை யறிந்த ஜகந்நாதன் பின்னால் திரும்பி, "மைதிலி, இன்று கொஞ்சம் அவசர வேலை இருக்கிறது. நீ வேண்டுமானால் இன்னொரு காரை எடுத்துக் கொண்டு கடற்கரைக்குப் போய் விட்டு வா..." என்றான்.

மைதிலிக்குச் சிறிது ஏமாற்றமாக இருந்தாலும் அதைச் சகஜமாக எடுத்துக் கொண்டு திரும்பி விட்டாள். ஜகந்நாதன் இல்லாமல் தனியாக அவளுக்குக் கடற்கரைக்குப் போகப் பிடிக்கவில்லை.

அடுத்த நாளும் அவனுக்கு வேலை அதிகமாய் இருக்கிறதென்று தனியே போய் விட்டான். அவளுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. ஜகந்நாதன் அடிக்கடி வீட்டுக்கு நேரம் கழித்து வர ஆரம்பித்தான். ஏழு மணி, எட்டு மணி என்று இஷ்டம் போல் வந்தான். வீட்டுக்கே வரப் பிடிக்காதவன் போல் நடந்து கொண்டான்.

மைதிலிக்கு நாளுக்கு நாள் கவலை அதிகரித்து வந்தது. ஏன் இப்படித் திடீரென்று மாறி விட்டார் என்று தெரியாமல் தவித்தாள். அவள் அவனைக் கேட்ட கேள்விகளுக்கு அவன் சரியாகப் பதில் கொடுக்காமல் வந்தது அவளுக்கு ஏதேதோ சந்தேகத்தை உண்டாக்கிற்று. அவள் தனியாக அத்தனை பெரிய பங்களாவில் உட்கார்ந்து உள்ளம் குமுறிக் குமுறி அழுதாள். வேதனையால் மடியலானாள். அவன் அவளை நாளுக்கு நாள் அலட்சியம் செய்து வருவதைக் கண்டு அவள் மனம் சொல்லொணாத வேதனை யடைந்தது. அதை அவளால் சகிக்க முடியவில்லை.

அன்றும் அவன் வர நேரமாகியதைக் கண்டதும் அவள் மனம் கொதித்தது. இன்று வந்ததும் எப்படியும் அவனைக் கேட்டே தீர்த்து விடுவது என்று தீர்மானம் செய்திருந்தாள். அதன்படியே அவன் வந்ததும் அவள் விடாப் பிடியாய் அவனைக் கேட்டாள், ஏன் அவ்வளவு நேரம் கழித்து வந்தான் என்று. அப்படிக் கேட்டதன் பலனைத் தான் அவள் அனுபவித்தாள்.

** ** **

ஜகந்நாதன் எங்கே போகிறோம் என்று தெரியாமல் காரை ஓட்டிக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். அவன் மனத்தில் பலவிதமான உணர்ச்சிகள் பரவி ஓடிக் கொண்டிருந்தன. அவனுக்கு மைதிலியைப் பற்றி நினைக்கும்போது மகா வெறுப்பு உண்டாகியது.

கார் கடற்கரையோரமாய்ப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தான். பாதை ஓரமாகக் காரை நிறுத்திவிட்டு மணலில் நடந்து சென்று ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"முன் பின் யோசியாமல் ஏதோ வெறியில் ஒன்றைச் செய்து விட்டு இப்போது அவதிப்படுகிறோம்!" என்று நினைத்தான்.

பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த போது, ஏதோ இளமை வெறியில் வாழ்க்கையின் முழு அர்த்தத்தையும் உணராது, மற்ற சக மாணவர்களிடமிருந்து பெருமையடைய வேண்டு

மென்ற எண்ணத்துடன், வீராவேசத்துடன் ஏதோ ஒன்றைக் கூறிவிட்டு அதைத் தன் வாழ்விலும் விடாப் பிடியாய்ச் செய்ய முற்பட்டு அதேபோல் ஒரு கறுப்பானவளை மணந்து கொண்டது பெரிய முட்டாள்தனம் என்ற எண்ணத்துக்கு இப்போது அவன் வந்திருந்தான்.

மைதிலியை மணந்தபோது அவனுக்கு எவ்விதமான மனக் கவலையும் இல்லை. அவனுக்கு மிகவும் பெருமையாக இருந்தது. தன் உதார குணத்தைப் பரந்த நோக்கத்தை எல்லோரும் போற்றுவார்கள் என்ற எண்ணத்திலேயே மூழ்கி யிருந்தான். யாரும் எளிதில் செய்யாத. செய்யத் துணியாத ஒரு காரியத்தைத் தான் செய்து விட்டது குறித்து ஒரு வீரமான காரியத்தைச் செய்துவிட்டதாக எண்ணி மகிழ்ந்தான். அவன் எதிர்பார்த்த படியே அவனுடைய நண்பர்கள் எல்லோரும் அவனுடைய தைரியத்தை, பெரு நோக்கத்தைப் போற்றினர். புகழ்ந்து பேசினர்.

தான் எங்கு சென்றாலும் மைதிலியைப் பெருமையுடன் அழைத்துச் சென்றான்.

'' என் மைதிலியின் குணத்துக்கும், அன்புக்கும் எவ்வளவு அழகுதான் ஈடாக முடியும்!'' என்று எண்ணினான். அவன் மனத்தில் அவள் ஒரு சிறந்த அழகியாய்த்தான் திகழ்ந்தாள். அவளை அவன் தன் முழு மனதுடன் நேசித்தான். அவளுக்கு எவ்விதக் குறைவும் உண்டாகாதவாறு பார்த்துக் கொண்டான். தான் தன் கணவனுக்கு ஈடு இல்லை என்ற தாழ்வு உணர்ச்சி அவளிடம் ஏற்படாதவாறு அவன் நடந்து கொண்டான்.

ஆனால் நாளடைவில் அவனுக்கு மனத்தில் ஏதோ ஒரு குறை இருப்பதுபோல் தோன்றியது. நண்பர்களுடைய புகழ் ஸ்தோத்திரங்கள் எல்லாம் மறைந்து பழங்கதைகளாகி அவன் வாழ்க்கை ஒரு சாதாரணமானதாகப் பழகிப் போய்விட்டபோது அவனுக்கு வாழ்க்கையில் ஏதோ ஓர் கசப்பு உண்டாயிற்று. தான் இத்தனை நாட்கள் மைதிலியுடன் வாழ்ந்து வந்தது எல்லாம் ஏதோ ஒரு வேகத்துடன் நடந்தது போல் அவனுக்குத் தோன்றியது.

நினைக்க நினைக்க அவனுக்கு மைதிலியின் மேல் ஆழ்ந்த வெறுப்பு உண்டாயிற்று. தன் செய்கையின் மேல் உண்டான கோபம் அவள் மேல் பாய்ந்தது. அவளை மனதால் நினைக்கவும் அவன் வெறுத்தான். அவளைப் பார்க்கவே அவனுக்குப் பிடிக்கவில்லை. இத்தனை நாட்கள் அவளுடைய பேச்சுக்களை மகிழ்ந்து கேட்டுக் கொண் டிருந்தவனுக்கு இப்போது அவள் ஏதாவது ஒரு வார்த்தை பேசினாலும் கர்ண கடூரமாய், நாராசமாய்த் தொனித்தது. அவன் அதனால் வீட்டுக்கு வரவே கசந்தான். இரவில் நேரம் கழித்து வரத் தலைப்பட்டான்.

அவன் மைதிலியைக் கல்யாணம் செய்து கொண்டது அவளுக்கு ஒரு பெரிய நன்மை செய்து விட்டதாக எண்ணி அதற்காக அவள் எப்படி நடந்துகொண்டாலும் அவன் அதைப் பற்றி ஒன்றும் கேட்க உரிமையில்லையென்றும், அவனுக்கு எல்லா விதத்திலும் அடங்கி நடக்கக் கடமைப் பட்டவள் என்றும் எண்ணலானான்.

அவன் எங்கே போகிறான், ஏன் நேரம் கழித்து வருகிறான் என்றெல்லாம் அவளுக்குக் கேட்க அருகதையில்லை என்று நினைத்தான். அவள் அவ்விதம் கேட்கவும் மாட்டாள் என்றுதான் எண்ணினான். இத்தனை நாட்கள் அவளுடன் கொஞ்சிக் குலவி வாழ்ந்ததே அவள் யோக்கியதைக்கு அதிகம் என்றும் எண்ணங்கொண்டான்.

மைதிலியும் முதலில் அவனை ஒன்றும் கேட்கவில்லை. ஆனால் அவன் தினப்படி சரியாக வேளைக்கு வீட்டுக்கு வராமற் போகவே அவள் அவனை வற்புறுத்திக் கேட்க ஆரம்பித்தாள். அதைக் கண்டு அவனுக்குக் கோபம் உண்டாகியது.

சிந்தனைகளை அடக்கிச் சிறிது நேரம் கடலின் ஆரவாரத்தையே நோக்கிக் கொண்டிருந்தான். பௌர்ணமி நிலவு வானத்தின் உச்சியில் நின்று பிரகாசித்துக் கொண்டிருந்தது.

ஜகந்நாதன் மனம் கொஞ்சம் பாரம் குறைந்தாற்போல் இருந்தது. '' சே, இதைப் போய் பிரமாதமாய் ஏன் எண்ணிக் கொண்டிருக்கிறேன்! என்னமோ, அவள் கேட்டாள். நான் அவளைப் போய் ஒரு பொருட்டாக எண்ணி என் மனத்தை அலைக்கழித்துக் கொண்டிருக்கிறேனே! என்ன மதியீனம்! முன்பின் யோசியாமல் அவளைக் கல்யாணம் செய்து கொண்டாய் விட்டது. இனி அதற்காக நொந்து பலன் என்ன! அவள் பாட்டுக்கு ஒரு மூலையில் இருந்து போகிறாள்'' என்று அதை இலேசாக எடுத்துக் கொண்டான்.

## 4

வெகு நேரம் கழித்து வீட்டுக்குத் திரும்பி வந்த ஜகந்நாதன் நேரே தன் அறைக்குப் போய்ப் படுத்துக் கொண்டான். காலையில் விழித்தெழுந்ததும் மேஜையருகே சென்றதும் அதன்மேல்



தியாகராய நகர் ஸ்ரீ சாரதா உயர்தர எலிமெண்டரி பாடசாலையில் செப்டம்பர் 19உ யன்று கவியரசர் பாரதி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். இந்த விழாவுக்கு ராஜாஜி தலைமை தாங்கினார். தலைமை தாங்கிய ராஜாஜி அவர்களையும் சாரதா பாடசாலையைச் சேர்ந்தவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

தன் பெயருக்கு ஒரு கவர் இருந்ததைக் கண்டதும் அதை அவசர அவசரமாகப் பிரித்தான். அது அவனுடைய மனைவி எழுதியது என்பதைக் கவரின்மேல் இருந்த எழுத்தைக் கண்டதுமே அவன் அறிந்து கொண்டதால் திகிலுடன் படித்தான்.

அன்புடைய கணவருக்கு,

நமஸ்காரம். என்னுடைய அழகுக்கும், ஏழைமை நிலைக்கும் நான் என்றும் இத்தனை பணம் படைத்த இடத்தில் வாழ்க்கைப்படுவேன் என்றோ, தங்களைப் போன்ற அழகு படைத்த கணவர் வாய்ப்பார் என்றோ கனவிலும் கருதவில்லை. என் தகப்பனார் ஏதோ தம்மாலியன்றவரை என்னைப் படிக்க வைத்தார். அதை வைத்துக் கொண்டு ஒரு உபாத்தியாயினியாக என் வாழ்நாளைக் கழித்துவிட முடியும் என்று எண்ணி வந்தேன்.

ஆனால் ஓரொரு சமயம் நாம் எதிர்பார்க்காத அதிசயங்கள் எல்லாம் நடப்பதில்லையா!

அன்று நீங்கள் எங்கள் வீட்டுக்கு வந்து என் தகப்பனாரிடம் உங்கள் எண்ணத்தைத் தெரிவித்தபோது நான் சமையலறைக் கதவுக்குப் பின் நின்று கொண்டு கேட்டுக் கொண்டிருந்தேன். எனக்கு அது கனவா என்ற பிரமை உண்டாயிற்று. என்னை மணக்க ஒரு பணம் படைத்த செல்வவந்தரா! அதுவும் தாமரை மலர்போன்ற அழகு வாய்ந்த ஒருவரா! என்று பிரமித்தேன். அதுவும் தானே வலிய வந்து, மனமுவந்து கல்யாணம் செய்துகொள்ள வந்திருக்கிறாரா! இது கலியுகத்திலா நடக்கிறது! என்று அதிசயித்தேன்.

என்னை மணந்ததும் தாங்கள் என்மீது காட்டிய அன்பைக் கண்டு நான் அதிசயித்தேன். உங்கள் அன்பு வெள்ளத்தில் திக்கு முக்காடித் திணறினேன். இவ்வளவு அன்புடன் என்னைக்கூட ஒருவரால் நேசிக்க முடிகிறதே என்பதைக் கண்டு பேராச்சரியமடைந்தேன்.

தாங்கள் என்மீது காட்டிய அன்புக்கும் ஆதரவுக்கும் நான் எவ்வளவு நன்றியுடையவளாயிருக்கிறேன் என்பதைக் கூற வார்த்தைகளே இல்லை.

நம் வாழ்க்கை எல்லோரைப் போலவே எப்போதும் இனிதாய்ப் போய்க் கொண்டிருக்கும் என்றே நம்பி வந்தேன். ஆனால் நாளடைவில் தங்களிடம் மாறுதலைக் கண்டேன். நீங்கள் முன்போல் இல்லாமல், என்னுடன் சாதாரணமாகப் பேசக்கூட விரும்பவில்லை. நான் ஏதாவது கேட்டால் அசுவாரசியமாய்ப் பதிலளித்தீர்கள். அல்லது பதிலே கூறாமல் அலட்சியமாயிருந்தீர்கள். முதலில் ஏதாவது வேலைத் தொந்தரவால் சோர்வுற்றிருப்பீர்கள் என்று எண்ணினேன். ஆனால் என் உள்மனம் – நம் இருவருக்கும் இருந்த உருவ வேறுபாட்டின் காரணத்தால் – உங்களுக்கு என்மேல் வெறுப்பு ஏற்பட்டு விட்டதோ என்று சந்தேகித்தது. நீங்கள் தொடர்ந்து என்னை அலட்சியப் படுத்தி நடந்து கொண்டது என் சந்தேகத்தை வளர்த்தது. நான் உங்களுடைய அன்பைப் படிப்படியாக இழந்து வருகிறேன். என்மேல் உங்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக வெறுப்பு அதிகமாகிக் கொண்டு வருகிறதென்று உணர்ந்தேன். என் மனம் எவ்வளவு பாடுபட்டிருக்கும் என்பதை உங்களால் உணர முடியாது.

நீங்கள் இத்தனை காலமாய், ஐந்து வருடங்களாய் என்னை முழுமனதுடன் நேசித்தீர்கள். அதில் எனக்கு லவலேசமும் சந்தேகம் இல்லை. உங்களை ஒரு அசாதாரணமானவர், லட்சிய புருஷர் என்று எண்ணிப் பெருமிதம் கொண்டிருந்தேன். ஆனால் இன்று அது கனவாகி விட்டது.

அன்று உங்களை மணந்தபோது முதலில் கனவு என்று எண்ணியதை, இல்லை, கனவு என்று நினைத்து மகிழ்ந்தேன். ஆனால் இன்றுதான் அது ஒரு கனவு என்று தெளிவாகத் தெரிகிறது.

நான் கறுப்புதான். ஏழைதான். ஆனால் எனக்கும் இதயம், ஆசை, அன்பு, சுயகௌரவம் உண்டு. அவலட்சணம், ஏழை என்பதால் அவைகளை இழந்துவிட முடியாது. உங்கள் அன்பை முழுதும் பெற்றுவிட்டு இப்போது உங்களாலேயே வெறுக்கப்பட்டு ஒதுக்கப்படுவதை என்னால் தாள முடியவில்லை. எப்போது என்னை மனைவியாக ஏற்றுக் கொண்டீர்களோ, அப்போது முதல் எனக்கு எல்லா விதங்களிலும் உங்கள்மேல் உரிமை உண்டு. உங்கள் நடவடிக்கைகளில் அக்கறை கொள்ளக் கடமைப் பட்டவள். அதை நீங்கள்

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

## எங்கள் நிலைமை மாறுமா?

நீங்கள் எழுதிய "தெற்கே புயல் வீசுகிறது" என்ற தலையங்கத்தைப் பன்முறை படித்தோம். தாங்கள் எழுதியதுபோல் கடந்த ஒரு வாரமாக இங்கே புயல் வீசிக்கொண்டு தான் இருந்தது; வீசிக் கொண்டும் இருக்கிறது.

கடந்த ஒன்றரை வருட காலமாக, காங்கிரஸ் மந்திரி சபை திருவிதாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸின் ஆதரவில் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருந்தது. தனிப் பெரும் தலைவர் நேருஜியைத் தலைவராகக் கொண்ட காங்கிரஸ்தான் நாட்டை ஆள வேண்டும் என்ற எண்ணத்துடன் தன்னுடைய ஒத்துழைப்பை நல்க முன் வந்தது. ஒன்றரை வருட காலமாகத் துணையாக நின்றது. ஆனால் இன்று ஒத்துழைப்பை நிறுத்திவிடக் காரணம், தமிழர்களுக்கு நியாயம் கிடைக்கவில்லை என்பதனால்தான்.

தி. கொ. தமிழர்கள், தங்கள் உரிமைகளை அடைய ஆக்க வேலையேயன்றி, அழிவு வேலைகள் செய்ய முன் வந்தது இல்லை. ஆனால் தூது சென்று எங்கள் குறைகளை முறையிட்டோம். இங்ஙனம், கெஞ்சிக் கேட்கக் கேட்க, ஆட்சியாளரிடமிருந்து எங்கள் குரலுக்குச் சரியான பதில் கிடைக்கவில்லை. மாற்றாந்தாய் குழந்தைகளாகவே நாங்கள் இருந்து வருகிறோம். இங்ஙனம் அவதிப்படும் எங்கள் குறைகளைத் தமிழ் மந்திரியும், மற்றப் பிரதிநிதிகளும், குறிப்பாக சோஷலிஸத் தலைவர் திரு. டி. எஸ். ராமசாமியும் சட்டசபையில் பன்முறை எடுத்துக் கூறியும் பலன் இதுவரையும் கண்டிலோம். நாங்கள் இந்நாட்டின் தமிழர்களாகப் பிறந்ததினாலோ, அல்லது சென்னையுடன் சேர்ந்து விடுவோம் என்ற அச்சத்தினாலோ, எங்களைப் புறக்கணித்து வருகிறார்கள். தமிழர்களாகிய நாங்கள் கேட்ட எந்த நியாயமான கோரிக்கைகளுக்காவது மந்திரிகள் செவி சாய்த்தது உண்டா என இங்குள்ள மக்களிடம் கேட்டால் விளங்கும். ஆகவே, நன்கு யோசித்த பின்னர்தான், தமிழ்நாடு காங்கிரஸ் பிரதிநிதிகள் தங்கள் ஒத்துழைப்பை நிறுத்திக் கொண்டார்கள். இதனால் மந்திரி சபையும் கவிழ்ந்தது.

இதிலிருந்து எழும் உண்மை யாதெனில் தி. கொ. வில் 15 லட்சம் எண்ணிக்கை கொண்ட தமிழர்களை ஒதுக்கியோ, புறக்கணித்தோ நிர்வாகம் நடத்த முடியாது என்பது தெளிவாகிறது. இதை எந்தக் கட்சி பதவிக்கு வந்தாலும் அறிந்து கொள்ளவேண்டியது அவசியம். வாழ்க தமிழ்நாடு!

திருவனந்தபுரம்
26—9—53

கோ. நாறு
மா. நா. பெருமாள்

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇







# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ் : ௨,௬.சமபுதாஸ் தெரு, மதராஸ்-1

போன்: 55556 | தபால் பெட்டி நெ. 1395 | தந்தி: KALLIFUNDS

## எங்கள் அக்டோபர் மாத சீட்டு வரிசை

பிற்காலத்திற்குச் சீராக சேமியுங்கள்

30 மாதங்கள் — 30 சந்தாதாரர்கள்

3-வது ஞாயிறு ஏலங்கள்

சந்தா செலுத்த கடைசி தேதி 15-10-53 } உடனே
முதல் ஏலத் தேதி ... 18-10-53 } விண்ணப்பியுங்கள்

1. நீங்கள் எங்கிருந்தும் சந்தாதாரர் ஆகலாம்.
2. தபால் அல்லது வேறு யார் மூலமோ ஏலம் கேட்கலாம்.
3. சேமிப்பாகக் கருதுகிறவர்களுக்கு குறைந்தபட்ச வட்டி உத்திரவாதம் செய்யப்படுகிறது.

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| C | 100 | 3000 |
| D | 50 | 1500 |
| E | 25 | 750 |
| F | 20 | 600 |
| G | 15 | 450 |
| H | 10 | 300 |

எமது விதிகளும் நிபந்தனைகளும் கோரிக்கையின் பேரில் தெளிவான விலாசங்களுக்கு அனுப்பப்படும்.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்.



உபாத்தியாயர் :—திருவள்ளுவர் காலம் எப்போது? (பையன்கள் எல்லோரும் மௌனமாயிருக்கவே) உங்கள் நிருக் குறளைப் பாருங்கள்.

ஒரு மாணவன் :—"திருவள்ளுவர் 2000" என்று போட்டிருக்கிறது, ஸார்.

உபாத்தியாயர் :— உனக்கு அது என் தெரியவில்லை?

மாணவன் :—அது அவர் டெலிபோன் நம்பர் என்று நினைத்தேன், ஸார்!

மறுத்தீர்கள். உங்கள் அன்பை, இழந்து வாழ நான் பிரியப்படவில்லை. நான் இருப்பது உங்க ளுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே உங்களுக்குப் பாரமாக இனியும் இருக்க நான் எண்ணவில்லை. நான் இனி மீளா வழி செல்கிறேன்.

இத்தனை நாள் என்னை அன்புடன் நேசித்ததற்கு நான் நன்றி கூறுகிறேன். —மைதிலி.

*   *   *

இந்த நீண்ட கடிதத்தைப் படித்ததும் ஜகன் நாதன் பெருமூச்சு விட்டான். அதைத் தொடர்ந்து திகிலும், பரபரப்பும் கொண்டான். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான்.

அவளுடைய கடிதத்தைப் பற்றி நினைக்க நினைக்க அவனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. அவள் எழுதியிருந்த ஒவ்வொரு வார்த்தையும் ஆணித்தரமான உண்மை என்பதை அவன் நன்றாக உணர்ந்து கொண்டான்.

மைதிலி எத்தனை அன்புடன் பணிவிடைகளைச் செய்து வந்தாள்! ஒரு நாள் தவறாமல் எனக்காக வாயிற்படியில் எத்தனை நேரமானாலும் காத்திருப் பாளே. அவள் அன்பு ஒன்றுதானே அவளை எனக்கே முழுதும் அர்ப்பணிக்கச் செய்தது! அப் பேர்ப்பட்ட உத்தமியை வெறுத்தேனே! அவள் மனம் எவ்வளவு தூரம் புண்பட்டுப் போயிருந்தால் தற்கொலை செய்து கொள்ளத் துணிந்திருப்பாள்!

"மைதிலி, உன் மீது கொண்ட வெறுப்பு மாறாதது என்று எண்ணிக் கொண்டு விபரீதமான செய்கை செய்து விட்டாயே. உன் கடிதம் என் கண்ணைத் திறந்து விட்டது. வரமாட்டாயா!" என்று கதறினான்; புலம்பினான்.

5

மைதிலி மறைந்து போய் மூன்று வருடங்க ளாகி விட்டன. ஜகந்நாதன் மைதிலியின் ஞாபக மாகவே இருந்து வந்தான். அவளை அவனால் மறக்க முடியவில்லை. அவன் நண்பர்கள் எல் லோரும் அவன் மைதிலியின் மேல் கொண்டிருந்த அன்பைக் கண்டு வியந்தனர். அவர்கள் அவனை மறுமணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தி யதற்கு அவன் செவி சாய்க்கவில்லை.

"என் மைதிலியைப் போல் என் வாழ்க்கையை யாராலும் வளமுறச் செய்ய முடியாது. தயவு செய்து என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்" என்று கூறி மறுத்து விட்டான்.

அவன் தன் செல்வத்தை யெல்லாம் ஏழை களுக்கும், தானதர்மத்துக்கும் தாராளமாகச் செல விட்டான். அவனுடைய தயாள குணமும் தர்ம மும் நாடெங்கும் பரவியது.

**   **   **

அவனைக் கரும்பூர் பெண்கள் பள்ளிக்கூடத் தின் ஆண்டு விழாவுக்குத் தலைமை வகிக்கும்படி கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

பள்ளிக்கூடத்திற்குப் போனபோது தலைமை உபாத்தியாயினி மற்ற உபாத்தியாயினிகளை அறி முகம் செய்து கொண்டு வந்தார். நான்காவதாக, "மிஸஸ். மைதிலி. கணக்கு உபாத்தியாயர்" என்று கூறிக் கேட்டதும் அவன் திடுக்கிட்டான். அவளை நிமிர்ந்து பார்த்தான்.

ஆம், அவள் மைதிலிதான். அவள் தலை குனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள்.

"மைதிலி......!" என்று ஆர்வத்துடனும், ஆச் சரியத்துடனும் கூவி விட்டான் ஜகந்நாதன்.

6

"மைதிலி, நான் எவ்வளவு தவறான காரி யங்களைச் செய்து விட்டேன். உன்னை வெறுத் தேனே பாவி. உன் கடிதம்தான் என் கண்களைத் திறந்தது......உன்னை மறுபடியும் அடைந்தேனே. இந்த மூன்று வருடங்களாக நான் பட்ட பாடு அந்த பகவான்தான் அறிவார். நீ எழுதியிருந்தபடி தற் கொலை செய்து கொண்டு விட்டாய் என்றே நம்பி விட்டேன்" என்றான் ஜகந்நாதன்.

மைதிலி கூறினாள். "உங்கள் அன்பை இழந்த பிறகு இந்த உலகமே பிடிக்கவில்லை. உயிர் வாழவே பிடிக்கவில்லை. ரயிலுக்கு அடியில் விழப் போனேன். யாரோ ஒரு பெரியார் வந்து தடுத்து விட்டார். 'வாழத் தெரியாத கோழைகள்தான் தற்கொலை செய்து கொள்வார்கள். வாழ்க்கையுடன் போராடு வதற்குத்தான் நாம் பிறந்தோம். அதைக் கண்டு பயப்படுவதற்கல்ல' என்று அறிவுரை கூறினார். அதை ஏற்றுக் கொண்டு இந்த ஊர் வந்தேன். பள்ளியில் உபாத்தியாயினியாகக் காலம் தள்ளி வந்தேன். ஆண்டு விழாவுக்கு நீங்கள் தலைமை வகிக்க வருவதை யறிந்ததும் நான் வராமல் இருக்க முயற்சித்தேன். ஆனால் எல்லா காரியங்களுக்கும் என்னையே பொறுப்பாளியாக்கி விட்டதால் முடிய வில்லை. கடைசியில்......" என்று மலர்ந்த முகத்தில் புன்முறுவலுடன் கூறினாள் மைதிலி.

ஜகந்நாதனுக்கு அது சொல்ல முடியாத இன் பத்தை, விவரிக்க முடியாதபடி அளித்தது.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

காலை வேளையில்

# நாள் முழுவதும்




விளையாடிய பின்

# புத்துணர்ச்சி




இரவில்

# அளிக்க...




குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்






ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ணநிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

HBP. 7-X 30 TM

REGD. NO. M 4392
*Registered as a newspapers in Ceylon*



# நாளுக்கு நாள்

## அதிக தெளிவான,

## எழிலோங்கும் சருமம்



ரெக்ஸோனுவிலுள்ள **கேடில்** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்

ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத்தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.






## ரெக்ஸோனு

### கேடில் கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP 107-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.